# நீதியைத்தேடி...

## நீங்களும் நீதிமன்றத்தில் வாதாடலாம்!

## சட்டங்கள் உங்கள் பாக்கெட்டில்

ஆசிரியர் : வாரண்ட் பாலா

சாதனை
திட்டமிடுதல்
குறிக்கோள்
தன்னம்பிக்கை
கிறித்துவ இரத்து சட்டம் 1869
கிறித்துவ திருமண சட்டம் 1872
முகமதியர் இரத்து சட்டம் 1939
இந்து திருமண சட்டம் 1955
சிறப்பு திருமண சட்டம் 1954
குடும்ப நீதி சட்டம் 1984
நுகர்வோர் பாதுகாப்பு விதிகள் 1987
நுகர்வோர் பாதுகாப்பு சட்டம் 1986
தொழில் நல்லுறவு சட்டம் 1947




நியாயம்தான் சட்டம்
அதற்கு தேவையில்லை வக்கீல் பட்டம்



வெளியீடு:
கேர் சொசைட்டி - ஓசூர்

நிதியுதவி:
மத்திய சட்ட அமைச்சகம்

4

# நீதியைத்தேடி...

## நீங்களும் நீதிமன்றத்தில் வாதாடலாம்!

## சட்டங்கள் உங்கள் பாக்கெட்டில்

**நியாயம்தான் சட்டம்!**

**அதற்கு தேவையில்லை வக்கீல் பட்டம்**

நீதிக்குறள்

அதிகாரம்: வழக்கறிஞன்

தன்வழக்கை தானே நன்கறிந்தவன் என்றுணர்ந்து
தனக்குதானே வாதிடுபவனே வழக்கறிஞன்.

அதிகாரம் : (வா, வ)தம்

எவருக்கும் தன்வாதமே தலைச்சிறந்த வாதமாம்
பிறர்வாதம் வாதமன்று வதமாம்.

ஆசிரியர்: வாரண்ட் பாலா

வெளியீடு: கேர் சொசைட்டி

## பாக்கெட்டின் விபரம்


| | |
|---|---|
| தலைப்பு | : நீதியைத்தேடி... நீங்களும் நீதிமன்றத்தில் வாதாடலாம்! சட்டங்கள் உங்கள் பாக்கெட்டில் |
| கருத்து | : உண்மையை பொய்யென்பதும், பொய்யை உண்மையென்பதுமே வக்கீல் தொழில். |
| தத்துவம் | : நியாயந்தான் சட்டம்! அதற்கு தேவையில்லை வக்கீல் பட்டம். |
| ஆசிரியர் | : வாரண்ட் பாலா |
| உரிமை | : பொதுவுடைமை |
| பதிப்புகள் | : முதற்பதிப்பு - செப் 2009 இரண்டாம் பதிப்பு - மார்ச் 2015 |
| படிகள் | : 4000 + 1000 |
| மொழி | : புழங்கு தமிழ் |
| வகை | : வாதிட வழிகாட்டும் சட்ட விழிப்பறிவுணர்வு |
| எழுத்தளவு | : 11 புள்ளிகள் |
| நூல் அளவு | : 3.75 - 6.25" கிரௌன் |
| ஒளி அச்சு | : கேர் கிராபிக்ஸ், ஓசூர். |
| காகிதம் | : வெள்ளை நியூஸ் பிரிண்ட் |
| அச்சிட்டோர் | : பிரகாஷ் ஆப்செட், மதுரை - 1 |
| கட்டுமானம் | : தரமானது |
| பக்கங்கள் | : 208 |
| வெளியீடு | : கேர் சொசைட்டி, 53, ஏரித்தெரு, ஓசூர்- 635109 |
| நன்கொடை | : குறைந்தது ரூ.100 |

நூல், இந்திய சட்டம் மற்றும் நீதி அமைச்சகத்தின் நிதியுதவி மற்றும் ஒப்புதலின்படி, தமிழ்நாடு மற்றும் புதுச்சேரியில் உள்ள பொது நூலகங்கள், சிறைச்சாலைகளுக்கு 2009 ஆம் ஆண்டு நன்கொடையாக வழங்கப்பட்டுள்ளதாகும்.


## ஆய்வறிக்கை

2010-க்குள் அனைவருக்கும் சட்டக்கல்வி என்ற உன்னத நோக்கத்திற்காகவும், புரிதலுக்காகவும் இந்நூல் நான்கு வருட தாமதத்தோடு நான்காவது நூலாக வெளி வருகிறது.

ஒருவர் அறிவாளி என எதைக்கொண்டு தீர்மானிப்பது? "தான் அறிவாளி என்பதோடு தனது அறிவை மற்றவர்களுக்கு விளக்கி, அவர்களுக்கும் விளங்கவைக்கும் திறன் பெற்றவர்களைத்தான் அறிவாளி" என சொல்ல முடியும்.

அப்படியென்றால் "இந்நூலை எழுதிய நான்தான் அறிவாளி நீங்கள் எல்லாம் கிடையாது என்பதல்ல", அர்த்தம். எது ஒன்றையுமே அடிப்படையில் இருந்து கற்பதோடு, அதனை நடைமுறைப்படுத்தும் போதுதான் முழுமையான புரிதலோடு கற்றுணர முடியும். இது கற்றுக் கொடுப்பவர், கற்றுக் கொள்பவர் என்ற இருவருக்குமே சாலப் பொருந்தும்.

இந்த அடிப்படை தத்துவத்தில் இருந்து சட்டத்தை விளக்கிட வேண்டியதே எனது கடமை என்பதை உணர்ந்ததன் விளைவுதான் இந்நூலின் தாமதம்.

எவ்வளவோ சிரமங்களுக்கிடையில் ஆழ்ந்த சிந்தனை, தெளிவு, பொறுப்புணர்வோடு ஒரு நூல் பொறுப்பு மிக்க நூலாசிரியர்களால் படைக்கப்படுகிறது.

ஆனால், பலன் என்று பார்த்தால் முழுமை அடைவதில்லை. காரணம், நூல்களை வாங்கும் வாசகர்களில் பெரும்பாலானோர் அக்கறையோடு படித்து அதன் கருத்துக்கள் பற்றியும் அதற்கு மேலும் சிந்திப்பதில்லை.

ஒரு வாத்தியார், யாரோ எழுதிய பாடப் புத்தகத்தில்

உள்ளதைப் பார்த்துப் பாடம்தான் சொல்லித்தருவார். நடத்திய பாடத்தில் சந்தேகம் கேட்டால் சொல்லுவார்.

ஆனால், **'நானோ ஒன்பது வருட அனுபவ ஆராய்ச்சியில் இவ்விழிப்புணர்வு நூலை எழுதியும் சொல்லியும் கொடுத்து இருக்கிறேன்'.**

இதற்கு மேல், **"நீங்கள் படித்துத் தேர்வு எழுதினால் தான் முதலில் வழக்கிலும், பின் வாழ்க்கையிலும் தேர்ச்சி பெற முடியும்".** நீதிபதிகள் உட்பட சட்டம் தெரியாத பலருக்கும் வாத்தியாராகி பாடம் கற்பிக்க முடியும்.

**'தேடல் இல்லாதவரை விடியல் இல்லை'** என்பது **வெற்றிக்கான சூத்திரம்.** ஒன்பது வருடங்களாக ஆலோசனை கேட்டுக் கொண்டிருப்பவர்களும் உண்டு. ஒரு நூலை மட்டும் படித்து ஆலோசனையே பெறாமல் வாதாடி வெற்றி பெற்ற பின் சாவதற்குள் ஒரு முறையாவது சந்திக்க வேண்டும் என சிந்தித்து அதன்படி சாதித்தவர்களும் உண்டு.

இதற்கு பிறகும் சட்டத்தில் சந்தேகம் என்றால் நாம் எதற்குமே லாயக்கு அற்றவர்கள் என்பதை நீங்களே உணர்ந்து அதற்கு ஏற்றார் போல் உரிமைகளை கோராமல் இருப்பதே நல்லது.

"நீங்கள் என்ன சொல்வது? எனக்குத் தெரியாதா? அல்லது தெரியாததா?" என மீறிச் செயல்பட்ட பலர், **'இருந்ததையும் இழந்தனர்'** என்பதையும் அனுபவத்தில் உணர்ந்து எச்சரிக்கிறேன்.

**2010-க்கு பிறகு நீங்கள் நிச்சயமாக என்னிடம் ஆலோசனை கேட்க இயலாது.** வேறு யாரிடமாவது கேட்டால் அதன் விளைவுகள் விபரீதமாகவும் மாறலாம். எப்படி?

உங்களுக்கு உதவி செய்ய நினைத்தால், **'அறிவைத் தவிர மற்ற விசயங்களில் மட்டும்தான் சாத்தியம்'**

ஒரு மருத்துவரிடம் செல்கிறீர்கள். உங்களின் நோய் என்ன என்பதை கண்டு பிடித்து, நோயின் தன்மைக்கும் வயதுக்கும் ஏற்றார்போல் மருந்து கொடுத்தால் போதும். இதில் மருத்துவருக்கு மட்டும் திறமை இருந்தால் போதும்.

ஆனால், சட்ட ஆலோசனை என்பது அப்படியல்ல. இதற்கு உங்களின் அறிவுத்திறன் எவ்வளவு? நாம் சொல்வதை புரிந்து கொள்ளும் சூழ்நிலையில் இருக்கிறீர்களா? புரிந்து கொண்டதை செயல்படுத்தும் திறன் இருக்கிறதா? இப்படிப்பட்ட போராட்டத்தில் எவ்வளவு நாளைக்கு தாக்கு பிடிப்பீர்கள்? என்பது உட்பட பல்வேறு சங்கதிகளை அலசி ஆராய்ந்து அதற்கேற்றவாறு செயல்பட அல்லது சொல்ல வேண்டும்.

இப்படிச் செய்யாமல், **'எனக்கு இருக்கும் சட்ட அறிவுக்கேற்ப உங்களுக்கு ஆலோசனை சொன்னாலோ அல்லது அந்த ஆலோசனையை நீங்கள் செயல்படுத்த முடியாதபோது, உங்களுக்கு பதிலாக நானே களத்தில் இறங்கினாலோ என்ன ஆகும்?'**

**"நானும் வக்கீல்தான்".** நிச்சயமாக ச(ந)ட்டம் உங்களுக்குத்தான் நட்டம். எப்படி? உங்களை நான்தான் வழி நடத்துகிறேன் என்பதால் உங்களின் அறிவு வளராது. மாறாக, மழுங்கும்.

உங்களால் எதுவும் செய்ய முடியாது என்ற ஆணித்தரமான கருத்தில் உங்களை மதிக்கமாட்டார்கள்.

**ஒருவேளை நீங்கள் அவர்கள் வசம் சிக்கியிருந்தால் அதிகாரத்தை பயன்படுத்தி தண்டித்து விடுவார்கள்.**

இதனை எல்லாம் ஆராய்ச்சி செய்யாமல் உதவி கேட்டும் உதவி செய்கிறேன் என்றும் செந்தமிழ்க்கிழரால் பாதிக்கப்பட்டு, பாதிக்கப்பட்டோர் கழகத்தில் தங்களை அறியாமலே இணைந்தவர்கள் பலர் என்பதை இங்கு வெளிப்படையாக தெரிவிக்க வேண்டியுள்ளது.

இதன் காரணத்தால்தான் மற்றவர்களின் வழக்கில் நான் நேரடியாக தலையிடுவதில்லை. 'தலையிட்ட ஒரு சில சங்கதிகள் அலசி ஆராய்ந்து எடுக்கப்பட்ட முடிவே என்பதால் வெற்றிதானே ஒழிய, தோல்வியே கிடையாது'.

எனவே, இச்சட்ட சங்கதிகளை ஆழ்ந்து படித்து உணர்ந்து இதன் மதிநுட்பமான சங்கதிகளை புரிந்து கொண்டு, அதற்கு மேலும் சிந்தித்தால் மட்டுமே, உங்களால் நியாயத்தில் சாதிக்க முடியும் என்ற எனது இக்கருத்து காலத்தால் அழியாது.

இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ள சட்டம் மற்றும் விதிகள் ஆகியன நாட்டில் உள்ள சாதி, மத, இனங்களைப் போன்றவை. ஒவ்வொரு சாதியும், மதமும், இனமும் மற்ற சாதி, மத, இனங்களில் இருந்து கொள்கை, கோட்பாடு ஆகியவற்றிலிருந்தும் முற்றிலும் மாறுபட்டது என்றாலும் கூட அவைகளின் ஒட்டு மொத்த நோக்கம் அன்பு, அமைதி, இறைநிலை அடைதல் ஆகியனவே.

அதுபோலவேதான் ஒவ்வொரு சட்டமும், விதியும் ஒன்றுக்கு ஒன்று முற்றிலும் அதனதன் தன்மைகளில் வேறுபட்டவைகளாக இருந்தாலும், அவைகளின் மூல நோக்கம், "நியாயம்தான் சட்டம்".

இந்த உள்ளார்ந்த உணர்வின் அடிப்படையில் அவைகளை இணைத்து இந்நூல் தொகுக்கப்பட்டுள்ளது என்பதை நீங்கள் புரிந்து கொள்ளாவிடில் நூலின் கருத்துக்களைப் பயன்படுத்தி நியாயத்தைப் பெற இயலாது.

இந்திய குடிமகன் ஒருவருக்கு அவரின் சமயம் சார்ந்த அடிப்படை உரிமைகள்தான் சட்டங்களாக வரையறை செய்யப்பட்டுள்ளன என்பதால்தான், "நமது நாட்டிற்கு உலகிலேயே மிகப்பெரிய குடியரசு நாடு என்ற பெருமை".

எனவே, சமய நூல்களை படித்து, சமயப் பேச்சாளர் (சமய சூழ்நிலைக்கு தக்கவாறு)ராக மாறி சங்கடங்களை உண்டாக்குவதை விட, "சட்ட' நூல்களைப் படித்தால் கண்ணியத்தோடு, கட்டுப்பாட்டோடு சமத்துவத்தை வலியுறுத்தும் கடமையை ஆற்றினால் உரிமை தானாக தேடி வரும். இதை யாராலும் தடுக்க முடியாது".

'எது ஒன்றிலும் சோதனையில்தான் சாதனையே இருக்கிறது'. சாதனைக்கு 'ே'சாதனையில் உள்ள இரட்டைக்கொம்பை உடைக்க வேண்டும் அவ்வளவுதான்.

இவ்விரட்டைக் கொம்பை உடைக்க, 'சோதனையை (துன்பத்தை) திறமையாக எதிர் கொள்வது மற்றும் எது ஒன்றையும் சோதனை (பகுத்து ஆராய்ச்சி) செய்வது' ஆகிய இரண்டு வழிகள் தான் உண்டு.

இந்த சாதனையும் கூட குறுக்கு வழியில் அல்லாமல் நேர்மையான வழியிலும் தூய்மையான வழியிலும் அடைந்ததாக இருக்க வேண்டும் என்பதனை குறிக்கும் விதமாகத்தான் முன் அட்டையில் கூட "சாதனையை வெண்மை நிறத்தில்" அமைத்துள்ளேன்.

கடந்த மூன்று நூல்களிலும் சட்டத்தில் சாதனை நிகழ்த்தியவர்களின் பெயர், வழக்கு எண், வழக்கு விபரம் ஆகியவற்றைத் தெரிவித்திருந்தேன். இதனைப் பயன்படுத்தி, 'கொள்கையை மறந்து சில வாசகர்கள் வக்கீலை விட மோசமான கொள்ளையில் இறங்கிய காரணத்தால்' வாசகர்களின் சாதனையை தவிர மற்ற விபரங்களைத் தெரிவிக்க விரும்பவில்லை.

சட்டச் சாதனையாளர்கள் தங்களின் துறை சார்ந்த அனுபவங்களை முன் வைத்து சட்ட விழிப்புணர்வு நூல்களை எழுத வேண்டும் என்ற எனது ஆசையை இதுவரை பூர்த்தி செய்ய எவரும் முன்வரவில்லை. எனது ஒத்த கருத்தில் முன்வந்தால், ஒத்துழைப்பை நல்குவேன்.

வக்கீல்கள் கூட தங்களுக்கு எதிராக வரும் அனைத்துச்

சட்ட பிரச்சினைகளையும் தாமே சந்திக்கும் திறன் இல்லாமல் தான், தன்னைவிட சிறந்த வேறு பொய்யர்களை (வக்கீல் களை) வைத்து வழக்கை நடத்துகிறார்கள்.

இதேபோலத்தான் நிதிபதிகளும் பல்வேறு தன்மை உடைய வழக்குகளை விசாரிப்பதிலும் திறன் இல்லாத நபர்களாகவே இருக்கிறார்கள்.

இவர்களிலிருந்து நாம் முற்றிலும் மாறுபட்டு அடிப்படை யான சட்டங்கள் அனைத்திலும் திறமை உடையவர்கள், வழக்குகளை துச்சமென சந்திக்கும் வல்லமை பெற்றவர்கள் என்பதை பறைச் சாற்றத்தான் இந்த 14 சட்ட விதிகளின் அட்டவணை தொகுப்பும், இவைகளை எப்படி கையாள்வது என்ற கொள்கை முழக்க விளக்கமும்.

வழக்கம் போலவே இந்நூலின் கருத்துக்கள் நியாயத்திற்கு அப்பாற்பட்டதாக இருக்காது என்பதை நீதிமன்ற சாசன உறுபு 70-இன் கீழ் உறுதிப்படுத்திக் கொள்கிறேன். அப்படியிருந்தால் நானே தார்மீக பொறுப்பு.

இந்நூலின் கருத்துக்களை நீதிமன்றத்தில் நிலை நிறுத்த முற்படும் போது சட்ட சிக்கல் ஏதும் எழுந்தால், அதைத் தீர்க்கும் பொருட்டு, நீதிமன்ற அழைப்பானை விடுத்தால் எனது ஆராய்ச்சியில் கிடைத்த இக்கருத்தை பதிவு செய்ய, வலியுறுத்த தயாராய் இருக்கிறேன்.

இவ்வுறுதிப்பாட்டை மனதில் கொண்டு உறுதியோடு, இறுதிவரை உங்களுக்கு தேவையான நியாயத்திற்காக போராட வேண்டியது உங்கள் கடமையே!

இந்நூலில் நேரடியாகவும், மறைமுகமாகவும் இடம் பெறுவோர் அனைவருக்கும் இந்நூலின் பெருமைச் சாரும்.

சட்ட விழிப்பறிவுணர்வுக் கடமையில்

வாரண்ட் பாலா

## வெளியீட்டு உரை

நீங்கள் மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த இந்நூல் நமது கைக்கு கிடைத்திருக்கும் இந்நன்னாள் நமது வாழ்வில் ஒரு பொன்னாளாகும்.

ஏனெனில், இப்படிப் பல்வேறு சட்ட விதிகளை ஒரே வரிசையில் ஒருங்கிணைக்கும் முயற்சியை இதுவரை யாரும் எடுத்தில்லை. இனி எடுக்க வேண்டிய அவசியமும் இல்லை.

புகழுக்காக, "நான் அதைச் செய்வேன், இதைச் செய்வேன்," என்ற பலரிடமும் ஆரம்பம்தான் ஆடம்பரமாக இருக்குமே தவிர, அடுத்தநாளே அவர்களின் பாடு அல்லோலப்பட்டு விடும்.

ஆனால், இவரோ "என்ன செய்கிறார்? எதற்காக செய்கிறார்? ஏன் செய்கிறார்?" என யாருக்குமே தெரியாது.

ஆனால், 'தொலைநோக்கு பார்வையில் ஏதாவது ஒன்றைத் திட்டமிட்டு அதைச் செய்து முடித்து விட்டு தான் அதைப்பற்றியே வெளியில் சொல்லுவார். ஏன் முன்னரே சொல்லவில்லை? என்று கேட்டால் செய்து முடித்து விட்டு சொல்வதுதான் தனது கெட்ட பழக்கம் என்பார்.

இப்படித்தான் கடந்த ஆண்டு வெளியிடப்பட்ட சட்ட அறிவுக்களஞ்சியம் நூல் வெளியீட்டு விழாவில் முதல் முறையாக எட்டு வருடமாகச் செயல்படுத்திக் கட்டிக்காத்து வந்த 'நாட்டுக்குப் பத்து, நமக்குப் பத்து' என்ற தனது திட்டத்தை அறிவித்தார்.

அதாவது, சட்டப்படி இந்தியக் குடிமகன் ஒருவரின் சராசரி ஆயுட்காலம் அறுபது ஆண்டுகள். அதில் ஒரு நாளைக்குச் சராசரியாக எட்டு மணி நேரம் தூங்கினால் இருபது வருடங்கள் கணக்கில் இல்லாமல் போய் விடுகின்றன.

ஒன்று முதல் பதினான்கு வரை குழந்தைப்பருவம். ஐம்பத்தி நான்கு முதல் அறுபது வரை முதுமைப் பருவம்.

இவ்விரண்டு பருவங்களிலும் நாம் தன்னிச்சையாக எதையும் செய்ய முடியாமல் பிறரை நம்பியே வாழ வேண்டியிருக்கிறது என்பதால் இந்த இருபது வருடங்களும் கணக்கில் இல்லாமல் போய் விடுகின்றன.

மீதமுள்ள இருபது வருடங்கள்தாம் ஓர் இந்தியனின் வாழ்நாள் உழைப்பு என்றும், இதில் **"நாட்டுக்காகப் பத்து வருடங்கள், நமக்காகப் பத்து வருடங்கள்"** என்பதே இவரின் திட்டம். "இத்திட்டத்தை ஒவ்வொருவரும் கடைப்பிடித்து நாட்டுக்காகக் கடமையாற்ற வேண்டும்" என்கிறார்.

அனைவருக்கும் சட்டக்கல்வி என்ற திட்டத்தை 2000-ஆம் ஆண்டில் கையிலெடுத்து 2010-இல் முடிவுக்குக் கொண்டு வரப்போவதாக தெரிவித்த போதுதான் எங்களுக்கே இவரின் தொலைநோக்குப் பார்வைகளும், திட்டங்களும் புரிந்தன.

இதற்கு நல்லதொரு சான்று தான், **"அடிப்படைக் கல்வியில் சட்டக்கல்வி என்ற மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகத்தின் தற்போதைய காலம் கடந்த நற்சிந்தனை"**. செயலாக்கம்தாம் எப்போதோ..?!

ஆனால், இந்நற்சிந்தனையை பத்து வருடங்களுக்கு முன்பாக தனி நபராக திட்டமிட்டு, அரசின் நிதியுதவி மற்றும் தன்னார்வலர்களின் உதவியோடு சொல், செயல், வாழ்வு என அனைத்திலும் வாக்குறுதியை நிறைவேற்றி வரும் **திரு.வாரண்ட் பாலா** அவர்களின் கடமைக்கு ஈடேது?!

**இன்னும் என்னென்ன திட்டங்கள் இருக்கின்றனவோ! யாருக்குத் தெரியும்?**

**இது போன்றதொரு வாழ்க்கை முறைத் திட்டத்தை இந்தியாவில் மட்டுமல்ல. உலகில் எவருமே யோசித்து இருக்கமாட்டார்கள் என்பது நிச்சயம்.** எழுத்தில் தனக்கென்று ஒரு நடையைப் பேச்சு வழக்கில் உருவாக்கி, படித்தால் தூங்கிவிடும் வாசகர்களை கூட தூங்க விடாமல் கடுமையான தன்மை கொண்ட சட்டத்தைக் கூட மிக மிக எளிமையாக புரியும் விதத்தில் படிக்க வைத்தவர் என்ற தனி முத்திரை இவருக்கு உண்டு.

இவரது எழுத்தை வெளிப்படையாகப் பாராட்டியவர்களில் தமிழகத்தில் தனக்கென்று தனி முத்திரையைப் பதித்திருக்கும் 'தினமணி' நாளிதழின் ஆசிரியர் **திருமிகு கே.வைத்தியநாதன்**, நூலாசிரியரும், பதிப்பாளரும் ஆன **திருமிகு.லேனா தமிழ்வாணன்** மற்றும் மூத்த நகைச்சுவைப் பேச்சாளர் அமரர் **திருமிகு.தென்கச்சி கோ.சாமிநாதன்** ஆகிய அறிஞர் பெருமக்கள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

இவரின் சட்ட ஆராய்ச்சியின் முதல் நூலான குற்ற விசாரணை இந்தி மொழியாக்க நூலை படித்து விட்டு **'இந்நூலைப் படித்து நான் என்ன தெரிந்து கொண்டேன். அதை நீங்களும் படித்துத் தெரிந்து கொள்ளுங்கள்'** என்று மதிப்புரை எழுதித் தருவதாகச் சொன்னவர் எண்பது வயது நிரம்பிய, ஐம்பத்தேழு வருடம் சட்டத்தில் அனுபவம் பெற்ற உச்ச நீதிமன்றத்தின் முன்னாள் தலைமை நீதிபதியான **திருமிகு.எம்.என்.வெங்கடாச்சலாய்யா** அவர்கள்.

முப்பத்திரண்டு முனைவர் பட்டங்களுக்கு வழிகாட்டுதலாக இருந்ததோடு அல்லாமல் தானே முனைவராக இருந்துங்கூட, இவரைத் தனது பேராசிரியராக ஏற்றுக் கொள்வதாக கூறிய **முனைவர் காழியப்பன்** அவர்களைச் சட்ட அறிவுக்களஞ்சியம் நூலில் **'உங்கள் குருவால் உங்களுக்கு பயனா?'** என்ற தலைப்பில் **'யாரும் யாருக்கும் குருவாக இருக்க முடியாது'** என்ற

தனது கருத்தை ஒப்புக் ஏற்றுக் கொள்ள வைத்தவர்.

தன்னைப் பற்றிய புகைப்படமே ஊடகங்களில் வரக்கூடாது என்ற அடிப்படைக் கொள்கையைத் தளர்த்தி, அனைவருக்கும் சட்டக்கல்வி என்ற இலக்கை எட்டுவதற்காக நூற்று எட்டு நாடுகளில் ஒளிபரப்பாகும் ராஜ் தொலைக்காட்சியின் **அகட விகடம்** நிகழ்ச்சியில் பங்கேற்று சட்ட உரிமைகள் குறித்தும், கடமைகள் குறித்தும் வலியுறுத்தி பேசியவர்.

மிகக் குறைந்த கல்வித்தகுதியில் தினமணி நாளிதழில் இரண்டு '**நடுபக்க கட்டுரைகளை**' எழுதியது இவர் ஒருவராகத்தான் இருக்கும்.

எனது எழுத்துக்களால் நான் வெளியுலகிற்கு வந்து விட்டேன் என்பதால் தன்னைப் பற்றிய செய்திக் கட்டுரையை தவிர்த்து அதற்கு பதிலாக தன்னைப் பற்றிய செய்தியை வெளியில் கொண்டு வர முடியாத இரண்டு நபர்களுக்கு ஒதுக்கினால் மிக்க மகிழ்ச்சி அடைவேன் என இவர் கேட்டுக் கொண்டும் கூட இவரின் கடமையுணர்வு மக்களுக்கு சென்றடைய வேண்டும் என்ற ஆழ்ந்த கருத்தில், **"இந்திய இளம் சாதனையாளர்களை பட்டியலிடும் நூலான 'விடிவெள்ளி' நூலில் இவருக்கு மூன்றாமிடம் கொடுக்கப்பட்டுள்ளது"**.

இனி, இப்படியொரு வித்தியாசமான சிந்தனையாளர் நாட்டுக்குக் கிடைப்பது எப்போதோ?!

வழக்கம் போலவே இந்நூலுக்கும் அட்டைப் படத்தைத் தனது பாணியிலேயே, வாசக அன்பர் திரு.பால்ராஜ் அவர்களுடன் இணைந்து உருவாக்கி உள்ளார்.

இதில், இந்நூல் இவரின் நான்காவது நூல் என்பதும், தெளிவில்லாமல் மங்கிய நிலையில் பெரிய அளவில் இருந்த சட்ட நூல்களை வெளிச்சத்திற்குப் படிப்படியாக மிகச் சிறிய அளவிற்குக் கொண்டு வந்துள்ளதையும், இதனை நீங்கள் கருத்தில் எடுத்துக் கொண்டு, நியாயம்தான் சட்டம் என்று தன்னம்பிக்கையில், குறிக்கோளுடன் திட்டமிட்டு சட்டத்தின் துணை கொண்டு படிக்கட்டுகளில் ஏற ஆரம்பித்தால் சாதனைதான் என ஆழ்ந்த சிந்தனையில் நம்பிக்கையை ஊட்டும் விதத்தில் வடிவமைத்திருக்கிறார்.

மகாத்மா காந்தி வக்கீல்களையும், நீதிபதிகளையும் கடுமையாகச் சாடியதோடு அல்லாமல் '**இருபது வருடங்கள் எப்படியெல்லாம் முன்னுதாரணமாக வக்கீல் தொழிலில் சிறப்பாக வாழ்ந்து காட்டினார்**' என்பதை அவரின் சுயசரிதையான சத்திய சோதனையிலிருந்து ஒருங்கிணைத்தும், '**காந்தி வக்கீலாக இருந்த போது எப்படி இருந்தார் என்பதையும் கிடைப்பதற்கு அரிய ஒளிப்படத்தைத் (புகைப்படத்தை) தேர்ந்தெடுத்து பின்பக்க அட்டையில் தொகுத்துள்ளார்.**

**இத்தொகுப்பு, வக்கீல்கள் மற்றும் நீதிபதிகளுக்கு மட்டுமல்ல தன் வழக்கை தானே நடத்தும் வழக்கு நடத்தும் ஒவ்வொருவருக்கும் கூட சாலப் பொருந்தும்.**

இவரின் இக்கடமைக்கு ஏற்றவாறு மத்திய சட்ட அமைச்சகம் நான்காவது முறையாக இந்நூலுக்கும் ரூ-30,000 (முப்பதாயிரம் மட்டும்) நிதியுதவி செய்தது.

**இவரால் எவ்வித பலனும் காணாத அன்பர்கள், வெளிநாடு வாழ் நண்பர்கள், நீதிபதி, வக்கீல் ஆகியோர் கூட சட்ட விழிப்புணர்வில் அக்கறை கொண்டு நன்கொடை அளித்துள்ள நிலையில்** பலனடைந்தோர் பலர் சிறு நிதியான ரூ-100 ஐக் கூடத் தர மனமில்லாமல் **கண்டும் காணாமல் இருந்தது, 'கண்ணிருந்தும்** குருடராய்,

காதிருந்தும் செவிடராய்க் கடமை தவறிய நிலையை எங்களுக்கு உணர்த்தியது'.

"சட்டங்கள் உங்கள் பாக்கெட்டில்" என்று பெயர் கொண்ட இந்நூல் உண்மையில் சட்டைப் பைக்குள் வைத்துக் கொள்ளும் அளவில்தான் வந்திருக்க வேண்டும் என்றாலும் கூட, நூலக விதிகளுக்கு இணங்க இவ்வடிவில் கொண்டு வரப்பட்டுள்ளது.

அடுத்த பதிப்பில் இருந்து வாசகர்களுக்கு சட்டைப் பையடக்க அளவில் கிடைக்கும் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலோடு நீதியைத்தேடி... வரிசையில் முதல் நூலின் "இந்தி மற்றும் கன்னட மொழி பெயர்ப்பு" நூல்கள் வெளியிடப்படுகின்றன என்பதால் அம்மொழியைத் தாய்மொழியாக கொண்ட உங்களின் அன்பர்களுக்கு அறிமுகப்படுத்தி சட்ட அறிவை வளர்த்துக் கொள்ள வழிகாட்டலாமே!

எங்களோடு இணைந்து கடமை செயலாற்ற வாசகர்களான உங்களை அன்போடு அழைக்கிறோம்.

**கேர் சொசைட்டி - ஒசூர்**

## நீதியைத்தேடி... பொதுவுடமை நூல்கள் குறித்து பல்வேறு இதழ்களும் வழங்கிய மதிப்புரைகளில் சில உங்களுக்காக!

தமிழ்நாட்டில் சட்ட நூல்கள் பல தமிழில் வெளியிடப்பட்டிருந்தாலும், அவைகள் சாதாரணமாக எவருக்கும் புரிவதில்லை. இவைகளை புரிந்து கொள்ளும் விதத்தில் முடிந்த அளவு நடைமுறை பேச்சு வழக்கில் சொல்லியிருக்கிறார் நூலாசிரியர் வாரண்ட் பாலா.

இந்நூலில் சட்டம் தெரிந்துகொள்ள வேண்டியதன் அவசியம் என்ன? நமக்குநாமே வாதாடுவதற்கான உரிமை எதன் அடிப்படையில்? இப்படி வாதாடுவதால் ஏற்படும் தீமையில்லாத பயன்கள் என்னென்ன? ஒரு வழக்கை எப்படி கொண்டு சென்று திறமையாக நடத்துவது? ஒருவேளை நம்மீது வழக்கு நடவடிக்கை என வந்தால், எப்படி திறமையாக எதிர்கொள்வது? என்பன போன்றவற்றை சாதாரண மக்களும் எளிமையாக புரிந்து கொள்ளும் விதத்தில் விளக்கி உள்ளார்.

இந்நூலின் தலைப்பே நீதியைத்தேடி... நீங்களும் நீதிமன்றத்தில் வாதாடலாம்! குற்ற விசாரணைகள் என்பதுதான். இதை மய்யக் கருத்தாக வைத்துதான் உங்க வழக்குல நீங்க வக்காலத்து போடணுமா? 'சட்டம் கட்டாயம் தெரிஞ்சிக்கணும்', 'நீதிமன்றம் எப்படி இருக்கும்?', 'விசாரணை நீதிமன்றமும், மேல் முறையீட்டு நீதிமன்றமும்', 'அதிகபட்ச தண்டனை விதிக்கும் அதிகாரம் எவ்வளவு?', காவல்துறைப் பற்றி தெரிந்து கொள்ளுங்கள்', 'காவல் நிலையத்தில் வழக்கு பதிவு செய்வது எப்படி?' என 71 அத்தியாயங்களாகப் பிரித்து எளிமையான வகையில் விளக்கியுள்ளார், ஆசிரியர்.

உங்கள் வழக்கில் நீங்களே வாதாடுவது என்பது இந்திய அரசமைப்பு உங்களுக்கு வழங்கியுள்ள அடிப்படை உரிமையாகும். அடிப்படை உரிமை என்பது, எதையும் யாரிடமும் கேட்காமல் நமக்குநாமே எடுத்துக் கொள்வதாகும். உதாரணத்திற்கு உங்கள்

அப்பா, அம்மாவோடு பேச வேண்டும் எனக் கருதுகிறீர்கள் அல்லது இந்த புத்தகத்தை படிக்க வேண்டும் என நினைக்கிறீர்கள். உங்கள் எண்ணப்படி அப்பா, அம்மாவோடு பேசுகிறீர்கள் அல்லது இந்நூலைப் படித்துக்கொண்டு இருக்கிறீர்கள். இப்படிச் செய்வதற்கு முன்பாக யாரிடமாவது அனுமதி கேட்கிறீர்களா? இல்லைதானே! இதான் உங்களுக்கு வழங்கப்பட்டுள்ள அடிப்படை உரிமை என்பது.

"நீதிமன்றத்தில் முன் அனுமதியோடு ஆஜராகி வாதிடும் ஒவ்வொரு நபரும் வக்கீல்தான். முன் அனுமதி என்பதை வேறு ஒருவருக்காக நீங்கள் ஆஜராகும் போதுதான் வாங்க வேண்டும். நமக்குநாமே வாதாடும் போது தேவையில்லை. ஏன் என்றால், நமக்கு நாமே வாதாடுவது என்பது இந்திய சாசன கோட்பாடு 19(1)(அ) இன்படி, பேச்சு உரிமை, எழுத்து உரிமை, கருத்து உரிமை என்பதன் கீழான அடிப்படை உரிமை" என்று நம்முடைய வழக்கில் நாமே வாதாடு வதற்கு உள்ள உரிமையை குறிப்பிடுகிறார்.

நீதிமன்றத்தில் தாக்கல் செய்வதற்கு மனுக்களின் மாதிரி படிவங்கள், அரசு அதிகாரிகளிடம் விளக்கம் கோரும் அறிவிப்பு, நினைவூட்டு மாதிரி படிவங்கள், நீதிமன்றங்களில் நகல் கோரும் மனுக்களின் மாதிரி படிவங்கள், பொதுநல வழக்கு மனு மாதிரி போன்ற கூடுதல் விபரங்களையும் இறுதிப் பக்கங்களில் அமைத்துள்ளார்.

ஆசிரியருடைய முயற்சி மிகவும் பயனுள்ள முயற்சி. இதற்காக ஆசிரியரைப் பாராட்டுவதுடன் மேலும் சட்ட விழிப்புணர்வு குறித்த புத்தகங்களை எழுத வேண்டும் என்கிற விருப்பத்தையும் தெரிவிக்கிறோம்.

இந்நூல் வெளிவர மத்திய சட்ட அமைச்சகம் உட்பட தன்னார்வ தொண்டு நிறுவனங்கள், தன்னார்வ சட்ட ஆர்வலர்கள் நிதி உதவி செய்தமை முக்கியமாக குறிப்பிட வேண்டிய ஒன்றாகும்.

அனைவருக்கும் சட்டக்கல்வி அவசியம் என்ற அடைப்படையில் எல்லோருக்கும் புரியும்படியாக எழுதப்பட்ட நூல்.

ஒருவரை கைது செய்ய என்னென்ன முறைகள் பின்பற்றப்பட வேண்டும்? சாமானிய மனிதரும் நீதிமன்றத்தில் வாதாட முடியுமா? ஜாமீன் என்றால் என்ன? யாரையெல்லாம் ஜாமீனில் எடுக்கலாம்? யாரை எடுக்கக்கூடாது? என்று பலருக்கும் தெரியாத அடிப்படையான சட்ட விவரங்கள் இந்நூலில் கொடுக்கப்பட்டு உள்ளன. பயனுள்ள நூல்.

நீங்களும் நீதிமன்றத்தில் வாதாடலாம் என்கிற அறைகூவலுடன் "சட்ட அறிவுக்களஞ்சியமாக" இந்நூலை பட்டறிவுடன் படைத்து உள்ளார், வாரண்ட் பாலா. மத்திய சட்ட அமைச்சகமே நிதி உதவி செய்துள்ளது குறிப்பிடத்தக்கது. மேலும், தமிழ்நாடு, பாண்டிச்சேரி நூலகங்கள் சிறைச்சாலைகள் என எங்கும் இலவசமாக வழங்கிட சட்ட அமைச்சகம் நிதி உதவி செய்துள்ளது.

"நமக்காக நாம்தான் பிரச்சனைகளைத் தீர்த்துக் கொள்ள வேண்டுமே யன்றி பிறரை நம்பிப் பயனில்லை" என்ற அனுபவ வெளிச்சத்தில், சாதாரண சட்ட நடைமுறைகளை எளிய தமிழில், உரிய விளக்கங் களோடு சொல்லும் இந்நூலை எல்லோரும் வாங்கிப் படிப்பதும், பாதுகாப்பதும் அவசியம்.

இந்நூலாசிரியரின் நீதியைத்தேடி... வரிசையில் ஏற்கெனவே 'குற்ற விசாரணைகள்', 'பிணை எடுப்பது எப்படி?' என சட்டம் குறித்த இரண்டு நூல்கள் வெளியாகி, பொதுமக்கள் பலரின் வரவேற்பைப் பெற்றன. தவிர, பொதுமக்கள் சட்ட விழிப்புணர்வைப் பெற, இதுபோன்ற தனியார் முயற்சிகளை, மத்திய சட்ட அமைச்சகமும் நிதியுதவி செய்து ஊக்குவிக்கிறது. அந்த வகையில், 'சட்ட அறிவுக் களஞ்சியம்' என்ற இந்த மூன்றாவது நூலையும் ஆசிரியர் எழுதி யுள்ளார்.

இதில் சொல்லப்பட்டுள்ள கருத்துகள் கோர்ட் நடவடிக்கைகள் பற்றி, அனுபவரீதியாக பாமரர்களுக்கும் புரியும் வண்ணம் கூறப்பட்டுள்ளன. சட்டங்கள் எப்படி இயற்றப்படுகின்றன? சட்டத்தில் ஓட்டை என்பதென்ன? வழக்கறிஞர்களின் கடமைகள்

என்னென்ன? குறுக்கு விசாரணை. சாட்சியங்களை சேகரிப்பது எப்படி?... இப்படி சுமார் 155 தலைப்புகளில் கட்டுரை வடிவில் சட்ட அறிவுக் களஞ்சியம் தொகுக்கப்பட்டுள்ளது. மக்களுக்குப் பயனுள்ள நூல்களில் இதுவும் ஒன்று.

சட்டமும், நீதிமன்றமும் மக்களுக்கு தொலைதூரத்தில் உள்ளதோ, அன்னியமானதோ அல்ல; சட்டம் வழங்கியுள்ள உரிமைகளை மக்கள் தாங்களாகவே வாதாடிப் பெறமுடியும் என்பதை விளக்கும் நோக்கத்தில் வெளியிடப்பட்ட நூல்கள்.

மக்களுக்கு குறைந்தபட்ச சட்ட அறிவை உருவாக்கும் விதத்தில் மிக எளிமையாக எழுதப்பட்டுள்ளன. காவல்துறை யையோ, நீதிமன்றத்தையோ கண்டு பயப்படாமலும், சட்டத்திற் குட்பட்டுச் செயல்படவும் சாதாரண மக்களுக்கு உதவும் குறிப்பிடத்தக்க நூல்கள்.

நீதித்துறை என்பது நீதிபெறுவதற்கான இடந்தானா என்ன கேள்வி, இன்று சாமானியன் முதல் உயர்ந்த நிலையில் இருப்போரி டமும் பரவலாக உள்ளது.

ஊழல்கள், இடைத்தரகர்கள், அதிகார துஷ்பிரயோகம், அரசியல் ஊடுருவல் என பல்வேறு வகையான குறுக்கீடுகள் நீதியைப் பெறுவதற்கு முட்டுக்கட்டையாய் உள்ளன. ஆயினும், சனநாய கத்தில் நம்பிக்கையுள்ளோர் நீதித்துறையின் மீது சற்றேனும் நம்பிக்கை வைக்கத்தான் வேண்டியுள்ளது.

நீதி வழங்குவதற்கு அடிப்படைத் தேவையாக அமைவது "சான்று ஆதாரங்கள்" தான். அது சரியாக, முறையாக அமையவில்லை யெனில், நீதிக்கு அநீதி வந்து விடுமென எச்சரிக்கிறார், நூலாசிரியர்.

நீதி, நிர்வாகம், சட்டம், உள்ளிட்ட நிறைய செய்திகளை எல்லோரும் படித்துத் தெரிந்து கொண்டு, நீதியின் பயணத்தில் தன்னுடன் ஒரு சகபயணியாக, சாதாரண மனிதனையும் நகர்த்திச் செல்லப்பயன்படும் நூல் இது.

## அறிவார்ந்த வாசகர்களே...

சட்ட ஆராய்ச்சியாளர் திரு. வாரண்ட் பாலா அவர்களின் ஆக்கங்களான பொதுவுடைமை நூல்கள் மற்றும் குறுந்தகடுகள் அனைத்தையும் கேர் சொசைட்டிக்கு உ(ய)ரிய நன்கொடை செலுத்தி பெற்றுக் கொள்ளலாம்.

நீதியைத்தேடி... நீங்களும் நீதிமன்றத்தில் வாதாடலாம் மற்றும் தன்னாட்சிக்கான கொள்கைச் சாசன வரிசையில், இதுவரையில் வெளி வந்துள்ள வெளியீடுகளின் விவரம், இதோ!

| | | |
|---|---|---|
| 1. | நீதியைத்தேடி... குற்ற விசாரணைகள் | 100 |
| 2. | நீதியைத்தேடி... பிணை எடுப்பது எப்படி? | 60 |
| 3. | நீதியைத்தேடி... சட்ட அறிவுக்களஞ்சியம் | 100 |
| 4. | நீதியைத்தேடி... சட்டங்கள் உங்கள் பாக்கெட்டில் | 100 |
| 5. | நீதியைத்தேடி... சாட்சியங்களைச் சேகரிப்பது எப்படி? | 120 |
| 6. | கடமையைச் செய்! பலன் கிடைக்கும் தன்னாட்சிக்கான கொள்கைச் சாசனம் ஒன்றாம் தொகுதி | 200 |
| 7. | தகவல் பெறும் உரிமைச் சட்டம் - 2005, 2-வது சுதந்திரமா? அரசின் தந்திரமா!! | 50 |
| 8. | நீ வாழ, நீயே வாதாடு (ஒளித்தகடு) | 50 |
| 9. | நீதியா! அநீதியா? நீதிக்குச் சமாதியா!? (காணொலி) | 100 |

(நன்கொடை மாறுதலுக்கு உட்பட்டது. கொரியர் செலவு தனி)

உலாப்பேசிகள் 9842909190, 9150109189, 9842399880.

**மின்னஞ்சல்கள்**

***caresociety.org@gmail.com, warrantbalaw@gmail.com***

வங்கிக் கணக்கு எண்

| | |
|---|---|
| Bank Name | : Indian Bank, Hosur – 635109 |
| IFSC code | : IDIB000H011 |
| Acc Name | : CARE Society |
| Acc Type | : Saving Bank Account |
| Acc Number | : 768307417 |

எங்களது, சட்ட விழிப்பறிவுணர்வுக் கடமைகள், மேன்மேலும் உங்களைத் தொடர, தங்களின் பங்களிப்புகளை கோருகிறோம்.

## செயலாக்கத்திற்காக...



31. சிக்கனமான சிறப்பான சான்று அஞ்சல் 87

# நீதியைத்தேடி...

## நீங்களும் நீதிமன்றத்தில் வாதாடலாம்!

## சட்டங்கள் உங்கள் பாக்கெட்டில்

### கொள்கை வெற்றி

எந்தப் படிப்பும் படிக்காத தனி மனிதர் ஒருவர் அவருடைய பிரச்சினைக்காக அவரே நேரடியாக நீதிமன்றத்தில் வாதாடுவது என்பது அடிப்படை உரிமை என்றும், அதை யாரும் "எக்காரணம் கொண்டும் எந்தச் சூழ்நிலையிலும், எந்தக் காலத்திலும், எந்த நீதிமன்றத்திலும் பறிக்க இயலாது" என்பதை இதற்கு முந்தைய மூன்று நூல்களிலும் சொல்லி உள்ளேன்.

குறிப்பாக, முதல் நூலின் அட்டைப்பட கருத்தில் "நீதிமன்றத்தில் வாதாடுவது அப்பா, அம்மாவிடம் பேசுவது போல்தான்" என்று குறிப்பிட்டு உள்ளேன். "எந்தக் குழந்தையாவது தன் அப்பா, அம்மாவிடம் பேசுவதற்கு யாராவது, எந்த விதத்திலாவது தடை விதிக்க முடியுமா?"

இன்னும் வெளிப்படையாக சொல்லப்போனால், "வழக்கு தரப்பினர்களுக்குத்தான் வாதாட முன்னுரிமை". தரப்பினர்களால் வாதாட இயலாத போது இரண்டாம் பட்சமாகத்தான் வக்கீல்களுக்கு உரிமை என்பதை கூட விளங்கிக் கொள்ள முடியாமல், இன்னும் கூடப் பல பேர் அறிவு வறுமையில் இருக்கத்தான் செய்கிறார்கள்.

19-02-2009 அன்று சென்னை உயர்நீதிமன்றத்தில் நடந்த அடிதடி தொடர்பாக வக்கீல்கள் நீதிமன்றங்களைப் புறக்கணிப்புச் செய்த போது, "பொதுமக்கள் அவர்களாகவே தங்களின் வழக்குகள் மற்றும் உறவுகளின் வழக்குகளில் ஆஜராகி வழக்குகளை நடத்தியது நாடு மட்டுமல்லாமல், உலகமே உணர்ந்து கொண்ட செய்தியாகி விட்டது".

இதில் மேலும் சிறப்புச் செய்தி என்றால், நாம் நீதியைத்தேடி... நூல்களில் குறிப்பிட்டுள்ள, "உயர் நீதிமன்றத்தில் கூட நமது தாய் மொழியிலேயே வாதாடலாம்... சிறையில் உள்ளவர்களுக்கு அவர்களின் உறவினர்களே வக்கீலைப் போல் பிணை மனுத்தாக்கல் செய்யலாம்... நமக்குச் சட்டம் தெரியாவிட்டால் கூடப் பரவாயில்லை, நமது பிரச்சினையை மட்டும் சொன்னால் போதும். நீதிபதிகளுக்குச் சட்டம் தெரியா விட்டாலும் கூடச் சட்டத்தைப் படித்துப் பார்த்துத் தீர்ப்பு எழுத வேண்டும்" என்பன போன்ற பல்வேறு சட்ட ரகசியங்கள் அம்பலமாகி விட்டன.

மொத்தத்தில், "2010-க்குள் அனைவருக்கும் சட்டக் கல்வி என்ற நமது சட்ட விழிப்புணர்வுக் கொள்கைக்கு ஏற்றார்போல், மத்திய மனித வள மேம்பாட்டு அமைச்சகம் அடிப்படைக் கல்வியில் சட்டக்கல்வி என்ற நற்சிந்தனைக்கு வந்துள்ளது".

இதுவே 2009 ஆம் ஆண்டில், நமது அடிப்படைக் கொள்கைக்கும், கடமைக்கும் கிடைத்த நாட்டின் மிகவும் உயரிய விருதான நோபல் பரிசாகும்.

### மகாத்மாவை எப்படி மன்னிப்பது?

"மகாத்மா காந்தி ஒரு வக்கீல் என்றாலும் கூட, வக்கீல்களைப் பற்றியும், நீதிபதிகளைப் பற்றியும் எவ்வளவுக்கு எவ்வளவு உண்மையாக, மிகவும் கீழ்த் தரமாக விமர்சித்து எழுத முடியுமோ அவ்வளவையும்

1909-இல் தனது 40 வயதில் எழுதிய இந்திய சுயராஜ்யம் என்ற நூலின் 11-ஆவது கட்டுரையில் எழுதியுள்ளார்,'' என்பது மிகவும் பாராட்டப்பட, பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய விசயமே.

ஆனாலும் கூட, அவரும் ''பிரச்சினை இப்படி யெல்லாம் இருக்கிறது என்றுதான் சொல்லி இருக்கிறாரே தவிர அதற்கான தீர்வு என்ன என்பதைப் பற்றிச் சிந்திக்கவில்லை''. இது ஏன் என்பது தெரியவில்லை.

''ஆங்கிலேயே ஆட்சியை அகற்ற அகிம்சையே தீர்வு எனத் தேர்ந்தெடுத்து, அதில் வெற்றியும் கண்டவருக்குச் சட்டத்தில் தன் வழக்குக்காக தானே வாதாடுவதுதான் தீர்வு என்பதை ஏன் போதிக்க வில்லை'' என்பது புரியாத புதிராகவே இருக்கிறது.

''ஒருவேளை ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் இதற்கான உரிமை இருந்திருக்காதா?'' என்று ஆங்கிலேய ஆட்சிக் காலமான 1889-ஆம் ஆண்டில், நம் நாட்டில் அமலில் இருந்த குற்ற விசாரணை முறை விதிகளை ஆய்வு செய்த போது விதி 243-இல், ''ஓர் எதிரி கூட தன் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டைத் தானே நேரடியாக நடத்திட உரிமை வழங்கப் பட்டுள்ளது,'' என்பதும் தெரிந்தது.

எது எப்படி இருப்பினும், மகாத்மா மறந்து விட்ட இந்த விசயத்தை இந்திய குடிமக்களாகிய நாம் மன்னிக்க வேண்டிய நிலையில்தான் உள்ளோம். கூடவே, அவர் மறந்து விட்ட சட்டக் கல்வியைக் கட்டாயக் கல்வியாக கொண்டு வருவதை நமது கடமையாகக் கொள்வோம்.

மத்திய மனிதவள மேம்பாட்டுத்துறை சட்டக் கல்வியை பள்ளிக்கல்லூரி அடிப்படைக் கல்வியில் கொண்டு வருவதற்கான முயற்சியில் இறங்கியுள்ளது.



வக்கீல்களின் கொள்ளைக்கூட்டத்தின் கூடாரம் ஆகிய இந்திய வழக்கறிஞர் அவை வழக்கம் போலவே முட்டாள்தனமாக எதிர்ப்பு தெரிவித்து உள்ளது.

எது எப்படி இருப்பினும், ''அடிப்படைக் கல்வியில் சட்டக்கல்வி தேவை என்ற சிந்தனை மத்திய அரசுக்கு உதித்துள்ளதே நமது முயற்சிகளுக்கு கிடைத்த நோபல் பரிசாகும்''.

சமுதாயத்தின் வெற்றியை ஒன்றுக்கும் உதவாத வக்கீல்களால் தடுத்து விட முடியுமா என்ன? நிச்சயமாக முடியவே முடியாது.

சட்டக்கல்வி அடிப்படைக்கல்வியில் வந்தே தீரும். அதற்கான விதையை நாட்டின் பல்வேறு இடங்களில் நாம் விதைத்து விட்டோம் என்பதே உண்மை.

### திறமையில்லாத, பயந்தாங்கொள்ளி அரசு ஊழியர்கள்

பிச்சைக்காரர்கள் கூடத் தன்னம்பிக்கையோடு தினமும் உழைத்துப் பிழைக்கிறார்கள். உழைத்து பிழைக்காதவர்கள் என்று சொன்னால் அது அரசு ஊழியர்கள்தாம். ஆனால், இவர்களோ, 'தாங்கள் வகிப்பது கௌரவ பதவி என்ற மனக்கோட்டையில் வாழ்கிறார்கள்'.

தினமும் உழைத்துப் பிழைக்காமலேயே தேவைகள் நிறைவேறி விடுவதால், கூடுதல் வசதி வாய்ப்புகளுக்காக எப்படியெல்லாம் பிச்சை (லஞ்சம்) எடுக்கலாம் என்ற ஒரு தொழில் திறமையைத் தவிர, மற்ற திறமைகளை எல்லாம் இழந்து விடுகிறார்கள்.

திறமையும், தன்னம்பிக்கையும் இருந்த பல அரசு ஊழியர்கள் பதவியைத் தூக்கி எறிந்து விட்டுப் பல்வேறு

துறைகளில் சாதனையாளர்களாகி உள்ளனர் என்பது வரலாறு.

**"நான் மனது வைத்தால்தான், உனக்கு எல்லாமே கிடைக்கும்"** எனக் கூக்குரலிடும் அரசு ஊழியர்கள் மீது சட்டப்படியான நடவடிக்கை மேற்கொள்ள ஆரம்பித்தால் போதும்.

வெட்கம், மானம், சூடு, சொரணை என்பதைப் பற்றியெல்லாம் கவலைப்படாமல் பாமரன் காலில் கூட விழுந்து தங்களின் பதவியைக் காப்பாற்றிக் கொள்ள முயல்வார்கள்.

இதற்குப் பொதுமக்கள் இடம் கொடுக்காமல் தண்டனை வாங்கித்தருவதில் கண்ணும் கருத்துமாக இருந்து கடமையாற்ற வேண்டும்.

பொதுவாக அரசு ஊழியர்கள், பொது ஊழியர்களை விட மக்களுக்குத்தாம் மனிதத்தன்மை அதிகம். இதனால், மற்றவர்களை மன்னிக்கும் குணமும் அதிகம். இந்த ஒரு காரணத்தால்தான் அதிகாரத்தில் உள்ளவர்கள் அனைவரும் தவறுகள் பல செய்தும் தப்பித்துக் கொண்டு இருக்கிறார்களே ஒழிய அவர்களின் சுய அறிவால் அல்லவே அல்ல.

இதனால்தான், **"அதிகாரம் உள்ளவர்கள் தண்டிப்பது துரதிருஷ்டம். இல்லாதவர்கள் மன்னிப்பது அதிர்ஷ்டம்"** என்ற தத்துவத்தை வெளிப்படுத்தினேன்.

## வேலைவெட்டி இல்லாத சோம்பேறி அரசு ஊழியர்கள்

பொதுவாகவே அரசு ஊழியர்களுக்கும், பொது ஊழியர்களுக்கும் நாட்டில் தாம் மட்டுந்தாம் வேலை செய்வதாகவும், மற்றவர்கள் எல்லாம் வேலை வெட்டி இல்லாதவர்கள் என்றும், எண்ணிக் கொண்டு



எதற்கெடுத்தாலும் **'இன்று போய் நாளை வா'** என உங்களின் பொன்னான நேரத்தை வீணாக்குகின்றார்கள்.

இப்படி நடக்கும் போது, **"திறமையும், தகுதியும் இல்லாததால்தான் இந்த வேலையில் சேர்ந்து மக்களின் வரிப்பணத்தைச் சம்பளம் என்ற பெயரில் பிச்சை எடுத்துக் கொண்டு இருக்கிறீர்கள்; கடமையைச் செய்! இருப்பதை காப்பாற்றிக் கொள்!!,"** எனத் தைரியமாகச் சொல்லுங்கள்.

பிச்சை போடாமலும், எதிர் தரப்பில் பிச்சை பெற்றுக்கொண்டு சட்டப்படி கடமை ஆற்றாமலும் இருந்தால், எப்படி உங்கள் காரியத்தைச் சாதித்து கொள்வது என்பதைப் சட்ட அறிவுக்களஞ்சியத்தில் அறிந்து கொள்ளுங்கள். மேலும், இவர்களின் கடமையைச் செவ்வனே செய்ய வைக்க அரசு அலுவலக நடைமுறை நூல் உங்களுக்கு மிகவும் கை கொடுக்கும்.

## பிச்சை போட்டால் பிச்சை எடுக்க வேண்டியிருக்கும்!

**"அரசு ஊழியர்களுக்கு போட வேண்டிய பிச்சை போட்டால் போதும், எதை வேண்டுமானாலும் நமக்காக செய்து தருவார்கள்,"** என்ற எண்ணம் பலரிடமும் இருந்து வருகிறது.

தங்களின் உரிமையைப் பெறுவதற்காக ஒரு சிலர் பிச்சை போடுகிறார்கள் என்றால், இல்லாத உரிமையைப் பெறுதவற்கு அல்லது அடுத்தவனை எப்படியும் வெற்றி கொள்ள வேண்டும் என்பதற்காகப் பிச்சை போட்டுக் காரியம் சாதிப்பவர்களும் உண்டு.

இப்படி இல்லாத உரிமைக்காக பிச்சை போட்டுக் காரியம் சாதிப்பவர்கள், **"இப்படி தவறான முறையில்**

பெறப்பட்ட உரிமை அற்பத்தனமானது, அப்போதைக்கு மட்டுமே சாத்தியமானது, மாறாக, என்றும் நிலைக்கத் தக்கதல்ல" என்பவைகளை நன்றாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். அப்படி இல்லாதவர்களின் நிலை நிச்சயம் ஒரு நாள் பிச்சை எடுக்க வேண்டி வரும்.

## சம்பந்தம் பேசாமல் சட்டம் பேசுங்கள்

சாதாரணமாக அரசு ஊழியர்களிடம் நியாயமாக ஏதாவது கேட்டாலோ அல்லது பேசினாலோ, சட்டம் என்னமோ அவங்க பாட்டன் சொத்து மாதிரியும், அதில் நீங்கள் பங்கு கேட்பது போலவும் நினைத்துக் கொண்டு, 'என்ன, சட்டம் பேசுறியா நீ?' என்பார்கள்.

இப்படி ஏதாவதொரு வாய்ப்புக் கிடைத்தால், "சட்டப்படி கடமையாற்ற வேண்டிய உன்கிட்ட சட்டம் பேசாம சம்பந்தமா பேச முடியும்!" என திருப்பி கேட்டால் பல் பிடுங்கின பாம்பாக அடங்கி விடுவார்கள்.

ஒரு சில சமயங்களில் "கடமையாற்ற விடாமல் தடுத்தாய்" எனக் காவல் நிலையத்தில் புகார் செய்வேன் என மிரட்டுவார்கள். அப்படி ஏதும் நடந்தால், "சும்மா இந்த மிரட்டல் எல்லாம் வேண்டாம். இந்திய தண்டனைச் சட்டம் 1860 இன் பிரிவு 186 இன்படி என்னைக் கடமையாற்ற விடாமல் தடுத்தான் எனப் புகார் உடனே கொடுங்கள்; நானே வேண்டுமானாலும் எழுதித் தருகிறேன்" என்று சொன்னால் பெட்டிப்பாம்பாக அடங்கி விடுவார்கள்.

நீங்க இப்படியெல்லாம் சட்டப்படி விபரமாகப் பேசினாலே நீங்க, வக்கீலாகத்தான் இருப்பீங்க என முட்டாள்தனமாக நினைப்பார்கள்.

அதுவும் உண்மை தானே? முட்டாளைப்பற்றி முட்டாள்கள்தானே யோசிக்க முடியும்!



"நீ யாரு? வக்கீலா? அதுவா? இதுவா?" எனக் கேள்வி கேட்டால், "வக்கீலுக்கு மட்டும்தான் சட்டம் தெரிய வேண்டும் என எந்த சட்டம் சொல்கிறது? இப்படி கேள்வி கேட்பதற்கு உங்களுக்கு என்ன சட்ட அதிகாரம் இருக்கிறது?" சட்டத்தை காட்டுங்கள். படித்துப் பார்த்து விட்டுச் சரியாக இருந்தால் பதில் சொல்கிறேன் என்று சொல்லுங்கள். "கப்சிப்" ஆகி விடுவார்கள்.

## பிரச்சினைகளுக்கு அடிப்படைக் காரணம் அரசு ஊழியர்களே!

நாட்டில் நடக்கும் பிரச்சினைகளில் 90% பிரச்சினைகள் அரசு ஊழியர்களின் கடமை தவறிய செயல்களாலேயே வருகின்றன. இவர்கள் மட்டும் தங்களின் கடமையைச் செவ்வனே செய்து விட்டால் அல்ல அல்ல, நாம் இவர்களைச் செய்ய வைத்து விட்டால் பிரச்சினைகளே இல்லாமல் போய் விடும்.

சரி! இவர்களை எப்படிக் கடமையைச் செவ்வனே செய்ய வைப்பது?

அரசு ஊழியர்கள் தங்களின் சட்டக் கடமையை எந்த விதத்திலாவது நிறைவேற்றாமல் போய் அதனால் இழப்பீடு ஏதும் ஏற்பட்டால், அதற்காகத் தனியாக அரசு ஊழியர்கள் மீது வழக்குத் தொடுக்காமல், பாதிப்பை ஏற்படுத்தியவர் மீது வழக்குத் தொடர்ந்து, "அவ்வழக்கில் கடமையைச் செய்யாத அரசு ஊழியரை முக்கிய சாட்சியாக அழைத்து விசாரணை செய்து, அவரின் கடமை தவறிய செயலை மெய்ப்பித்து, பின் வழக்கில் சேர்த்து தனக்கு ஏற்பட்ட இழப்பீடுக்காக நிவாரணம் கோரலாம் அல்லது கடமையைச் செய்யாததால் நடந்த குற்றத்துக்கு ஏற்ப தண்டனை வழங்க வழி வகுக்கலாம்".

## அடிப்படை சட்டக்கல்வியின் அவசியம்

ஒவ்வொரு குடிமகனுக்கும் சட்டக்கல்வி என்பது மிகமிக அவசியம். குடிமகன்கள் செலுத்தும் வரிப்பணத்தில் கூலி வாங்கிப் பிழைப்பு நடத்தும் அரசு ஊழியர்கள் தங்களின் எஜமானர்கள் ஆகிய குடிமக்களை மதிக்காமல் மிதிக்கவே செய்கிறார்கள்.

இதற்கு அடிப்படைக் காரணம் அவர்களுக்கு தெரிந்த கொஞ்ச நஞ்ச சட்டம் சம்பந்தமான விசயங்கள் குடிமக்களுக்குத் தெரியாததுதான்.

**சிறந்த அரசானது குடிமக்களுக்குச் சட்டக் கல்வியை வழங்குவதன் மூலம், அரசு ஊழியர்களுக்கு நிகரான அல்லது கூடுதலான சட்ட அறிவை குடிமக்களும் பெறும் போதுதான் அரசு ஊழியர்கள் மக்களை மதித்து நடப்பார்கள். தங்களின் சட்டக் கடமையைச் செவ்வனே செய்வார்கள்.** பல்வேறு பிரச்சினைகள் உடனுக்குடன் முடிவுக்கு வரும். அல்ல அல்ல வந்து விட்டது.

அரசாங்கம் கொண்டு வரவில்லை என்பதற்காக மக்கள் சட்ட அறிவை வளர்த்துக் கொள்ளாமல் இருந்தால் எப்படி? அதற்கான கடமையை ஆற்றாமல் இருந்தால் எப்படி? முயன்றால் முடியாதது எதுவும் இல்லையே! என்ற வகையில் இதற்காக திட்டமிட்டு பத்து வருடங்கள் கடமையாற்ற தொடங்கியதன் விளைவு, "மத்திய அரசே தற்போது இந்நற்சிந்தனைக்கு வந்து விட்டதே!"

ஆனால் திட்டம் எப்போது செயலாக்கம் பெறும் என்பதுதான் குடிமகன் ஒவ்வொருவரின் எதிர்பார்ப்பு. இது ஒரு புறம் இருக்க, தங்களுக்கான சட்ட அறிவைத் தாங்களே பெற்றுக் கொள்ள முன்வர வேண்டும்.



## வக்கீல்கள் வடிகட்டின முட்டாள்களே!

நம்நாட்டில் "தான்தான் அதிபுத்திசாலி என்கிற நினைப்பு சட்டத்தைக் கையாள்பவரிடம் ரொம்பவே அதிகம். அதிலும், **"பட்டத்தைப் பெற்று விட்டதாலேயே சட்டத்தைக் கரைத்துக் குடித்த நினைப்பில் நம்மை விடப் புத்திசாலி யாரும் இல்லை, என்பது வக்கீல்கள் மற்றும் நீதிபதிகளின் நினைப்பு".**

**"தான்மட்டும் இல்லை என்றால் எதுவுமே நடக்காது என்பவர்களின் நினைப்பு அவர்களின் பிழைப்பைக் கெடுக்கும்"** என்று பழமொழி சொல்லுவார்கள்.

வக்கீல்கள் மற்றும் நீதிபதிகளைப் பொறுத்த வரை இது நூற்றுக்கு நூறு சரியே. காரணம் நமது சட்ட விழிப்புணர்வுக் கொள்கைக்கு அடிப்படையில் வித்திட்டவர்கள் இவர்கள்தாமே!?

விருதுநகர் மாவட்டம், அருப்புக்கோட்டை உரிமையியல் நீதிமன்றத்தில் செந்தமிழ்க்கிழார் என்பவருக்கு எதிராக சட்டத்துக்கு புறம்பாக ஒரு வக்கீல் தவறு செய்து, வசமாக மாட்டிக்கொள்ள செந்தமிழ்க் கிழாரோ சட்ட விபரம் தெரியாமல் பத்திரிகையில் எழுத, கோபம் கொண்ட வக்கீல்கள் காவல் நிலையத்தில் புகார் கொடுத்து செந்தமிழ்க் கிழாரைச் சிறைக்கு அனுப்புகிறார்கள்.

மேலும், **"அவருக்காக எந்த வக்கீலும் வாதாடக் கூடாது"** என்று தீர்மானமும் நிறைவேற்றினர். செந்தமிழ்க் கிழார் வெளியூரிலிருந்து ஒரு வக்கீலைப் பிடித்து வர, அதற்கும் வக்கீல்கள் தகராறு செய்ய எப்படியோ படாதபாடுபட்டுப் பிணையிலும் வந்து விடுகிறார்.

**"உங்களுக்காக வாதாட வக்கீல்கள் யாரும் வர மாட்டார்கள். என்ன செய்யப் போகிறீர்கள்?"** என

வழக்கு விசாரணையில் நீதிபதி கேட்க, செந்தமிழ்க் கிழாரோ, வேற என்ன பண்றது? நானே பேசுகிறேன் என்று எதார்த்தமாகச் சொல்ல, நீதிபதியும் தலையாட்டி விட, இவரோ அடிப்படையே தெரியாமல் பேசி எப்படியோ விடுதலையும் ஆகி விட்டார்.

இப்படி காக்காய் உட்கார பனம்பழம் விழுந்த கதையாக **'நீங்களும் கோர்ட்டில் வாதாடலாம்!'** என்ற நூலையும் எழுதி விட்டார்.

முக்கியமாக, "எதன் அடிப்படையில் தனக்காகத் தானே வாதாட முடியும்? அப்படி வாதாட என்ன சட்டத்தகுதி இருக்கிறது? நாமே வாதாடுவதால் என்ன லாபம் இருக்கிறது? என்பன போன்ற அடிப்படை விபரங்களே இல்லாததால் நான் பலமுறை அந்நூலைப் படித்தும் கூட ஒன்றுமே புரியவில்லை".

இதனால் சட்டத்தை முழுமையாக ஆராய்ச்சி செய்து, புலப்படாத பல சட்ட சங்கதிகளை, "பாமரன் முதல் படித்தவர்கள் வரை அனைவருக்கும் புலப்படுத்த வேண்டும்" என்ற கொள்கை நோக்கில் களமிறங்கியதன் விளைவுதான் தற்போதைய எனது நிலை.

உண்மையில், **"வக்கீல்கள் புத்திசாலிகளாக இருந்திருந்தால் என்ன செய்திருக்க வேண்டும்? வழக்கு போட்டதோடு, வாதாடி தண்டனை அல்லவா வாங்கித் தந்திருக்க வேண்டும்".**

அதை விட்டுட்டு வழக்குப் போட்டு, வாதாடக் கூடாது எனத் தீர்மானம் போட்டது, **"நமக்கு பழம் நழுவி பாலில் விழுந்த கதையாகி விட்டது".** வக்கீல்கள் சுத்தமாகவே வாதாட முடியாது என்பதை ஆராய்ச்சி செய்யும் அளவிற்கு நம்மை உட்படுத்தி தம் தலைகளில் தாமே மண்ணை வாரிப் போட்டுக் கொண்ட வக்கீல்கள் வடிகட்டின முட்டாள்களே!



## "சட்டங்கள் உங்கள் பாக்கெட்டில்" எப்படிச் ச(ா)த்தியம்?

**"2010-க்குள் அனைவருக்கும் சட்டக்கல்வி"** என்ற கொள்கைக்காக இந்நூலை நான்கு வருடங்களுக்கு முன்பே வெளிக்கொண்டு வந்திருக்க வேண்டும். ஆனால், அடிச்சுவடியில் இருந்து படிப்படியாகச் சொல்லிக் கொடுத்தால்தானே எளிதில் நன்கு புரிய வைக்க முடியும்!

ஒருவர் தான் அறிவாளியாக இருப்பது முக்கியமல்ல. தனது அறிவுத்திறமையை அடுத்தவருக்கு எடுத்துரைத்துப் புரிய வைக்கும் திறன் பெற்று இருக்கிறாரா? என்பதே முக்கியம். இத்திறனை நாம் பெறுவதற்கான கால அவகாசமே நான்கு ஆண்டுகள் என்றால் மிகையல்ல.

ஆம்! நீதியைத்தேடி... வரிசையில் முதல் மூன்று நூல்களான குற்ற விசாரணைகள், பிணை (ஜாமீன்) எடுப்பது எப்படி?, சட்ட அறிவுக்களஞ்சியம் ஆகிய நூல்களைப் படித்து அதன் சங்கதிகளை மிகவும் உள்ளார்ந்த முறையில் உள் வாங்கியிருந்தால் மட்டுமே, இந்நூலை எளிதாகப் பயன்படுத்த முடியும்.

எளிதாகப் புரியும்படி சொன்னால், **"ஒரு பழ விதையையும், ஒரு கப் பழரசத்தையும் உங்களிடம் கொடுத்து விதையில் இருந்து எடுத்த பழரசம் என்று குழந்தையிடம் சொன்னால் ஆச்சரியப்படாமல் இருக்குமா?"** அது போலதான்.

சட்டம் என்பது விதை. எப்படிப் பழரசத்துக்கு விதை மூலப்பொருளோ, அதேபோல சட்டம்தான் இந்நூலுக்கு மூலப்பொருள். ஆனால், விதையை விதைத்து, தண்ணீர் ஊற்றிச் செடியாக்கி, மரமாக்கி, பூப் பூத்து, காய் காய்த்து, கனியாகிப் பின் அது பிழியப்பட்டு கனிச்சாறாகக் கொடுக்கப்படுகிறது அல்லவா?

அதுபோலத்தான் இந்த நூல்!

நீங்கள் பார்க்காத பல நிலைகளைக் கடந்து, தற்போது தங்கள் கைகளில் தஞ்சமடைந்துள்ளது. எனவே, **"சட்டம் என்ற இந்த விதைதான் இந்தக் கனிச்சாறாக வந்துள்ளதா?"** என்பதைச் சரிபார்ப்பது, தன்னாய்வு செய்து கொள்வதெல்லாம் உங்களின் அக்கறையையும், ஆர்வத்தையும், பொறுப்பையும் பொறுத்தது.

கனிச்சாற்றைக் கூட அப்படியே குடிக்க முடியாததால், சுவைக்காக எப்படிக் கூடுதலாக மூலப்பொருட்கள் கலவைகளாக சேர்க்கப்படுமோ, அதுபோலவே இதிலும் பல விதமான மூலப்பொருட்கள் கலவைகளாக சேர்க்கப் பட்டுள்ளன என்பதையெல்லாம் நன்றாக விளங்கிக் கொள்ள வேண்டும்.

அப்போதுதான் இந்நூலில் உள்ள சங்கதிகளை விளங்காத நீதிபதிகளுக்கு விளங்க வைத்து **"நியாயம் தான் சட்டம்"** என்பதை உணர்த்தி நீதி பெற முடியும்.

## அத்தியாயத்தை தொடங்கும் முன்...

முன்பு சொன்னது போலவே இதில் இடம் பெற்றுள்ள அட்டவணை அத்தியாயம் ஒவ்வொன்றும் சுவைக்காகப் பல கலவைகள் கலந்த பழச்சாறு என்பதை விட, உடல் நலத்துக்கு எப்படி அறுசுவையும் முக்கியமோ அது போலவே **சட்டம் - நியாயம், உரிமை - கடமை, குற்றம் - பிரச்சினை** ஆகியனவற்றை மையக்கருத்தாக, கருவாகக் கொண்டு 14 சட்ட விதிகளை அட்டவணையில் தொகுத்துள்ளேன். அத்தொகுப்புகளாவன:



1. இந்தியச் சாசனம், 1950 = இந்திய அரசமைப்பு, 1950

2. நீதிமன்றச் சாசனம், 1872 = இந்திய சாட்சிய, சட்டம் 1872

3. குற்ற விதிகள், 1973 = குற்ற விசாரணை முறை விதிகள், 1973

4. உரிமை விதிகள், 1908 = உரிமையியல் விசாரணை முறை விதிகள், 1908

5. தொழில் நல்லுறவு, 1947 = தொழில் தகராறு சட்டம், 1947

6. தொழில் விதிகள், 1958 = தமிழ்நாடு தொழில் தகராறு விதிகள், 1958

7. நுகர்வோர் சட்டம், 1986 = நுகர்வோர் பாதுகாப்பு சட்டம், 1986

8. நுகர்வோர் விதிகள், 1987 = தமிழ்நாடு நுகர்வோர் பாதுகாப்பு விதிகள், 1987

9. குடும்ப நீதிச் சட்டம் 1984 = குடும்ப நீதிமன்றங்கள் சட்டம், 1984

10. உ.வி.மு.வி கட்டளை 32 கூஉ 1 = உரிமையியல் விசாரணை முறை விதிகள் 1908 இன் கட்டளை 32 கூடுதல் உட்சேர்க்கை 1

11. சிறப்புத் திருமணம், 1954 = சிறப்புத் திருமணச் சட்டம், 1954

12. இந்துத் திருமணம், 1955 = இந்துத் திருமண சட்டம், 1955

13. முகமதியர் இரத்து, 1939 = முகமதியர் திருமண இரத்துச் சட்டம், 1939

14. கிறித்துவ இரத்து, 1869 = இந்திய திருமண இரத்து சட்டம், 1869

என்று பொருள் கொள்ள வேண்டும். ஏன்? இப்படி பொருள் கொள்ள வேண்டும் என்பதற்கான விளக்கத்தைச் சட்ட அறிவுக்களஞ்சியத்தில் சொல்லியுள்ளேன்.

இவற்றில் வரிசை எண் 6 மற்றும் 8 ஆகியவற்றைத் தவிர மற்ற அனைத்துமே மத்திய அரசின் சட்டம் அல்லது விதிகள் ஆகும். மத்திய சட்டத்திற்கு முரண்படாமல்தான் மாநிலச் சட்ட விதிகள் இருக்க வேண்டும் என்பதால்தான் மத்திய சட்ட விதிகளையே இங்கு தொகுத்துள்ளேன்.

இதற்கான சிறப்பான காரணங்கள் குறித்து சட்ட அறிவுக்களஞ்சியத்தில் படித்துத் தெளிந்திருப்பீர்கள். மாநிலச் சட்ட விதி அந்தந்த மாநிலப் பகுதிக்கு மட்டுமே செல்லத்தக்கது. ஆனால், மத்திய சட்ட விதி இந்தியாவின் எந்தப் பகுதிக்கும் செல்லத்தக்கது. விருப்பம் உள்ளவர்கள் மாநில விதிகளையும் படித்துக் கொள்ளலாம்.

எச்சரிக்கை: சிறப்புக் கூடுதல் தகவலாக, மத்திய விதிகளை மத்திய அரசே உருவாக்குவது போல, மாநில அரசு மாநில விதிகளை உருவாக்குவதில்லை. மாறாக, மாநில அரசின் அனுமதியுடன், அம்மாநில உயர்நீதிமன்றங்களே மாநில விதிகளை உருவாக்குகின்றன என்பதால், தீர்ப்புகள் எப்படிச் சட்டத்துக்குப் புறம்பாகவும், விதிகளுக்குப் புறம்பாகவும் எழுதப்படுகின்றனவோ அதுபோலத்தான் இவ்விதிகளும் எழுதப்படுகின்றன என்பது எனது கருத்து.

உண்மையாக, மத்திய அரசு இயற்றியுள்ள குற்ற விசாரணை முறை விதிகள் 1973 ஆனது 01-04-1974 முதல் அமுலில் இருந்து வருகிறது.



இதன் விதி 477 இன் கீழ்தான் மாநில அரசின் விதியை இயற்ற சென்னை உயர்நீதிமன்றம் உரிமை பெற்றிருக்கிறது. அப்படியானால், 01-04-1974 க்கு பின்னர்தானே தமிழ்நாடு குற்றவியல் விதிகள் இயற்றப்பட்டு அல்லது மாற்றியமைக்கப் பட்டு அமல்படுத்தப்பட வேண்டும்.

ஆனால், 1939 இல் உருவாக்கப்பட்ட விதிகளையே இதுவரை கையாண்டு வருகிறார்கள். நீதிபதிகளின் மழுங்கிய சிந்தனைத் திறனுக்கு இவை மேலோட்டமான உதாரணங்களே!

எனவே, மாநில விதிகளைப் படித்து விட்டு நீதிபதிகளைப் போல் நீங்களும் குழம்பி விட வேண்டாம்.

## அட்டவணையைப் பற்றி...

சாதி, இன, மத பேதமில்லாமல் இந்திய குடிமகன்(ள்) ஒருவர் தனது வாழ்க்கையில் அடிப்படையில் எதிர்கொள்ள வேண்டியிருக்கும் பதினான்கு சட்ட விதிகளை அட்டவணையாகத் தொகுத்துள்ளேன்.

இவைகளை ஒரே பக்கத்தில் வருமாறு தொகுப்பது சாத்தியமில்லை என்பதால், வலது மற்றும் இடது பக்கங்கள் என இரண்டு பக்கங்களிலும் முறையே ஏழு சட்ட விதிகள் தொகுக்கப்பட்டுள்ளன.

குழப்பம் ஏதும் வராமல் தடுப்பதற்கு வசதியாக, இரு பக்க அட்டவணைக்கும் ஒரே மாதிரியான வரிசை எண்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

இவைகளின் மூலம் ஒரு சட்டச் சங்கதி குறித்துப் பதினான்கு சட்ட விதிகளின் எண்களை ஒரே வரியில் தெரிந்து கொள்ள முடியும். **“சட்டம் தெரியாதவர்கள் கூட, சட்ட ஞானம் உள்ளவர்களுக்கு சந்தேகம் ஏற்படும் போது சட்ட விதிகளைச் குறிப்பிட்டு சொல்ல முடியும்.**

ஆனால், இவர்கள் செயல்பட முடியாது".

நீதிமன்றத்தை அணுகுவதற்கு முன் எடுக்கப்பட வேண்டிய சட்ட நடவடிக்கைகள் முதல் அணுகிய பின் எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் குறித்து ஒவ்வொரு நிலையாக 120 நிலைகள் வரை குறித்த சட்ட விதிகள் அட்டவணையில் தொகுக்கப்பட்டுள்ளன.

இந்தியச் சாசன கோட்பாடு 21-இன்படி, "சட்டப் பூர்வமான விசாரணை முறையில்லாமல் ஒருவரின் உயிரையோ அல்லது உரிமையையோ பறிக்க கூடாது என்று அறிவுருத்துவதாலும் அக்கோட்பாட்டின் அடிப்படையில்தான் மற்ற சட்ட விதிகள் இயற்றப் படுகின்றன என்பதாலும் அதிகபட்ச சட்டச் சங்கதிகளுக்கு இக்கோட்பாடுதான் பொருந்தும்".

கோருவது உரிமை என்றாலும் கூட அதில் கடமை இருப்பதால் இந்திய சாசன கோட்பாடு 51 கூஉ 1-ஆனது அதிகபட்சமான சங்கதிகளுக்கு பொருந்தும்.

இதேபோல, நீதிமன்றச் சாசன உறுப்பு 57(1)-இன்படி, "நாட்டில் அமலில் உள்ள சட்டங்களை நீதிமன்றங்கள் நீதிமுறையில் கவனத்தில் வேண்டும்" என அறிவுறுத்து வதால் அதிகபட்ச சட்ட சங்கதிகளுக்கு இந்த உறுப்பும் சாலப் பொருந்தும்.

அட்டவணையில் தொகுக்கப்பட்டுள்ள பதினான்கு சட்ட விதிகளுக்கும் பிரிவுகள், விதிகள் தனித்தனியாக இருந்தாலும், இல்லா விட்டாலும் கூட இந்திய சாசனத்தில் அல்லது நீதிமன்ற சாசனத்தில் அல்லது இரண்டிலும் இருந்தாலே போதுமானது. இதேபோல, உரிமையியல் சார்ந்த தொழிலாளர், நுகர்வோர் மற்றும் திருமணம் தொடர்பான வழக்குகளுக்கு உரிமையியல் விசாரணை முறை விதிகள் 1908 சாலப் பொருந்தும்.



இந்தியச் சாசன கோட்பாடு 14, 19, 21 ஆகியவைத் தவிர மற்றவைகள் எல்லாம் ஆளுநர், குடியரசுத் தலைவர், உயர்நீதிமன்றம் மற்றும் உச்சநீதிமன்றம் ஆகியவற்றின் தொடர்புடைய சங்கதிகளாகவே இருக்கும்.

தொழிலாளி மற்றும் நுகர்வோர்களின் தேவையைக் கருத்தில் கொண்டு தமிழ்நாடு தொழிலாளர் நல்லுறவு விதிகள் 1958 மற்றும் மத்திய நுகர்வோர் பாதுகாப்பு விதிகள் 1987 அட்டவணையில் சேர்த்துள்ளேன்.

தமிழில் எங்கும் கிடைக்காத தமிழ்நாடு தொழில் நல்லுறவு விதிகள் 1958-ஆனது, "நகல் பிரதியாக தேவைப்படுவோர் கேர் சொசைட்டியில் இருந்து பெற்றுக் கொள்ளலாம்".

மேலும், நமது நூல்களில் குறிப்பிடப்படும் சட்டம் தொடர்பான சிறந்த நூல்களுக்கும் தொடர்பு கொள்ளலாம்.

குற்றவியல் மற்றும் உரிமையில் வழக்கை எதிர்கொள்வோர் அவைகளுக்கு உரிய தமிழ்நாடு விதிகளைப் படித்துக் கொள்வது பயனளிக்கும். இவைகள் தமிழில் கிடைக்கின்றன.

குடும்ப நீதிமன்ற சட்டம் 1984-ஆனதே, குடும்ப நல நீதிமன்றங்களை வழி நடத்தும் சட்டமாக இருக்கிறது. இச்சட்டத்தின் பிரிவு 23-இன்படி, இச்சட்டத்தை செயலாக்கம் செய்யும் பொருட்டு விதிகள் இயற்றப் பட்டதா? என்பது தெரியவில்லை.

இதே நிலைதான், மற்ற நான்கு திருமணம் தொடர் பான சட்டங்களுக்கும். எனினும், உ.வி.மு.வி கட்டளை 32-இன் கூடுதல் உட்சேர்க்கை 1-இன் சங்கதிகளை அனுசரிக்க அறிவுறுத்தப்பட்டுள்ளது என்பதால் குடும்ப நல வழக்குகளைச் சந்திப்பவர்கள் இவ்விதிகள் குறித்துத் தெரிந்து கொள்வதும் அவசியம்.

முகமதிய தம்பதியர்களுக்கு இடையேயான சச்சரவுகள், விவாகரத்துகள் ஆகியவற்றை நீதிமன்றத்தின் மூலம் தீர்த்துக் கொள்வதற்கு சட்டத்தில் இடமிருந்தாலும் கூட, இதனை பெரும்பாலான மக்கள் விரும்புவதில்லை என்பதால் அச்சமுதாயத்தை சார்ந்த மக்களின் சட்ட விதிகள் குறித்து தெளிவானதொரு நூல்கள் எதுவும் வெளி வரவில்லை.

அட்டவணை தொகுப்புகளில் தமிழ்நாடு தொழில் நல்லுறவு விதிகளைத் தவிர மற்ற சட்ட விதிகள் அனைத்தும் மத்திய அரசின் சட்ட விதிகளே என்பதால் இந்நூலை இந்தியா முழுவதும் பயன்படுத்திப் பலனடைய முடியும்.

எது எப்படி இருப்பினும், **“அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள எண்களுக்கான சங்கதிகளை எத்துணைக் கோணத்தில் பார்க்க முடியுமோ அத்துணைக் கோணத்திலும் படித்துப் பார்த்து உணர்ந்தால்தான் பயன்படுத்தி பலனடைய முடியும்”.**

இந்த அட்டவணையானது முழுக்க முழுக்க ஒரு வழக்கு எப்படி மிகச்சரியான முறையில் நடத்தப்பட வேண்டும், வழக்கில் தரப்பினர்கள், சாட்சிகள் மற்றும் நீதிபதிகளின் கடமைகள் என்னென்ன? வழக்கை விரைந்து முடித்து நீதி பெறுவது எப்படி? என்பதற்கான முறையில் வடிவமைக்கப் பட்டு, இதற்கு அத்தியாவசிய தேவையான 120 விதிகளை மட்டுமே ஒருங்கிணைத்து உள்ளேன். இவைகளே உங்களின் பிரதான கடமை மற்றும் உரிமைகளாகட்டும்

இந்த அட்டவணையில் சொல்லப்பட்டுள்ள வழி முறைகளுக்கு மாறாக, வழக்கு நடந்தால் அதற்கு அடுத்தகட்டமாக என்ன நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும் என்பதற்காக உரிய சட்ட விதிகளில் சரிபார்த்துக் கொண்டு செயல்பட வேண்டும்.



## குறியீடுகள் குறித்ததொரு விளக்கம்

| | | |
|---|---|---|
| வி | = | விதி |
| மு | = | முதல் |
| மூ | = | மூடிய |
| அ | = | அல்ல |
| தி | = | திறந்த |
| வா | = | வாரிசு |
| நா | = | நாட்கள் |
| க | = | கட்டளை |
| மா | = | மாதங்கள் |
| ஆ | = | ஆண்டுகள் |
| / | = | இது அல்லது அது |
| - | = | சட்ட விதியில்லை |
| வ | = | வரை (அ) வருடம் |
| தேஇ | = | தேவை இல்லை, |
| கே இ | = | கேட்க இயலாது |
| கூ உ | = | கூடுதல் உட்சேர்க்கை |
| வ இ | = | வரையறை இல்லாதது |
| ச பொ | = | சங்கதியைப் பொறுத்தது |
| தே/தேஇ | = | தேவை / தேவையில்லை, |
| உ / கு | = | உடனே / குறிப்பிட்ட கால அளவில், |
| -> | = | முன்னுள்ள இ.சா (அ) நீ.சா (அ) உ.வி.மு.வி சங்கதிக்கான சட்ட விதியை சூழ்நிலைக்கு ஏற்ப குறிக்கும். |
| <-> | = | முன்னுள்ள இ.சா (அ) நீ.சா (அ) உ.வி.மு.வி மற்றும் குறியீட்டுக்கு அடுத்துள்ள ஒரு சங்கதிக்கான சட்ட விதியை சூழ்நிலைக்கு ஏற்ப குறிக்கும். |

| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | இந்திய சாசனம் 1950 | நீதிமன்ற சாசனம் 1872 | குற்ற விதிகள் 1973 | உரிமை விதிகள் 1908 | தொழில் நல்லுறவு 1947 | தொழில் விதிகள் 1958 | நுகர்வோர் சட்டம் 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| | அத்தியாயம் 1 | | | | | | | |
| | வழக்கு தொடுக்கும் முன் | | | | | | | |
| 1 | முன்னறிவிப்பு அனுப்புதல் | 14, 21 | 101 | தே/தே.இ | க6 வி11 | 9 கூசே 3 | 22 | 28கூ_1 |
| 2 | அறிவிப்பின் நகல் நீதிமன்றத்துக்கு சார்பு | 21, 227 | 40 | தே/தே.இ | 90 | 11(2) | 34 | 28கூ_3 |
| 3 | முன்னறிவிப்புக்கு பதில் / அனுமதி வழங்குதல் | 21 | 106 / 101 | தே/தே.இ | 90 | 11(2) | 34 | --> |
| 4 | பதிலுக்கு பதில் அனுப்புதல் | 21 | 106 / 101 | தே/தே.இ | 90 | 11(2) | 34 | --> |
| 5 | திரும்பிய கடிதத்தை பிரிக்கவே கூடாது | 21 | 16, 93 | --> | --> | --> | --> | --> |
| 6 | கடை நிலை ஊழியர் - குடியரசு தலைவர் | 361(4) | 101 | தே/தே.இ | 80, 80(2) | - | - | - |
| 7 | அஞ்சல் / நேரில் சார்பு / ஒப்புதல் பெறுதல் | 14, 21 | 101 | தேவை | க5வி10,16 | --> | --> | --> |
| | அத்தியாயம் 2 | | | | | | | |
| | வழக்கில் முன்னிலையாகுதல் குறித்து | | | | | | | |
| 8 | தானே நேரடியாக முன்னிலை | 19(1)(1) | 70 | 302(2) | க3 வி1 | 11(3) | --> | 12(1)(1) |
| 9 | பிரதிநிதியாக முன்னிலை | 19(1)(1) | 50 | 2(7) | க3 வி2 | 36(1)/(2) | 46 | 12(1)(4) |
| 10 | சிறப்பான அறிவை பெற்றவர் முன்னிலை | 19(1)(1) | 126 | 2(17) | க1 வி11 | 11(5) | - | 12(1)(4) |
| 11 | மனுதார் பிறமனுதார்களுக்காக முன்னிலை | 19(1)(1) | 18, 58 | 2(7) | க1 வி12 | 36(1) | 46 | 12(1)(3) |
| 12 | எதிர்மனுதார் பிற எதிர்மனுதாருக்கு முன்னிலை | 19(1)(1) | 18, 58 | 2(7) | க1 வி12 | 36(2) | 46 | 13(6) |
| 13 | தொடர்பில்லாத வழக்கில் குறுக்கிடல் / உதவல் | 51கூ_1 | 48, 49 | 37, 299 | க1கூ_8(1) | 11(5) | 49 | - |
| 14 | பொதுநல வழக்கு தொடர்ந்து முன்னிலை | 51கூ_1 | 87 | 190(1)(3) | 91 | 2(9) | - | 12(1)(4) |



| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | நுகர்வோர் விதிகள் 1988 | குடும்ப நீதி சட்டம் 1984 | உ.வி.மு.வி கட்டளை 32கூ_1 | சிறப்பு திருமணம் 1954 | இந்து திருமணம் 1955 | முகமதியர் இரத்து 1939 | கிறித்துவர் இரத்து 1869 |
|---|---|---|---|---|---|---|---|---|
| | அத்தியாயம் 1 | | | | | | | |
| | வழக்கு தொடுக்கும் முன் | | | | | | | |
| 1 | முன்னறிவிப்பு அனுப்புதல் | --> | 16(1) | --> | --> | --> | - | --> |
| 2 | அறிவிப்பின் நகல் நீதிமன்றத்துக்கு சார்பு | --> | 14 | 3(1) | 34(2) | 23(2) | - | 32 |
| 3 | முன்னறிவிப்புக்கு பதில் / அனுமதி வழங்குதல் | --> | 16(1) | 3(1) | 34(2) | 23(2) | - | 32 |
| 4 | பதிலுக்கு பதில் அனுப்புதல் | --> | 16(1) | 3(1) | 34(2) | 23(2) | - | 32 |
| 5 | திரும்பிய கடிதத்தை பிரிக்கவே கூடாது | --> | --> | --> | --> | --> | - | --> |
| 6 | கடை நிலை ஊழியர் - குடியரசு தலைவர் | - | - | - | - | - | - | - |
| 7 | அஞ்சல் / நேரில் / ஒப்புதல் பெறுதல் | --> | --> | --> | --> | --> | - | --> |
| | அத்தியாயம் 2 | | | | | | | |
| | வழக்கில் முன்னிலையாகுதல் குறித்து | | | | | | | |
| 8 | தானே நேரடியாக முன்னிலை | 5 | 10(3) | - | --> | --> | - | --> |
| 9 | பிரதிநிதியாக முன்னிலை | 2(2), 5 | 12 | 4 | - | - | - | 48, 49 |
| 10 | சிறப்பான அறிவை பெற்றவர் முன்னிலை | --> | - | - | - | - | - | - |
| 11 | மனுதார் பிறமனுதார்களுக்காக முன்னிலை | --> | - | - | - | - | - | - |
| 12 | எதிர்மனுதார் பிற எதிர்மனுதாருக்கு முன்னிலை | --> | - | - | - | - | - | - |
| 13 | தொடர்பில்லாத வழக்கில் குறுக்கிடல் / உதவல் | --> | 12 | 4 | 41(2)(3) | --> | - | --> |
| 14 | பொதுநல வழக்கு தொடர்ந்து முன்னிலை | --> | - | - | - | - | - | - |

| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | இந்திய சாசனம் 1950 | நீதிமன்ற சாசனம் 1872 | குற்ற விதிகள் 1973 | உரிமை விதிகள் 1908 | தொழில் நல்லுறவு 1947 | தொழில் விதிகள் 1958 | நுகர்வோர் சட்டம் 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 15 | வக்கீல் வாதாட தடை | 22(1) | 128 | 2(17) | 2(15) | 36(3) | --> | --> |
| 16 | வழக்கில் இருந்து வக்கீலை நீக்குதல் | 19(1)(1) | 57(1) | 2(7) | க3 வி4(2) | 36(3) | --> | --> |
| 17 | வக்கீல் இல்லாமல் வாதாட வலியுறுத்தல் | 19(1)(1) | 57(1) | 2(2) | க3 வி1 | 36(4) | --> | --> |
| | அத்தியாயம் 3 | | | | | | | |
| | முறையீடு / வழக்கு தாக்கல் குறித்தவை | | | | | | | |
| 18 | வாய் மொழியாக முறையீடு | 19(1)(1) | 40 | 2(4) | - | - | - | - |
| 19 | எழுத்து மூலமாக மட்டுமே புகார் | 19(1)(1) | 40 | 2(4) | 26, 90 | ச பொ | 34(1) | 12 |
| 20 | வழக்கு தாக்கல் செய்ய வேண்டிய இடம் | 21 | 40 | 177மு 189வ | 15மு 22வ | ச பொ | 34 | 11 |
| | அத்தியாயம் 4 | | | | | | | |
| | வழக்கு தாக்கலின் போது கடைப்பிடிக்க | | | | | | | |
| 21 | தாய்மொழியில் வழக்கு தாக்கல் | 350 | 57(1) | 272 | 137 | --> | --> | --> |
| 22 | மனுவோடு ஆதார சான்றுகள் தாக்கல் | 21 | 136 | 294 | க7 வி14 | 11(1) | 34(1) | 13(1)(அ) |
| 23 | மனுவோடு சாட்சிகளின் பட்டியல் தாக்கல் | 21 | 136 | 2(7) | க16 வி1 | 11(1) | 34(1) | 13(1)(அ) |
| 24 | குறையை குறிப்பு எழுதி மனுவை திருப்புதல் | 21 | 57(1) | 201(1) | க7 வி10(2) | <--> | 34(5) | --> |
| 25 | குறையை நிவர்த்தி செய்து மீண்டும் தாக்கல் | 21 | 57(1) | 2(7) | க7கூஉ_10-1 | <--> | 34(5) | --> |
| | அத்தியாயம் 5 | | | | | | | |
| | அழைப்பாணை தொடர்பானவை | | | | | | | |
| 26 | மனுதாரே அழைப்பாணை அனுப்புதல் | 21 | 57(1) | - | க5வி9கூஉ_1 | 38(2)(அ) | 34(1) | 28கூஉ_1 |



| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | நுகர்வோர் விதிகள் 1988 | குடும்பநீதி சட்டம் 1984 | உ.வி.மு.வி கட்டளை 32கூஉ_1 | சிறப்பு திருமணம் 1954 | இந்து திருமணம் 1955 | முகமதியர் இரத்து 1939 | கிறிஸ்துவர் இரத்து 1869 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 15 | வக்கீல் வாதாட தடை | --> | 13 | --> | --> | --> | --> | --> |
| 16 | வழக்கில் இருந்து வக்கீலை நீக்குதல் | --> | 13 | --> | --> | --> | --> | --> |
| 17 | வக்கீல் இல்லாமல் வாதாட வலியுறுத்தல் | --> | 10(3) | --> | --> | --> | --> | --> |
| | அத்தியாயம் 3 | | | | | | | |
| | முறையீடு / வழக்கு தாக்கல் குறித்தவை | | | | | | | |
| 18 | வாய் மொழியாக முறையீடு | - | - | - | - | - | - | - |
| 19 | எழுத்து மூலமாக மட்டுமே புகார் | --> | 7(1) | 1(2) | 27(1) | 20(1) | - | 18 |
| 20 | வழக்கு தாக்கல் செய்ய வேண்டிய இடம் | --> | 3(2) | 1 | 31(1) | 19 | - | 23 |
| | அத்தியாயம் 4 | | | | | | | |
| | வழக்கு தாக்கலின் போது கடைப்பிடிக்க | | | | | | | |
| 21 | தாய்மொழியில் வழக்கு தாக்கல் | --> | --> | --> | --> | --> | - | --> |
| 22 | மனுவோடு ஆதார சான்றுகள் தாக்கல் | 5(4) | 14 | 5 | 32(1) | --> | - | --> |
| 23 | மனுவோடு சாட்சிகளின் பட்டியல் தாக்கல் | 5(4) | 14 | 5 | 32(1) | --> | - | --> |
| 24 | குறையை குறிப்பு எழுதி மனுவை திருப்புதல் | --> | --> | --> | --> | --> | - | --> |
| 25 | குறையை நிவர்த்தி செய்து மீண்டும் தாக்கல் | --> | --> | --> | --> | --> | - | --> |
| | அத்தியாயம் 5 | | | | | | | |
| | அழைப்பாணை தொடர்பானவை | | | | | | | |
| 26 | மனுதாரே அழைப்பாணை அனுப்புதல் | --> | --> | --> | --> | --> | --> | --> |

| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | இந்திய சாசனம் 1950 | நீதிமன்ற சாசனம் 1872 | குற்ற விதிகள் 1973 | உரிமை விதிகள் 1908 | தொழில் நல்லுறவு 1947 | தொழில் விதிகள் 1958 | நுகர்வோர் சட்டம் 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 27 | காவலர் / பணியாளர் மூலம் அழைப்பாணை | 21 | 57(1) | 62(1) | க5 வி9 | <-> | 37(5) | 28கூஉ_1 |
| 28 | பதிவு அஞ்சல் மூலம் அழைப்பாணை | 21 | 57(1) | 69 | க5வி19கூஉ_1 | <-> | 37(4) | 28கூஉ_1 |
| 29 | வட்டார நாளிதழ் மூலம் அழைப்பாணை | 21 | 57(1) | 82(2) | க5வி20கூஉ_1 | -> | -> | 28கூஉ_1 |
| 30 | நாளிதழ் அழைப்பாணை குறித்து தகவல் | 51கூஉ_1 | 57(1) | - | க1வி8கூஉ_1 | -> | -> | 28கூஉ_1 |
| 31 | அழைப்பாணையை பெற மறுத்தால் சார்புதான் | 21 | 17 | 65 | க5வி19கூஉ_1 | -> | -> | 28கூஉ_1 |
| 32 | நியமனதாரரிடம் அழைப்பாணை சார்பு | 21 | 18 | 64 | க5 வி12 | -> | -> | 28கூஉ_1 |
| 33 | வயது வந்த குடும்ப உறுப்பினரிடம் சார்பு | 21 | 120 | 64 | க5 வி15 | -> | -> | 28கூஉ_1 |
| 34 | அழைப்பாணை சார்பு குறித்து உறுதிமொழி | 21 | 70 | 2(7), 296(1) | க19 வி1 | <-> | 40 | 28கூஉ_1 |
| | **அத்தியாயம் 6** | | | | | | | |
| | **எதிர்மனுதார் தொடர்பானவைகள்** | | | | | | | |
| 35 | அழைப்பாணையின் பேரில் முன்னிலை | 21 | 135 | 44, 171 | க9 வி 1 | 11(3)(1) | 34(10) | 13(2) |
| 36 | முன்னிலை இல்லையென்றால் நடவடிக்கை | 21 | 132, 157 | 70 | க9 வி 12 | 11(4) | 34(10) | 13(2) |
| 37 | ஒரு தரப்பு தீர்ப்பை எதிர்த்தல் | 21 | 136 | 2(7) | க9 வி 13 | 12(2) | 34(11), 48 | 13(2) |
| 38 | பதிலுரை தாக்கல் செய்தல் | 21 | 136 | 2(7) | க 8 | 11(4) | 34(2) | 13(2) |
| 39 | பதிலுரையோடு சான்று ஆவணங்கள் தாக்கல் | 21 | 51 | 294 | க8 வி8கூஉ_1 | 11(4) | 34(2) | 13(2)(ஆ) |
| 40 | பதிலுரையோடு சாட்சிகளின் பட்டியல் தாக்கல் | 21 | 51 | 311 | க8 வி8கூஉ_3 | 11(4) | 34(2) | 13(2)(ஆ) |
| 41 | வழக்கு உண்மை என்றால் சமரசத்திற்கு முயற்சி | 21 | 50 | 320 | 89, க12 வி1 | 12(3) | 12(2)(3) | - |
| 42 | வழக்கு பொய்யெனில் குற்ற / எதிர் நடவடிக்கை | 21 | 55 | 340 | -> | -> | -> | -> |



| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | நுகர்வோர் விதிகள் 1988 | குடும்ப நீதி சட்டம் 1984 | [illegible] கட்டளை 32கூஉ_1 | சிறப்பு திருமணம் 1954 | இந்து திருமணம் 1955 | [illegible] இரத்து 1939 | கிறித்துவர் இரத்து 1869 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 27 | காவலர் / பணியாளர் மூலம் அழைப்பாணை | -> | -> | -> | -> | -> | - | -> |
| 28 | பதிவு அஞ்சல் மூலம் அழைப்பாணை | -> | -> | -> | -> | -> | - | -> |
| 29 | வட்டார நாளிதழ் மூலம் அழைப்பாணை | -> | -> | -> | -> | -> | - | -> |
| 30 | நாளிதழ் அழைப்பாணை குறித்து தகவல் | -> | -> | -> | -> | -> | - | -> |
| 31 | அழைப்பாணையை பெற மறுத்தால் சார்புதான் | -> | -> | -> | -> | -> | - | -> |
| 32 | நியமனதாரரிடம் அழைப்பாணை சார்பு | -> | -> | -> | -> | -> | - | -> |
| 33 | வயது வந்த குடும்ப உறுப்பினரிடம் சார்பு | -> | -> | -> | -> | -> | - | -> |
| 34 | அழைப்பாணை சார்பு குறித்து உறுதிமொழி | -> | -> | -> | -> | -> | - | -> |
| | **அத்தியாயம் 6** | | | | | | | |
| | **எதிர்மனுதார் தொடர்பானவைகள்** | | | | | | | |
| 35 | அழைப்பாணையின் பேரில் முன்னிலை | 4(8) | 9(1) | -> | 34 | -> | - | 51 |
| 36 | முன்னிலை இல்லையென்றால் நடவடிக்கை | 4(8) | 7(1)(1) | -> | 34(1) | -> | - | -> |
| 37 | ஒரு தரப்பு தீர்ப்பை எதிர்த்தல் | 4(8) | 7(1)(1) | -> | -> | -> | - | -> |
| 38 | பதிலுரை தாக்கல் செய்தல் | 4(8) | 10(3) | -> | 35 | 23(1) | - | -> |
| 39 | பதிலுரையோடு சான்று ஆவணங்கள் தாக்கல் | 4(8) | 10(3) | -> | -> | -> | - | -> |
| 40 | பதிலுரையோடு சாட்சிகளின் பட்டியல் தாக்கல் | 4(8) | 10(3) | -> | -> | -> | - | -> |
| 41 | வழக்கு உண்மை என்றால் சமரசத்திற்கு முயற்சி | -> | 9(1) | -> | 22 | 9,கூஉ_13-2 | - | -> |
| 42 | வழக்கு பொய்யெனில் குற்ற / எதிர் நடவடிக்கை | -> | -> | -> | 35 | -> | - | -> |

| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | இந்திய சாசனம் 1950 | நீதிமன்ற சாசனம் 1872 | குற்ற விதிகள் 1973 | உரிமை விதிகள் 1908 | தொழில் நல்லுறவு 1947 | தொழில் விதிகள் 1958 | நுகர்வோர் சட்டம் 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| | அத்தியாயம் 7 | | | | | | | |
| | பதிலுரையின் மீது மனுதாரின் நடவடிக்கை | | | | | | | |
| 43 | மனுவில் / புகாரில் குறைபாட்டை சரி செய்தல் | 21 | 93 | 216 | க6 வி17 | 12(2) | 34(5) | -> |
| 44 | பதிலுரைக்கு மனுதார் எதிருரை சமர்ப்பித்தல் | 21 | 48 | - | க11 வி11 | 11(4) | 34(4) | -> |
| 45 | எதிருரையோடு சாட்சிகளின் பட்டியல் தாக்கல் | 21 | 157 | - | க16 வி1 | 11(4) | 34(4) | -> |
| 46 | எதிருரையோடு சான்றாவண பட்டியல் தாக்கல் | 21 | 162 | - | க16 வி1 | 11(4) | 34(4) | -> |
| | அத்தியாயம் 8 | | | | | | | |
| | மனு மீதான மனுதாரின் விசாரணை துவக்கம் | | | | | | | |
| 47 | மனுவின் சங்கதிகள் குறித்து உறுதிமொழி | 21 | 17 | 296 | க19வி 1 | 11(3)(1) | 34(7) | 13(4) |
| 48 | உறுதிமொழியில் சான்று / ஆவணங்கள் குறியீடு | 21 | 70, 51 | 2(7), 296 | க19வி3(2) | 11(3)(2) | 34(7) | 13(4) |
| 49 | சாட்சிகளின் உறுதிமொழி தாக்கல் | 21 | 70 | 296 | க19வி 1 | 11(3)(1) | 34(7) | 13(4) |
| 50 | சாட்சிகளின் உறுதிமொழியோடு சான்று தாக்கல் | 21 | 51 | 2(7), 296 | க19வி3(2) | 11(3)(2) | 34(7) | 13(4) |
| | அத்தியாயம் 9 | | | | | | | |
| | பதிலுரை மீது எதிர்மனுதாரின் விசாரணை | | | | | | | |
| 51 | பதிலுரையின் சங்கதிகள் குறித்து உறுதிமொழி | 21 | 17 | 296 | க19 வி1 | 11(3)(1) | 34(7) | 13(4) |
| 52 | உறுதிமொழியில் சான்று / ஆவணங்கள் குறியீடு | 21 | 70, 51 | 2(7), 296 | க19 வி3(2) | 11(3)(2) | 34(7) | 13(4) |
| 53 | சாட்சிகளின் உறுதிமொழி தாக்கல் | 21 | 70 | 296 | க19 வி1 | 11(3)(1) | 34(7) | 13(4) |
| 54 | சாட்சிகளின் உறுதிமொழியோடு சான்று தாக்கல் | 21 | 51 | 2(7), 296 | க19 வி3(2) | 11(3)(2) | 34(7) | 13(4) |



| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | நுகர்வோர் விதிகள் 1988 | குடும்ப நீதி சட்டம் 1984 | உரிமையியல் கட்டளை 32கூ.1 | சிறப்பு திருமணம் 1954 | இந்து திருமணம் 1955 | முஸ்லிம் இரத்து 1939 | கிறிஸ்துவர் இரத்து 1869 |
|---|---|---|---|---|---|---|---|---|
| | அத்தியாயம் 7 | | | | | | | |
| | பதிலுரையின் மீது மனுதாரின் நடவடிக்கை | | | | | | | |
| 43 | மனுவில் / புகாரில் குறைபாட்டை சரி செய்தல் | -> | 10(3) | -> | -> | -> | - | -> |
| 44 | பதிலுரைக்கு மனுதார் எதிருரை சமர்ப்பித்தல் | -> | 14 | -> | -> | -> | - | -> |
| 45 | எதிருரையோடு சாட்சிகளின் பட்டியல் தாக்கல் | -> | 14 | -> | -> | -> | - | -> |
| 46 | எதிருரையோடு சான்றாவண பட்டியல் தாக்கல் | -> | 14 | -> | -> | -> | - | -> |
| | அத்தியாயம் 8 | | | | | | | |
| | மனு மீதான மனுதாரின் விசாரணை துவக்கம் | | | | | | | |
| 47 | மனுவின் சங்கதிகள் குறித்து உறுதிமொழி | -> | 16(1) | -> | 32(2) | 20(2) | - | 47 |
| 48 | உறுதிமொழியில் சான்று / ஆவணங்கள் குறியீடு | -> | 14 | -> | 32(2) | 20(2) | - | 47 |
| 49 | சாட்சிகளின் உறுதிமொழி தாக்கல் | -> | 16(1) | -> | -> | -> | - | 51 |
| 50 | சாட்சிகளின் உறுதிமொழியோடு சான்று தாக்கல் | -> | 14 | -> | -> | -> | - | 51 |
| | அத்தியாயம் 9 | | | | | | | |
| | பதிலுரை மீது எதிர்மனுதாரின் விசாரணை | | | | | | | |
| 51 | பதிலுரையின் சங்கதிகள் குறித்து உறுதிமொழி | -> | 16(1) | -> | -> | -> | - | -> |
| 52 | உறுதிமொழியில் சான்று / ஆவணங்கள் குறியீடு | -> | 14 | -> | -> | -> | - | -> |
| 53 | சாட்சிகளின் உறுதிமொழி தாக்கல் | -> | 16(1) | -> | -> | -> | - | 51 |
| 54 | சாட்சிகளின் உறுதிமொழியோடு சான்று தாக்கல் | -> | 14 | -> | -> | -> | - | 51 |

| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | இந்திய சாசனம் 1950 | நீதிமன்ற சாசனம் 1872 | குற்ற விதிகள் 1973 | உரிமை விதிகள் 1908 | தொழில் நல்லுறவு 1947 | தொழில் விதிகள் 1958 | நுகர்வோர் சட்டம் 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| | *அத்தியாயம் 10* | | | | | | | |
| | *மனுதார் தரப்பை குறுக்கு விசாரணை* | | | | | | | |
| 55 | மனுதாரை குறுக்கு விசாரணை | 21 | 140 | 242, 275 | க19 வி2 | 11(4) | 34(7), 41 | 13(4) |
| 56 | மனுதார் தரப்பு சான்றுகளை முரண்படுத்துதல் | 21 | 145 | 242, 275 | க19 வி3 | 11(4) | 34(7), 41 | 13(4) |
| 57 | மனுதார் தரப்பு சாட்சிகளை குறுக்கு விசாரணை | 21 | 140 | 242, 275 | க19 வி2 | 11(4) | 34(7), 41 | 13(4) |
| 58 | ம த சாட்சியின் சான்றுகளை முரண்படுத்துதல் | 21 | 145 | 242, 275 | க19 வி3 | 11(4) | 34(7), 41 | 13(4) |
| | *அத்தியாயம் 11* | | | | | | | |
| | *எதிர் மனுதார் தரப்பை குறுக்கு விசாரணை* | | | | | | | |
| 59 | எதிர் மனுதாரை குறுக்கு விசாரணை | 21 | 140 | 243(1), 281 | க19 வி2 | 11(4) | 34(7), 41 | 13(4) |
| 60 | எ மனுதார் தரப்பு சான்றுகளை முரண்படுத்துதல் | 21 | 145 | 243(2) | க19 வி3 | 11(4) | 34(7), 41 | 13(4) |
| 61 | மனுதார் தரப்பு சாட்சிகளை குறுக்கு விசாரணை | 21 | 140 | 243(2) | க19 வி2 | 11(4) | 34(7), 41 | 13(4) |
| 62 | ம த சாட்சியின் சான்றுகளை முரண்படுத்துதல் | 21 | 145 | 243(2) | க19 வி3 | 11(4) | 34(7), 41 | 13(4) |
| | *அத்தியாயம் 12* | | | | | | | |
| | *வாதுரை தொடர்பானவை* | | | | | | | |
| 63 | மனுதார் தனது தரப்பு வாதுரையை சமர்ப்பித்தல் | 21 | 157 | 314, 404 | க16வி2கூஉ | 11(3)(4) | 34(8) | 13(4) |
| 64 | எ ம தனது தரப்பு வாதுரையை சமர்ப்பித்தல் | 21 | 157 | 314, 404 | க16வி2கூஉ | 11(3)(4) | 34(8) | 13(4) |
| 65 | மனுதார் சாட்சி வாதுரையை சமர்ப்பித்தல் | 21 | 157 | 314, 404 | க16வி2கூஉ | 11(3)(4) | 34(8) | 13(4) |
| 66 | எதிர்மனுதார் சாட்சி வாதுரையை சமர்ப்பித்தல் | 21 | 157 | 314, 404 | க16வி2கூஉ | 11(3)(4) | 34(8) | 13(4) |



| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | நுகர்வோர் விதிகள் 1988 | குடும்ப நீதி சட்டம் 1984 | உ.வி.மு.வி கட்டளை 32கூஉ1 | சிறப்பு திருமணம் 1954 | இந்து திருமணம் 1955 | முகமதியர் இரத்து 1939 | கிறித்துவர் இரத்து 1869 |
|---|---|---|---|---|---|---|---|---|
| | *அத்தியாயம் 10* | | | | | | | |
| | *மனுதார் தரப்பை குறுக்கு விசாரணை* | | | | | | | |
| 55 | மனுதாரை குறுக்கு விசாரணை | --> | 16(1) | --> | --> | --> | - | 51 |
| 56 | மனுதார் தரப்பு சான்றுகளை முரண்படுத்துதல் | --> | 16(1) | --> | --> | --> | - | 51 |
| 57 | மனுதார் தரப்பு சாட்சிகளை குறுக்கு விசாரணை | --> | 16(1) | --> | --> | --> | - | 51 |
| 58 | ம த சாட்சியின் சான்றுகளை முரண்படுத்துதல் | --> | 16(1) | --> | --> | --> | - | 51 |
| | *அத்தியாயம் 11* | | | | | | | |
| | *எதிர் மனுதார் தரப்பை குறுக்கு விசாரணை* | | | | | | | |
| 59 | எதிர் மனுதாரை குறுக்கு விசாரணை | --> | 16(1) | --> | --> | --> | - | 51 |
| 60 | எ மனுதார் தரப்பு சான்றுகளை முரண்படுத்துதல் | --> | 16(1) | --> | --> | --> | - | 51 |
| 61 | மனுதார் தரப்பு சாட்சிகளை குறுக்கு விசாரணை | --> | 16(1) | --> | --> | --> | - | 51 |
| 62 | ம த சாட்சியின் சான்றுகளை முரண்படுத்துதல் | --> | 16(1) | --> | --> | --> | - | 51 |
| | *அத்தியாயம் 12* | | | | | | | |
| | *வாதுரை தொடர்பானவை* | | | | | | | |
| 63 | ம ***தனது தரப்பு*** வாதுரையை சமர்ப்பித்தல் | --> | *10(3)* | --> | --> | --> | - | --> |
| 64 | எ ம ***தனது தரப்பு*** வாதுரையை சமர்ப்பித்தல் | --> | 10(3) | --> | --> | --> | - | --> |
| 65 | ம சாட்சி ***தனது*** வாதுரையை சமர்ப்பித்தல் | --> | 10(3) | --> | --> | --> | - | --> |
| 66 | எ ம சாட்சி ***தனது*** வாதுரையை சமர்ப்பித்தல் | --> | 10(3) | --> | --> | --> | - | --> |

| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | இந்திய சாசனம் 1950 | நீதிமன்ற சாசனம் 1872 | குற்ற விதிகள் 1973 | உரிமை விதிகள் 1908 | தொழில் நல்லுறவு 1947 | தொழில் விதிகள் 1958 | நுகர்வோர் சட்டம் 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| | அத்தியாயம் 13 | | | | | | | |
| | தீர்ப்புரை தொடர்பானவை | | | | | | | |
| 67 | நீதிமன்ற மொழியில் தீர்ப்புரை | தி 348 | 57(1) | 265, 353 | வி137 க20 | 16 | 34(12) | 14(1)(அ) |
| 68 | திறந்த / மூடிய நீதிமன்றத்தில் விசா / தீர்ப்பு | 145(4) | 57(1) | 327 | வி153கூஉ 2 | தி 17 | 51 | - |
| | அத்தியாயம் 14 | | | | | | | |
| | வழக்கின் சான்று நகலைப் பெறுதல் | | | | | | | |
| 69 | மனுதார் வழ / தீர் சான்று நகலை பெறுதல் | 21 | 76 | 363(5) | க20 வி20 | 17(1) | 70 | - |
| 70 | எ ம வழ / தீர் சான்று நகலை பெறுதல் | 21 | 76 | 363 | க20 வி20 | 17(1) | 70 | - |
| 71 | எவரும் வழ / தீர் சான்று நகலை பெறுதல் | 21 | 76 | 363(6) | -> | 17(1) | -> | -> |
| | அத்தியாயம் 15 | | | | | | | |
| | தீர்ப்புரையை நிறைவேற்றுதல் | | | | | | | |
| 72 | தீர்ப்பினை நிறைவேற்றக்கோரி அறிவிப்பு | 21 | 106 | 2(7) | க21 வி1(2) | 17 கூஉ 1, 29 | -> | 27 |
| 73 | அறிவிப்பின் நகல் தீர்ப்புரைத்த நீதிமன்றத்துக்கு | 21 | 106 | 44(2) | க21 வி1(2) | 17 கூஉ 1, 29 | -> | 27 |
| 74 | நிறைவேற்றுகை மனுத்தாக்கல் | 21 | 106 | 73 | க21 வி10 | 17 கூஉ 1 | -> | 27 |
| | அத்தியாயம் 16 | | | | | | | |
| | மேல் நடவடிக்கைகள் தொடர்பானவை | | | | | | | |
| 75 | உத்தரவை எதிர்த்து அந்நீதிமன்றத்தில் சீராய்வு | 137 | 44, 106 | 2(7) 395 | வி 114 | 19 | -> | -> |
| 76 | மேல் நீதிமன்றத்தில் சீராய்வு | 136 | 44, 106 | 397 | வி 115 | 19(3) | -> | -> |



| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | நுகர்வோர் விதிகள் 1988 | குடும்ப நீதி சட்டம் 1984 | உ.வி.மு.வி கட்டளை 32கூஉ 1 | சிறப்பு திருமணம் 1954 | இந்து திருமணம் 1955 | முகமதியர் இரத்து 1939 | கிறித்துவர் இரத்து 1869 |
|---|---|---|---|---|---|---|---|---|
| | அத்தியாயம் 13 | | | | | | | |
| | தீர்ப்புரை தொடர்பானவை | | | | | | | |
| 67 | நீதிமன்ற மொழியில் தீர்ப்புரை | -> | 17 | -> | -> | -> | - | -> |
| 68 | திறந்த / மூடிய நீதிமன்றத்தில் விசா / தீர்ப்பு | - | மூ 11 | மூ 2 | மூ 33 | மூ 22 | - | மூ 53 |
| | அத்தியாயம் 14 | | | | | | | |
| | வழக்கின் சான்று நகலைப் பெறுதல் | | | | | | | |
| 69 | மனுதார் வழ / தீர் சான்று நகலை பெறுதல் | 4(10) | 23(2)(5) | -> | -> | -> | - | -> |
| 70 | எ ம வழ / தீர் சான்று நகலை பெறுதல் | 4(10) | 23(2)(5) | -> | -> | -> | - | -> |
| 71 | எவரும் வழ / தீர் சான்று நகலை பெறுதல் | -> | -> | -> | -> | -> | - | -> |
| | அத்தியாயம் 15 | | | | | | | |
| | தீர்ப்புரையை நிறைவேற்றுதல் | | | | | | | |
| 72 | தீர்ப்பினை நிறைவேற்றக்கோரி அறிவிப்பு | -> | 18(1) | -> | -> | 28கூஉ 1 | - | -> |
| 73 | அறிவிப்பின் நகல் தீர்ப்புரைத்த நீதிமன்றத்துக்கு | -> | 18(1),(2) | -> | -> | 28கூஉ 1 | - | -> |
| 74 | நிறைவேற்றுகை மனுத்தாக்கல் | -> | 18(3) | -> | -> | 28கூஉ 1 | - | -> |
| | அத்தியாயம் 16 | | | | | | | |
| | மேல் நடவடிக்கைகள் தொடர்பானவை | | | | | | | |
| 75 | உத்தரவை எதிர்த்து அந்நீதிமன்றத்தில் சீராய்வு | -> | 18(1) | -> | -> | -> | - | -> |
| 76 | மேல் நீதிமன்றத்தில் சீராய்வு | -> | 19(1) | -> | -> | -> | - | -> |

| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | இந்திய சாசனம் 1950 | நீதிமன்ற சாசனம் 1872 | குற்ற விதிகள் 1973 | உரிமை விதிகள் 1908 | தொழில் நல்லுறவு 1947 | தொழில் விதிகள் 1958 | நுகர்வோர் சட்டம் 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 77 | உத்தரவை எதிர்த்து மேல் முறையீடு | 133 | 44, 106 | 401 | வி96, க41 | 17கூ.உ_2 | -> | 30நா/15 |
| | அத்தியாயம் 17 | | | | | | | |
| | நீதிமன்ற நடவடிக்கைகளில் பல்வகை | | | | | | | |
| 78 | நீதிமன்றத்தின் இயல்பான அதிகாரம் | 51 கூ.உ_1 | 56, 165 | 2(7), 313 | 151 | 11 | 35, 42, 43 | -> |
| 79 | நீதிமன்றம் சுயவிருப்பில் வழக்கெடுக்கும் கடமை | 32, 226 | 40 | 190(1)(3) | 151 | 11(2) | 43 | -> |
| 80 | வழக்கு குறித்து மனுதாருக்கு அழைப்பாணை | 21 | 50 | 190(1)(3) | க10 வி4 | -> | 37(1)(2) | -> |
| 81 | வழக்கை தாக்கல் செய்வதற்கான கால வரம்பு | 21 | 48 |ச பொ | ச பொ | ச பொ | ச பொ | 24கூ.உ_1 |
| 82 | காலவரம்பின் அளவு | 21 | 57(1) | ச பொ | ச பொ | 1வ / 3வ | -> | 2 வ |
| 83 | காலதாமத வழக்கை ஏற்றல் / மறுத்தல் | 21 | 57(1) | 469 | க 7 வி 6 | -> | -> | 24கூ.உ_1 |
| 84 | வழக்கை முடித்து தீர்வு காண காலவரம்பு | 51 கூ.உ_1 | 57(1) | 6மா / ச பொ | 6மா / ச பொ | 3 மா/10கூ.உ_2 | -> | 13(3)கூ.உ_1 |
| 85 | பல்வகை மனு / இடைமனு / சிறுஞாபக குறிப்பு | 21 | 57(1) | ப 2(7) | இ 151 | -> | -> | 13(3)கூ.உ_2 |
| 86 | நீதிமன்ற கட்டணம் தேவையில்லை / தேவை | 51 கூ.உ_1 | 57(1) | தேஇ 2(4) | தேஇ90,தே149 | தே/தேஇ | தே/தேஇ | தே/12(2) |
| 87 | வழக்கை விசாரணைக்கு ஏற்க கால வரம்பு | 21 | 57(1) | உடனே | - | - | உடனே | 13(1)(அ) |
| 88 | கால அளவின் எண்ணிக்கை (நாள்களில்) | 21 | 57(1) | உடனே | - | - | உடனே | 21நா |
| 89 | முக்கிய சாட்சிகளை விசாரித்தல் | 51 கூ.உ_1 | 45, 50 | 311 | க 16 வி14 | 11(4) | 39, 42 | -> |
| 90 | சட்ட பிரச்சினையை எழுப்புதல் | 135, 228 | 165 | 395(2) | வி113 க46 | 33, 36 கூ.உ | 36(2) | -> |
| 91 | வழக்கில் புதிதாக சேர்த்தல் / நீக்கல் | 21 | 30, 40 | 319 | க8 கூ.உ_1 | 36 | -> | -> |
| 92 | முகவரி மாற்றம் குறித்து மன்றத்துக்கு தகவல் | 51 கூ.உ_1 | 40 | 2(7) | க6 வி14கூ.உ_1 | -> | -> | -> |



| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | நுகர்வோர் விதிகள் 1988 | குடும்ப நீதி சட்டம் 1984 | உ.வி.மு.வி கட்டளை 32கூ.உ_1 | சிறப்பு திருமணம் 1954 | இந்து திருமணம் 1955 | முகமதியர் இரத்து 1939 | கிறித்துவர் இரத்து 1869 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 77 | உத்தரவை எதிர்த்து மேல் முறையீடு | 9 | 30நா/19(3) | -> | 90நா/39 | 30நா28(4) | - | 55, 56 |
| | அத்தியாயம் 17 | | | | | | | |
| | நீதிமன்ற நடவடிக்கைகளில் பல்வகை | | | | | | | |
| 78 | நீதிமன்றத்தின் இயல்பான அதிகாரம் | -> | 9(1) | 5 | 34(2) | -> | - | -> |
| 79 | நீதிமன்றம் சுயவிருப்பில் வழக்கெடுக்கும் கடமை | -> | 9(1) | 5 | 34(2) | -> | - | -> |
| 80 | வழக்கு குறித்து மனுதாருக்கு அழைப்பாணை | -> | 9(1) | 5 | 34(2) | -> | - | -> |
| 81 | வழக்கை தாக்கல் செய்வதற்கான கால வரம்பு | -> | ச பொ | ச பொ | ச பொ | ச பொ | - | ச பொ |
| 82 | காலவரம்பின் அளவு | -> | ச பொ | ச பொ | ச பொ | ச பொ | - | ச பொ |
| 83 | காலதாமத வழக்கை ஏற்றல் / மறுத்தல் | -> | -> | -> | -> | -> | - | -> |
| 84 | வழக்கை முடித்து தீர்வு காண காலவரம்பு | 90/150 | - | - | - | 6மா/21கூ.உ_2 | - | - |
| 85 | பல்வகை மனு / இடைமனு / சிறு ஞாபககுறிப்பு | -> | -> | -> | -> | -> | - | -> |
| 86 | நீதிமன்ற கட்டணம் தேவையில்லை / தேவை | தேவை | தே இ | தே இ | தே இ | 21 கூ.உ 3 | - | தே இ |
| 87 | வழக்கை விசாரணைக்கு ஏற்க கால வரம்பு | -> | உடனே | உடனே | உடனே | உடனே | - | உடனே |
| 88 | கால அளவின் எண்ணிக்கை (நாள்களில்) | -> | உடனே | உடனே | உடனே | உடனே | - | உடனே |
| 89 | முக்கிய சாட்சிகளை விசாரித்தல் | -> | 12 | -> | -> | -> | - | -> |
| 90 | சட்ட பிரச்சினையை எழுப்புதல் | -> | 19(4) | -> | -> | -> | - | 9 |
| 91 | வழக்கில் புதிதாக சேர்த்தல் / நீக்கல் | -> | - | - | - | - | - | - |
| 92 | முகவரி மாற்றம் குறித்து நீதிமன்றத்துக்கு தகவல் | -> | -> | -> | -> | -> | - | -> |

| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | இந்திய சாசனம் 1950 | நீதிமன்ற சாசனம் 1872 | குற்ற விதிகள் 1973 | உரிமை விதிகள் 1908 | தொழில் நல்லுறவு 1947 | தொழில் விதிகள் 1958 | நுகர்வோர் சட்டம் 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 93 | சம்பந்தமில்லாத சான்றுகளை நிராகரித்தல் | 51 கூஉ_1 | 39 | -> | க13 வி3 | -> | 38 | - |
| 94 | ஒத்திவைத்தால் இழப்பீடு / செலவுதொகை | 51 கூஉ_1 | 12 | 309(2) | வி35கூஉ_2 | 11(7) | 34(9) | 13(3)கூஉ_1 |
| 95 | உண்மை ஆவணத்தில் பச்சை மையில் ஒப்பம் | 21 | 70 | -> | -> | -> | -> | -> |
| 96 | வழக்கை / சம்பவத்தை தடுக்கும் கடமை | 51 கூஉ_1 | 40 | 2(7), 149 | 151 | 11(4) | 42 | - |
| 97 | மனுவை ஏற்க காலம் விதி / நாட்களில் | 51 கூஉ_1 | 57(1) | -> | க7 வி9 | உ 12(2) | 15நா/34(1) | 21நா/12(3) |
| 98 | எ ம அழைப்பானை அனுப்ப காலம் விதி/நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க7வி9 | - | 15நா/34(2) | 30நா13(1)) |
| 99 | எ ம பதிலுரை சமர்பிக்க காலம் விதி / நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 30நா/க8வி1 | - | 15நா/34(2) | 30நா13(1) |
| 100 | பதிலுரைக்கு கூடுதல் காலம் விதி / நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 90நா/க8வி1 | - | 15நா/34(3) | 15நா13(1)) |
| 101 | மனுதாரின் எதிருரைக்கு காலம் விதி / நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க10வி4 | - | 15நா/34(4) | - |
| 102 | மனுதாரின் உறுதிமொழிக்கு காலம் விதி / நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க14வி4 | - | 15நா/34(6) | - |
| 103 | எ மனுதாரின் உறுதிமொழிக்கு காலம் விதி/நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க14வி4 | - | 15நா/34(6) | - |
| 104 | ம த முதல் விசாரணை செய்ய காலம் விதி/நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க14வி4 | - | 15நா/34(7) | - |
| 105 | குறுக்கு விசாரணை செய்ய காலம் விதி / நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க14வி4 | - | 15நா/34(7) | - |
| 106 | மறு விசாரணை செய்ய காலம் விதி / நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க14வி4 | - | 15நா/34(7) | - |
| 107 | எ ம த மு விசாரணை செய்ய காலம் விதி/நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க14வி4 | - | 15நா/34(7) | - |
| 108 | குறுக்கு விசாரணை செய்ய காலம் விதி / நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க14வி4 | - | 15நா/34(7) | - |
| 109 | மறு விசாரணை செய்ய காலம் விதி / நாள் | 51 கூஉ_1 | 57(1) | -> | 7நா/க14வி4 | - | 15நா/34(7) | - |
| 110 | வழக்குதாரர் இறந்து விட்டால் வாரிசு / அல்ல | 51 கூஉ_1 | வா 50 | அல்ல | க22 | -> | 54 | 13(7) |



| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | நுகர்வோர் விதிகள் 1988 | குடும்ப நீதி சட்டம் 1984 | உ.வி.மு.வி கட்டளை 32கூஉ_1 | சிறப்பு திருமணம் 1954 | இந்து திருமணம் 1955 | முகமதியர் இரத்து 1939 | கிறித்துவர் இரத்து 1869 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 93 | சம்பந்தமில்லாத சான்றுகளை நிராகரித்தல் | -> | -> | -> | -> | -> | - | - |
| 94 | ஒத்திவைத்தால் இழப்பீடு / செலவுதொகை | -> | கே இ | கே இ 3(3) | -> | -> | - | 54 |
| 95 | உண்மை ஆவணத்தில் பச்சை மையில் ஒப்பம் | -> | -> | -> | -> | -> | - | -> |
| 96 | வழக்கை / சம்பவத்தை தடுக்கும் கடமை | தே | தே | 3(1) | தே | 23(2) | - | தே |
| 97 | மனுவை ஏற்க காலம் விதி / நாட்களில் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 98 | எ ம அழைப்பானை அனுப்ப காலம் விதி/நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 99 | எதிர்தரப்பு பதிலுரை சமர்பிக்க காலம் விதி/நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 100 | பதிலுரைக்கு கூடுதல் காலம் விதி / நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 101 | மனுதாரின் எதிருரைக்கு காலம் விதி / நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 102 | மனுதாரின் உறுதிமொழிக்கு காலம் விதி/நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 103 | எ மனுதாரின் உறுதிமொழிக்கு காலம் விதி/நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 104 | ம த முதல் விசாரணை செய்ய காலம் விதி/நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 105 | குறுக்கு விசாரணை செய்ய காலம் விதி/நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 106 | மறு விசாரணை செய்ய காலம் விதி / நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 107 | எ ம த மு விசாரணை செய்ய காலம் விதி/நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 108 | குறுக்கு விசாரணை செய்ய காலம் விதி / நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 109 | மறு விசாரணை செய்ய காலம் விதி / நாள் | தே | தே | தே | தே | தே | - | தே |
| 110 | வழக்குதாரர் இறந்து விட்டால் வாரிசு / அல்ல | -> | - | - | - | - | - | - |

| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | இந்திய சாசனம் 1950 | நீதிமன்ற சாசனம் 1872 | குற்ற விதிகள் 1973 | உரிமை விதிகள் 1908 | தொழில் நல்லுறவு 1947 | தொழில் விதிகள் 1958 | நுகர்வோர் சட்டம் 1986 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 111 | மேல் முறையீட்டு கால அவகாசம் | 21 | 57(1) | 30 நா | 30 நா | இல்லை | இல்லை | நா30 |
| 112 | திருத்த / மீண்டும் சமர்ப்பிக்க கால அளவு | 21 | 57(1) | 216 | க6 வி18 | 11 | 34(5) | -> |
| 113 | ஆதார சான்றுகளின் நகலை தாக்கல் செய்தல் | 51 கூஉ_1 | 63 | 294 | க13 வி 9 | 11 | 38 | -> |
| 114 | சிறையில் உள்ளவரை சாட்சியாக அழைத்தல் | 21 | 48 | 267 | க16கூஉ_1 | -> | 39, 43 | -> |
| 115 | சிறை பாதுகாப்பில் வழக்கை நடத்தலாம் | 51 கூஉ_1 | 51 | 267(1) | க5 வி24 | -> | 39, 43 | -> |
| 116 | சாட்சியின் நடவடிக்கை பற்றி குறிப்பு எழுதுதல் | 51 கூஉ_1 | 14 | 280 | க18 வி12 | -> | 41 | -> |
| 117 | அறிவியல் சோதனைக்கு உட்படுத்துதல் | 51 கூஉ_1 | 45 | 291மு 293வ | க26,வி10கூஉ | -> | 42 | 45நா/13(1) |
| 118 | எதிர் கோரிக்கை | 51 கூஉ_1 | 48 | 340 | க8 | 11 | -> | -> |
| 119 | சம்பவ இடத்தை நீதிபதி பார்வையிடல் | 51 கூஉ_1 | 166 | 310 | - | - | 42 | -> |
| 120 | இடைக்கால / நிரந்தர நிவாரணம் | 51 கூஉ_1 | 57(1) | 2(7) | 151 | 11(7) | 52 | 13(3)கூஉ_2 |

## அட்டவணையைப் பற்றிய மிக முக்கிய குறிப்பு

முகமதிய ஆண், பெண் ஆகிய இருவருக்குள் செய்து கொண்ட திருமணங்களை ரத்து செய்வது குறித்த சட்டம் 1939-இல் இயற்றப்பட்டுள்ளது. . இதில் மொத்தம் ஆறு பிரிவுகள் மட்டுமே. அதிலும் ஆறாவது பிரிவு நீக்கப்பட்டு விட்டது. விவாகரத்து பெற விரும்பும் முகமதிய ஆண் ஒருவர் அதற்கான காரணங்கள் எதையும் கூற வேண்டிய அவசியம் இல்லை. மத கோட்பாட்டின் அடிப்படையில் 'தலாக்' என்ற சொல்லை கணவன் ஒரே சமயத்தில் மூன்று முறை சொல்லி விவாகரத்து பெற்று விடலாம் என்று சொல்வார்கள் ஒரு சமயத்தில் ஒரு முறை சொன்னாலே போதும். திருமண ரத்தாகி விடும். ஆனால், தான் அவசப்பட்டு தலாக் முடிவெடுத்ததாக கருதினால், மீண்டும் மனைவியுடன் சேர்ந்து வாழலாம். இப்படி மூன்று வாய்ப்புகள் தரப்பட்டதன் நோக்கமே, கணவன் மனைவி ஆகிய இருவரும் இறுதிவரை இடையிடையே ஆன கருத்து வேறுபாடுகளை மறந்து சுமுகமாக வாழ வேண்டும் என்பதன் அடிப்படையிலேயே.



| வ.எண் | பொருள் மற்றும் சட்ட சங்கதி | நுகர்வோர் விதிகள் 1988 | குடும்ப நீதி சட்டம் 1984 | உ.வி.மு.வி கட்டளை 32கூஉ_1 | சிறப்பு திருமணம் 1954 | இந்து திருமணம் 1955 | முகமதியர் இரத்து 1939 | கிறித்துவர் இரத்து 1869 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 111 | மேல் முறையீட்டு கால அவகாசம் | 30நா | 30நா/19(3) | 30நா | 90நா / 39 | 30நா | - | 30நா |
| 112 | திருத்த / மீண்டும் சமர்ப்பிக்க கால அளவு | -> | -> | -> | -> | -> | - | -> |
| 113 | ஆதார சான்றுகளின் நகலை தாக்கல் செய்தல் | -> | 14 | -> | -> | -> | - | -> |
| 114 | சிறையில் உள்ளவரை சாட்சியாக அழைத்தல் | -> | -> | -> | -> | -> | - | -> |
| 115 | சிறை பாதுகாப்பில் வழக்கை நடத்தலாம் | -> | -> | -> | -> | -> | - | -> |
| 116 | சாட்சியின் நடவடிக்கை பற்றி குறிப்பு எழுதுதல் | -> | 15 | -> | -> | - | - | - |
| 117 | அறிவியல் சோதனைக்கு உட்படுத்துதல் | -> | 12 | -> | -> | -> | - | -> |
| 118 | எதிர் கோரிக்கை | - | 7(2)(2) | -> | 35 | -> | - | 15 |
| 119 | சம்பவ இடத்தை நீதிபதி பார்வையிடல் | - | - | - | - | - | - | - |
| 120 | இடைக்கால / நிரந்தர நிவாரணம் | -> | 7(2)(1) | -> | 36 / 37 | 24 | - | 40 |

இப்படி தனக்கு வழங்கப்பட்ட மூன்று வாய்ப்புகளை ஒரே நேரத்திலோ அல்லது கால இடைவெளிகளிலோ பயன்படுத்தி விட்டால் மீண்டும் சேர்ந்து வாழ முடியாது. பெண்கள் விவகாரத்து பெறுவதற்கு உரிமை இல்லை என்ற நிலை மாறி 1939-இல் உரிமையை வழங்கும் சட்டம் கொண்டு வரப்பட்டாலும், கூட அது என்ன காரணத்துக்காக விவாகரத்து கோர முடியும் என்ற ஒரு சங்கதியைத் தவிர, வேறு எதையும் முழுமையாக சொல்லவில்லை என்பதை விட, அரைகுறையாக கூட இல்லை என்பதால் அது தொடர்பான பிரிவுகளை இந்த அட்டவணையில் நிரப்ப இயலவில்லை. ஆயிரத்தில் ஒருவராக விவாகரத்து பெற விரும்பும் பெண் கூட நீதிமன்றத்துக்கு செல்லாமல், மத குருமார்களிடமே முடித்துக் கொள்கின்றனர். முகமதிய சமுதாய பழக்க வழக்கங்கள், சொத்து விவரங்கள், திருமண உறவில் வரதட்சினைகள், விவாகரத்தில் பிழைப்பூதியம், மகன் மகளை காக்க வேண்டிய கடமை என்பன உட்பட அனைத்தையும் முஸ்லீம் சட்டம் என்ற பெயரில் மிகவும் பயனுள்ள நூலை பேராசிரியர் அபுல் கலாம் எழுத காசிம் மரைக்காயர் அஸ்மா பீவி அறக்கட்டளை, 4, மான்டீத் ரோடு, சென்னை -8 வெளியிட்டுள்ளது.

**உரிமையைக் கோர குறிப்புத்தடை இருக்கக் கூடாது**

கடமையைச் செய்வதற்கு யாருக்கும் எந்தத் தடையும் கிடையாது. யாரும் தடை செய்யவும் மாட்டார்கள். ஏனெனில், ஒருவர் கடமையைச் செய்தால் அதனால் தனக்கு மட்டுமல்லாமல் பலருக்குமே பலன்தான் என்பதால் யாரும் செய்வதில்லை.

ஆனால், அதே சமயம், உரிமையைக் கேட்டால் பல தடைகளை விதிப்பார்கள். காரணம், அவர்களின் உரிமையில் பங்கு போகும் அல்லது அளவில்லாத சுதந்திரம் கட்டுப்படுத்தப்படும் என்பதுதான்.

கடமை என்பது நன்மை போன்றது. நீங்கள் பிறருக்கு நன்மை செய்யும் போது அதை அவர்கள் தாராள மனம் கொண்டு ஏற்றுக் கொள்வார்கள். அதனால், உங்களுக்கும் எல்லா விதத்திலும் நன்மைதான் இருக்கும்.

ஆனால், உரிமை என்பது உங்களுக்கு வேண்டுமானால் நன்மையாக இருக்கலாம். மற்றவர்களுக்குத் துன்பம் போன்றது. துன்பத்தை யாராவது மனமுவந்து ஏற்றுக் கொள்வார்களா? அதனால்தான் பிரச்சினை செய்கிறார்கள்.

“வானமே எல்லை” என்பார்கள். வானத்திற்கு எப்படி எல்லையே இல்லையோ அதுபோல, இவ்வளவுதான் உரிமை என எந்த வரையறையும் செய்ய முடியாது. ஆனாலும் அவ்வப்போது ஏற்படும் உரிமைப் பிரச்சினைகளைக் களைய வேண்டும் என்பதற்காக அது தொடர்பான விவகாரத்தில் மட்டும் வரையறை செய்துள்ளார்கள்.

அப்படியானால், வரையறை செய்யப்படாத பல



உரிமைகளை எப்படி பெறுவது? எப்படி வரையறை செய்வது?

ஓர் உரிமை உண்டு என்றோ அல்லது இல்லை என்றோ சட்டத்தால் வரையறை செய்யப்பட்டிருக்க வேண்டும். இப்படி இரண்டுமே செய்யப்படாத போது, அதிலும் குறிப்பாகத் தடையில்லாத போது, உரிமை இருப்பதாகத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும்.

**எல்லாச் சட்டங்களிலும் உரிமையிருக்க வேண்டுமா?**

வழக்காடுபவர்களின் வசதிக்காக, வழக்கை எப்படி நடத்துவது என்ற அடிப்படையே தெரியாமல் சட்டத்தைக் கையாள்பவர்களுக்கும் பயன்படும் விதமாகப் பல்வேறு சட்டங்களையும், விதிகளையும் ஒருங்கிணைத்து வழங்கும் ஒரு சாகசச் சாதனை முயற்சியே அட்டவணைத் தொகுப்பு.

நம் நாட்டில் எத்தனையோ மதங்கள், இனங்கள், மொழிகள் இருக்கின்றன. இவைகளில் ஒரு சில மற்றவைகளோடு ஒத்துப்போகும். சில ஒத்துப்போகாது. ஒத்துபோகக்கூடியது அனைத்தும் ஒன்றில் இருந்து ஒன்று தொடர்புடையதாக அல்லது பிரிந்து சென்றதாக இருக்கும். ஒத்துப் போகாதது என்றால், அப்படி இருக்காது.

அதுபோலத்தான் ஒவ்வொரு சட்டத்திலும் ஒரு சில மற்றவைகளோடு ஒத்து போகும். ஒரு சில ஒத்துப் போகாது. ஆனாலும், **“மதம், இனம், மொழி ஆகியவைகளின் பிரதான நோக்கம் எப்படி நல்ல விசயங்களாக இருக்கின்றனவோ, அது போலத்தான் சட்டங்களின் நோக்கமும்”.**

தலைமையான இனத்தில், மதத்தில், மொழியில்

உள்ள ஒரு சங்கதி எப்படி அதன் கிளைகளுக்கு பொருந்துமோ, அது போலத்தான் முக்கிய சட்டத்தின் சங்கதிகள் அதன் கிளைகளைக் கட்டுப்படுத்தும்.

உண்மையாக, இந்திய சாசனத்தில் சுதந்திர உரிமை வழங்கப்பட்டுள்ளது என்றால் அதே சுதந்திர உரிமை மற்ற சட்டங்களில் தரப்பட வேண்டும் என்ற அவசியமில்லை. இந்தச் சுதந்திர உரிமையை கட்டுப் படுத்தத்தான் மற்ற சட்டங்கள் இருக்க வேண்டும். இப்படி வெளிப்படையாக கட்டுப்படுத்தப்படாத சங்கதிகள் அனைத்தும் உரிமைகளே ஆகும்.

இதேபோல் நீதிமன்ற சாசனத்தில் ஒரு சங்கதி தெரிவிக்கப்பட்டிருந்தால், "மற்ற சட்ட விதிகளில் தெரிவிக்கப்பட வேண்டும் என்ற அவசியம் இல்லை. சட்டத்தில் ஒரு சங்கதி தெரிவிக்கப்பட்டிருந்தால் விதியில் தெரிவிக்க வேண்டும் என்ற அவசியமும் இல்லை".

மொத்தத்தில் சாசனத்தில் இருந்தால், சட்டத்தில் இருக்க வேண்டிய அவசியமில்லை. சட்டத்தில் இருந்தால் விதியில் இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை என்பதே சட்டத்தின் இலக்கணமும், இவ்வட்டவணைத் தொகுப்பின் தலையாய கருத்தும் ஆகும்.

இந்த வகையில், எந்த அளவிற்கு முடியுமோ அந்த அளவிற்குச் சாசனம், சட்டம் மற்றும் விதிகளை ஒருங்கிணைத்துள்ளேன்.

### பல்வகை மூலங்களும், கோணங்களும்

ஒவ்வொரு பொருளும் மூலப்பொருளே. இம்மூலப் பொருட்களிலிருந்து உற்பத்தியாகும் பொருளும் மூலப்பொருளே என்பது போல சட்டமும் ஒரு மூலப்பொருளே. ஒரு சட்ட விதியைப் பயன்படுத்தும் போது கிடைக்காத பலம், மற்ற விதியுடன் சேர்த்து பயன்படுத்தும் போது கிடைக்கும்.



அதாவது, "உண்மையாக சட்டமும் விதியும் சேரவில்லை என்றால், வழக்கை நடத்தி தண்டனையைத் தரமுடியாது. உரிமையைப் பெற முடியாது அல்லவா?"

இதேபோல், ஒரு மூலப்பொருளினுள் பல்வேறு மூலப்பொருட்கள் அடங்கியிருக்கும் என்பதால் நாம் வெளியில் தெளிவாகத் தெரியும் மூலப்பொருட்களை மட்டும் பார்க்கக் கூடாது. உண்மையாக, "இந்தியச் சாசனத்தின் கோட்பாடு 350-ஆனது இந்தியாவில் பணியாற்றும் எந்த ஓர் அரசு அதிகாரியிடமும் அல்லது பொது ஊழியர்களிடமும் தத்தம் தாய் மொழியிலேயே மனுக் கொடுக்கும் உரிமை இருக்கிறது என அறிவுருத்துகிறது".

இப்படி கொடுக்கும் போது, "அதற்கான பதிலை நீங்கள் கொடுக்கும் மொழியிலேயே தெரிவிக்க வேண்டும் என்பது உள் மூலப்பொருள். அவர்களுக்கு நமது தாய் மொழி தெரியுமா? என்ற கேள்விகளை எல்லாம் நாம் சிந்திக்கத் தேவையில்லை. ஒவ்வொருவரின் தாய் மொழியில் தகவலை தெரிவிப்பதற்காகத்தான் மொழி பெயர்ப்பாளர்களை நியமிக்கிறார்கள்".

### இலவச சட்ட உதவி ஏமாற்று வேலையே!

நீங்களே வாதாடும் போது தனக்கு ஏற்படும் நெருக்கடி நிலைகளில் இருந்து தான் தப்பிக்க வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக, "உங்களுக்கு வக்கீல் வைத்துக் கொள்ள வசதியில்லை என்றால் நானே இலவசமாக வக்கீல் ஒருவரை ஏற்பாடு செய்கிறேன்" என உங்களை முளைச்சலவை செய்ய முயற்சிப்பார்கள்.

இதற்கு எக்காரணம் கொண்டும் ஒப்புக் கொள்ளக் கூடாது. ஒப்புக் கொண்டால் உங்களின் பல்வேறு உரிமைகளை நீங்களே கொலை செய்து விடுகிறார்கள்.

ஆம்! உங்களின் பிறப்பு உரிமையில் முதல் உரிமையான பேச்சுரிமையை இழந்து விடுகிறீர்கள். பேச்சுரிமை இல்லை என்றாலே, எல்லா உரிமையையும் இழந்து விடுகிறீர்கள்.

**“இலவச சட்ட உதவி மற்றும் சமரச மையம் ஏற்படுத்தப்பட்டதன் மூல நோக்கமே, வசதியற்றவர்களுக்கு வழக்கில் உதவி மற்றும் நீதி”** என்பதுதான்.

ஆனால் இதனை தற்போது வசதியான நிறுவனங்கள் தங்களின் சட்ட ரீதியான கட்டப் பஞ்சாயத்துக்கான கட்டமைப்புகளாக மாற்றிக் கொண்டு விட்டன.

சாதாரண மக்களிடம் கட்டப் பஞ்சாயத்து செய்வதற்கு அடியாட்கள் எப்படி வசதி படைத்தவர்களிடம் கொள்ளைக் கட்டணம் வசூல் செய்கிறார்களோ, அதேபோலப் பணக்கார நிறுவனங்களிடம் இருந்து கொள்கையை மறந்து கொள்ளையடிக்க ஆரம்பித்து விட்டது இவ்வமைப்பு.

இலவச சட்ட உதவி மற்றும் சமரச நடவடிக்கையில் நிறுவனங்கள் மனுதாரராக இருந்து, நீங்கள் எதிர்மனுதாரராக இருந்தால், அந்நடவடிக்கை சட்ட விரோதமானது என்று எழுத்து மூலமாக பதிவு செய்து விடுங்கள்.

எனவே, **“மறந்தும் கூட இலவச சட்ட உதவியை அல்லது சமரச மையத்தை அணுகி விட வேண்டாம்”**.

ஒருவேளை உங்களுடைய பிரச்சினையில் சமரசத்தை விரும்பினால் அதனை நீதிமன்றத்துக்கு



கொண்டு சென்றுதான் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற அவசியமில்லை.

பிரச்சினைக்கு உரிய நபர்கள் இந்திய தண்டனைச் சட்டம் 1860-இன் பிரிவு 30-இன் கீழ் கடப்பாடு ஆவணத்தை எழுதிக் கொண்டாலே போதும். இப்படி எழுதப்படும் கடப்பாட்டு ஆவணம் கூட, அனைத்து வகையிலும் சட்டத்திற்கு உட்பட்டு இருக்க வேண்டும். இல்லையென்றால் சட்ட சிக்கலுக்கு உள்ளாகி செல்லாததாகி விடும்.

**நீதிமன்ற கட்டப் பஞ்சாயத்தை கட்டாய நிதியாகவும், நீதியாகவும் மாற்றுவது எப்படி?**

சமரசத்தால் ஏற்படும் நன்மைகள் குறித்து சட்ட அறிவுக்களஞ்சியத்தில் **“சமரசம் சந்தோசத்தைத் தரும்”** என்ற தலைப்பில் படித்து உணர்ந்திருப்பீர்கள்.

சமரச முயற்சியில் முனைந்து ஈடுபட வேண்டிய நீதிபதிகள் பல சமயங்களில், வழக்கு விசாரணை நடந்து கொண்டிருக்கும் போது நீதிமன்றத்துக்கு வெளியில் வழக்கை சமரசமாக தீர்த்துக் கொள்ளுங்கள் என்று நேரடியாக அல்லாமல் மறைமுகமாக கட்டப் பஞ்சாயத்து செய்கின்றனர்.

இப்படி, சொல்வதற்கு நீதிபதிகளுக்கு எந்த அதிகாரமும் கிடையாது என்ற நிலையில் இதன் நோக்கம் என்னவாக இருக்க முடியும்?

ஒரு தரப்பு மறு தரப்புக்கு கொடுக்க வேண்டிய சட்ட ரீதியான உரிமை பலனை முறையற்ற வகையில் மறைப்பது. இதன் மூலம் நமக்குரிய பிச்சை பங்குத் தொகையை பெற்றுக் கொள்வதென்பதேயாகும்.

"நீதிமன்றத்தில் வழக்கு நடந்துக் கொண்டிருக்கும் போது வழக்கில் சமரசம் செய்து கொள்வதாக இருந்தால் அந்நீதிமன்றத்திலேயே செய்துக் கொண்டு அதற்கான முறையான உத்தவைப் பெற்றுக் கொள்வதுதான் சிறந்தது" என வலியுறுத்துங்கள்.

ஒருவேளை நீதிமன்றம் தனது மறைமுக கட்ட பஞ்சாயத்தில் உறுதியாக (உதவியாக) இருந்தால் அதற்காக நீங்கள் கவலைப்படத் தேவையில்லை.

**மாறாக, இதனை எப்படி நமக்கு நன்மைப் பயக்கும் விதமாக மாற்றிக் கொள்வது என்பதையே நா சிந்திக்க வேண்டியதாகும்.**

நீதிபதியும், கட்டப்பஞ்சாயத்தை விரும்பிய நபரும் தா ஏண்டா இப்படி முட்டாள்தனமாக செய்தோம் என்று மன வருத்தம் அளவிற்கும், வாழ்நாளில் இது போன்று இனிமே தவறு செய்து விடக் கூடாது என எண்ணும் அளவிற்கு உங்கள் திறமையால் நல்ல பாடம் கற்றுக் கொடுக்கலா

நீதிமன்றத்துக்கு வெளியில் நடக்கும் சமரசத்தில் அ குறித்து இருதரப்பு கையொப்பத்துடன் உடன்பா ஒன்றை எழுத்துப் பூர்வமாக எழுதுவார்கள். கூடவே நிவாரணத்தையும் தந்து விடுவார்கள்.

பின் அவ்வுடன்பாட்டை மனுதாரர், நீதிமன்றத்தி சமர்ப்பிப்பார். அதன் உண்மை தன்மைப் பற்றி நீதிப எதிர்மனுதாரரிடம் எழுத்து மூலமாக கருத்தை பதி செய்யக் கேட்பார், அல்லது அது தொடர்பான நீதிமன் ஆவணத்தில் ஒப்பமிடக் கோருவார். அப்படி கேட்கு போதுதான் நீங்கள் உங்களின் கடமையை ஆரம்பிக் வேண்டும்.

உடன்பாடு ஏற்பட்டது உண்மைதான். ஆனால், அ சட்டத்துக்கு உட்பட்டதாக இல்லை என்பதால் வழக்



தொடர்ந்து விசாரணை செய்ய வேண்டியுள்ளது என்பதால் அந்த உடன்பாட்டை ஏற்கக் கூடாது என ஆட்சேபனை செய்கிறேன் என்று பதில் சமர்ப்பித்தால் போதும், கட்டப் பஞ்சாயத்து ஆட்டம் கண்டுவிடும்.

மேலும், இக்கட்டப் பஞ்சாயத்தால் யாராலும் பறிக்க முடியாத இரண்டு நிவாரணங்கள் மட்டும் நிச்சயம். ஒன்று சமரச உடன்பாடு எட்டப்பட்ட போது உடனே கிடைத்த பண நிவாரணம்.

இரண்டு, தன் பக்கம் தவறு இருப்பதால்தான் சமரசம் செய்து கொண்டுள்ளார் என்பதற்கு சமரச உடன்பாடே தக்க சான்றாக இருப்பதால் இவ்வழக்கு உண்மை என்பதை செய்பிக்கவோ அல்லது பொய் என்பதை பொய்ப்பிக்க வேண்டிய பொறுப்பு எனக்கில்லாமல் போய் விட்டது.

மேலும், **"நீதிமன்றம் விரிவாக விசாரணை செய்ய வேண்டிய அவசியமில்லாமல் போய் விட்டது என்பதைக் எடுத்துக் கூறி சட்ட ரீதியான முறையில் தீர்ப்பு வழங்க கோர வேண்டும். அந்நீதிமன்றம் மட்டுமல்லாது வேறு எந்நீதிமன்றும் உங்களுக்கு கொடுக்க வேண்டிய நியாயத்தை மறுக்க இயலாது".**

சட்டத்தை பல்வேறு கோணங்களில் யோசிப்பது பயன்படுத்தி பலனடைவது என்பது இப்படித்தான்.

ஒரு தொழிலாளிக்கு இப்படியொரு யோசனையை சொல்லி புதிய சாதனை படைக்கவும், தொழிலாளர் சமுதாயத்திற்கு தக்கதொரு வழிகாட்டியாகவும் விளங்க அறிவுறுத்தினேன். ஆனால், அத்தொழிலாளியோ பணத்தைப் பார்த்ததும் கடமையை மறந்து விட்டார். **"பணமென்றால் பிணமும் வாயைத் திறக்கும்"** என்ற பழமொழியை இவர் போன்ற உயிருள்ள நடமாடும் நபர்களை உள் அர்த்தத்தில் பிணங்களாக சித்தரித்துதான் சொன்னார்கள் போலும்!

## அத்தியாயம் - 1

### வழக்குத் தொடுக்கும் முன்

வழக்குத் தொடுப்பதற்கு முன்பாக முன்னறிவிப்பு அனுப்ப வேண்டும் என்பது உரிமையியல் விதிகளில் சொல்லப்பட்டு அதிகபட்சமாக நடைமுறையில் இருக்கிறது.

குற்றவியல் சார்ந்த வழக்கு நடவடிக்கைகளில், காசோலை மோசடி போன்று அரிதாக ஒரு சில சட்ட நடவடிக்கைகளில் மட்டுந்தாம் இருக்கின்றன. விதிகள் இல்லாத மற்ற குற்றவியல் நடவடிக்கைகளில் முன்னறிவிப்பு அல்லது விளக்கம் கோருவது என்பது, இதனால் ஏற்படக்கூடிய பின் விளைவுகளையும், உங்களின் விருப்பத்தையும் பொருத்தது.

அதாவது, உங்களின் உரிமை பாதிக்கப்படும் போது அல்லது பறிக்கப்படும் போது அதைத் திருப்பித்தரக் கோரி, எழுத்து மூலமான அறிவிப்பு ஒன்றை அனுப்ப வேண்டும். அதன் நகலைச் சம்பந்தப்பட்ட அதிகார வரம்புள்ள நீதிபதிக்கு அல்லது அதிகாரம் பெற்ற நீதிபதி யார் எனத் தெரியாத போது அம்மாவட்டத்தின் தலைமை நீதிபதிக்கு உரிய சட்ட விதியின் கீழ் சார்பு செய்யலாம்.

### மௌனம் சம்மதமா? சம்மதமாகுமா? எப்போது?!

உங்களின் அறிவிப்பைப் பெற்றவர் தனது தவறை உணர்ந்து உங்களின் உரிமையை வழங்கலாம் அல்லது வழங்க மறுக்கலாம் அல்லது அதில் அவருக்கு உள்ள உரிமையை விளக்கலாம்.

அவ்வாறு விளக்கிய பின், **“இதில் தங்களுக்கு இவ்விளக்கத்தில் உடன்பாடு இல்லை என்றால்**



**தாராளமாக வழக்குத் தொடர்ந்து கொள்ளுங்கள்”** என தார்மீக அனுமதி வழங்கலாம்.

சட்டத்தைக் கையாள்பவர்கள் பலர் அதைத் தவறாகத் தான் பயன்படுத்துகிறார்கள். காலத்தின் கட்டாயத்தால் சட்ட விழிப்புணர்வு அடைந்தவர்களும், அடைய நினைப்பவர்களும் கூட இதற்கு விதிவிலக்கல்ல.

அறிவிப்பு அனுப்பினால் அதற்குப் பதில் அனுப்ப வேண்டும் அல்லது தார்மீக அனுமதி வழங்கலாம் என்பது பற்றி முன்னதாகப் பார்த்தோம். ஒருவேளை அப்படி எதுவும் செய்யவில்லை என்றால், அதன் அடுத்த நிலை என்ன? என்பதே இங்கு எழும் கேள்வி.

பதில் சொல்லவில்லை என்றால் அதில் உள்ள சங்கதிகள் அனைத்தையும் நீதிமன்ற சாசன உறுபு 106 இன் கீழ் உண்மையென ஒப்புக்கொண்டதாக அர்த்தம் என்று எழுதுவதைப் நான் உட்பட பலரும் வழக்கத்தில் வைத்து இருக்கும் ஒன்றுதான்.

நான் இதைத் தற்போது தவிர்த்து விடுகிறேன். ஏனெனில், இது ஒரு சில சூழ்நிலைகளைத் தவிர எல்லா சூழ்நிலைகளிலும் பொருந்தாது.

உங்களின் அறிவிப்புக்குப் பதில் தரவில்லை என்பதால், **“அதில் உள்ள சங்கதிகளை ஒப்புக் கொண்டு விட்டார்.**

**எனவே அவரை எவ்வித விசாரணையும் இன்றி இம்மனு மற்றும் இம்மனுவுக்கான ஆதாரச் சாட்சி, சான்றுகளின் அடிப்படையில் உடனே தண்டிக்க வேண்டும்”** என்று நீதிமன்றத்தை யாராவது கோர முடியுமா? அப்படியே கோரினாலும் கூட நீதிபதிகள்தாம் விசாரணை செய்யாமல் தண்டித்து விடுவார்களா? இயலாதுதானே?!

அப்படியானால், ஒப்புக்கொண்டதாகத்தான் அர்த்தம் என்று சொன்னதன் அர்த்தம்தான் என்ன? அதன் பலன்தான் என்ன?

பதில் தராத காரணத்தால் உங்கள் பக்கம்தான் நியாயமிருக்கிறது என்று கருதி வழக்கு தொடுக்கிறீர்கள். விசாரணையில் உங்களுக்கு நியாமில்லை என்ற அடிப்படையில் வழக்குத் தோல்வியைத் தழுவுகிறது என்ற நிலையில் எதிர்மனுதார் உங்கள் மீது எவ்விதமான சட்ட நடவடிக்கையும் எடுக்க முடியாது.

அப்படியே எடுத்தாலும் கூட, அவர் பதில் தராததால்தான் நடவடிக்கை மேற்கொண்டேன். உண்மை நிலையென்ன என்பதை விளக்கிப் பதில் கொடுத்திருந்தால் நடவடிக்கையைக் கைவிட்டிருப்பேன். பதில் கொடுத்து அதன் உண்மை நிலையை அறிந்தும், அறியாதது போல் வேண்டுமென்றே வழக்குத் தொடுத்துத் தோல்வியுற்று இருந்தால்தான் என்மீது எதிர் சட்ட நடவடிக்கை மேற்கொள்ள முடியும் என்று வாதாடி வெற்றி பெற முடியும்.

## அறிவாளிகளால்தாம் ஆபத்தே

நாட்டில் நிலவுகின்ற பல்வேறு தரப்பட்ட குழப்பங்களுக்கும், பிரச்சினைகளுக்கும் அடிப்படைக் காரணமே அறிவாளிகள்தாம்.

ஆம்! அறிவாளிகள் தமது புத்திசாலித்தனத்தை ஆக்கபூர்வமான கடமைகளுக்குப் பயன் படுத்தாமல், தனது சுயநலத்துக்காகவும், அதிகார போதைக்காகவும், அகங்காரத்துடனும் தனது அறிவை வைத்து யாரை, எப்போது, எப்படி அழிக்கலாம்? என்று நவீன கால யுக்தியில் திட்டம் தீட்டுகிறார்கள் என்பதால்தான் பிரச்சினைகள் குறைந்தபாடில்லை.



ஆனால், முட்டாள்களால், அவர்கள் முட்டாள்களாக இருக்கிறார்கள் மற்றும் அறிவாளிகளின் திட்டங்களை திறமையோடு எதிர்த்து வெற்றியடைய முடியவில்லை என்பதைத் தவிர வேறு பெரிய அளவிலான பிரச்சினை இல்லை என்றாலும் கூட இப்படி இருப்பதும் கூட பிரச்சினைகள் வளர்வதற்கு மறைமுகமான காரணமாக இருக்கிறது.

அப்படியானால், "அறிவாளியாக இருப்பதா? அல்லது முட்டாளாக இருப்பதா?" என்ற கேள்வி எழுகிறதல்லவா?

இதில் குழம்புவதற்கு ஒன்றுமில்லை. அறிவாளிகள் சொல்வது சரியாகத்தான் இருக்குமா? என்பது குறித்துப் பகுத்தாராய வேண்டும். முட்டாள்கள் சொல்வது எந்த விதத்தில் சரியில்லாமல் போகும் எனச் சிந்தித்தால் போதும். நீங்கள் தெளிவாகி விடுவீர்கள்.

## நவீன கால முட்டாள்களும், அறிவாளிகளும்

நவீன கால முட்டாள்களான வக்கீல்கள் மற்றும் நீதிபதிகள் சட்டத்தை எப்படிக் கையாள்கிறார்கள் என்பது குறித்துப் பார்த்து வரும் அதே சமயம், "நவீன கால அறிவாளிகள் அதே சட்டத்தைக் கையில் எடுத்தால் எப்படியிருக்கும் என்பதற்குச் செந்தமிழ்க்கிழார் நல்லதோர் உண்மை".

இவரின் சட்ட விரோத செயல்களைப்பற்றி 'பிணை எடுப்பது எப்படி?' நூலில் 'நியாயமான சட்டத்தைத் தேர்ந்தெடுப்பது மட்டுமே நமது கட்டாய கடமை' என்ற தலைப்பில் குறிப்பிட்டுள்ளேன்.

அதாவது, சட்டம் சரியில்லை என்றால், அதில் தேவைப்படும் திருத்தங்கள் என்னென்ன என்பது

குறித்து ஆராய்ச்சி செய்து ஆதாரப்பூர்வமான விளக்கங்களோடு, ஆதாரங்களோடு தக்க அதிகார அமைப்பிற்கு வழி காட்டலாம்.

வழிகாட்டுதலை ஏற்கவில்லை என்றால் வழக்கு தொடுத்து தேவையானதை கொண்டு வரவோ அல்லது தேவையற்றதை நீக்கவோ முடியும்.

இப்படிப்பட்டதொரு சங்கதி குறித்து, "சமமான சட்டத்தை நீங்களும் நிலைநாட்டலாம்" என்ற தலைப்பில் சட்ட அறிவுக்களஞ்சியம் நூலில் சொல்லியுள்ளேன்.

ஆனால், அப்படிச் செய்யாமல் அதிகாரத்தை தானே எடுத்துக் கொண்டால் அது அர்த்தமற்றதாகவும், அபத்தமானதாகவும் மாறிவிடும்.

இந்திய தண்டனைச் சட்டப்பிரிவு 19-இல், **நீதிபதி என்பது, நீதிபதி பதவியில் இருப்போர், உரிமையியல் அல்லது குற்றவியல் நடவடிக்கைகளில் ஒரு தெளிவான தீர்ப்பினை உரைக்கும் அதிகாரம் பெற்றவரைக் குறிக்கும்.**

இந்த சொல் **"தனி நபரையும் குறிக்கலாம்; குழுவையும் குறிக்கலாம்"** என ஆங்கிலத்தில் இருந்து வடிகட்டின முட்டாள் வக்கீல்களால் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது.

ஆனால், இந்த சொல் **"அதிகாரம் பெற்ற தனி நபரையும் குறிக்கலாம்; குழுவையும் குறிக்கலாம்"** என விளக்கமாக மொழி பெயர்க்கப்பட்டிருக்க வேண்டும்.

இப்படி மொழி பெயர்க்காததால் வந்த விளைவு, **"தனி நபரான நானும், எனது குழுவும் சிறப்பு நீதிபதிகள் என பைத்தியக்காரத்தனமாக செந்தமிழ்கிழார் மற்றும் அவரைச் சார்ந்ததொரு குழுவும் பதவி வெறியில் சொல்லிக் கொள்கிறார்கள்".**



மேலும், தாங்கள் எல்லாம் இந்தியாவின் சிறப்பு நீதிபதிகள் மற்றும் நாங்கள் சொல்வதே சட்டம் என நீதிமன்ற சாசன உறுப்பு 106-இன் கீழ் உறுதிப்படுத்திக் கொண்டுள்ளார்களாம்.

அதாவது, இந்திய தண்டனைச் சட்டம் 19-இன் படி, நாங்கள் இந்தியாவின் சிறப்பு நீதிபதிகள் என்றும், நாங்கள் பாமரர்களுக்கான சட்டங்கள் என்று பல சட்டங்களை எழுதி இருக்கிறோம் என்றும், இதனை தாங்கள் ஏற்க வேண்டும் எனக் கூறி கடிதம் எழுதி இறுதியில் நீதிமன்ற சாசன உறுப்பு 106-ஐ சேர்த்து விட, குடியரசுத் தலைவர் மாளிகையில் இருந்து ஆங்கிலத்தில் கடிதம் வந்துள்ள நிலையில், தமிழ் மொழியாக்கத்தையே தவறாக புரிந்து கொண்டுள்ள நிலையில் ஆங்கிலத்தை புரிந்து கொள்ள என்ன அறிவு இருக்கப் போகிறது?

இப்படிப்பட்ட செயல்கள் எல்லாம், "செந்தமிழ் **கிழாரின் சிந்தனை சிறுத்து விட்டதையேதாம்"** காட்டுகிறது அல்லவா? சட்ட விழிப்புணர்வு தேடலில் உள்ளவர்களே எச்சரிக்கை! எச்சரிக்கை!!

இதைத்தான், **'புத்தியுள்ள மனிதர் எல்லாம் வெற்றி பெற்றதில்லை. வெற்றி பெற்ற மனிதர் எல்லாம் புத்திசாலியில்லை'** என்று தத்துவப் பாடலாக பாடினார்கள் போலும்.

### அறிவிப்பே முதலீடு, முதலீடே பதிலறிவிப்பு

எனவே, **"எதைச் செய்தாலும், அது நியாயம்தான் சட்டம் என்ற அடிப்படையில் சரிதானா?"** என்றும், **"நாட்டில் அமலில் உள்ள சட்டப்படி சரிதானா?"** என்றும் சரி பார்க்க வேண்டும். சரியாக இருந்தால் அதை ஏற்றுக் கொண்டு வழக்கு நடவடிக்கையைக் கைவிட

வேண்டும். அப்படி இல்லை என்றால் அது குறித்து விளக்கமாக எடுத்துக்கூறி மீண்டும் அறிவிப்பு அனுப்பிச் சரி பார்க்கச் சொல்லலாம்.

ஒரு சில சமயங்களில் நாட்டில் அமலில் உள்ள சட்டமே சட்டத்தின் முன் அனைவரும் சமம் அல்லது நியாயம்தான் சட்டம் என்பதற்கு புறம்பாகவும் இருக்கலாம். அப்படி இருந்தால் அதைப்பற்றி கவலைப்படாமல் இது குறித்தும் விளக்கமாக எடுத்துரைத்து அறிவிப்பு அனுப்பி சரி பார்க்கச் சொல்லலாம்.

அப்படி வரப்பெற்ற பதிலுக்குத் திரும்பவும் தனது கருத்தை நிலைப்பாட்டை உறுதிப்படுத்தி அல்லது வழக்குத் தொடுத்து நிவாரணம் பெற்றுக் கொள்ள வலியுறுத்தலாம்.

இதற்கு பின்தான் வழக்கு தொடுக்க முயற்சிக்க வேண்டுமே தவிர, திரும்பத் திரும்ப அறிவிப்பு அனுப்பக் கூடாது. அப்படியே அனுப்பினாலும் ஒவ்வொன்றுக்கும் பதில் அனுப்பிக் கொண்டிருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.

ஏனெனில், வேலை வெட்டி இல்லாத சில பேர் தொந்தரவு செய்ய வேண்டும் என்பதற்காகவே தேவையில்லாத வகையில் எல்லாம் அறிவிப்பை அனுப்பிக் கொண்டிருப்பார்கள். இதற்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருந்தால் நமது முக்கிய வேலைகளில் கவனம் செலுத்த முடியாமல் போய்விடும்.

இப்படி அறிவிப்பு அனுப்புவது அரசு ஊழியர்களுக்கும் பொது ஊழியர்களுக்கும் கூட பொருந்தும். இப்படி அனுப்பும் போது ஒரு சிலர் தடாலடியாக எந்த வித காரணமுமே இல்லாமல், மரியாதையாக மன்னிப்பு கேள் அல்லது அறிவிப்பை திரும்பப் பெறு அல்லது வழக்கு தொடுப்பேன்



என சில அரைவேக்காடுகள் மிரட்டுவார்கள்.

மேலும், அறவே வேகாத வேக்காடுகள் மிரட்டும் நோக்கத்தோடு சங்கத்துக்கென உள்ள லெட்டர்பேடில் அல்லது தான் இதுபோன்ற நடவடிக்கைகளில் எல்லாம் இருப்பதாகக் கண்ட கண்ட பொறுப்புகளை எல்லாம் கூறியும் மிரட்டுவார்கள் என்பது வாசகர்களிடம் இருந்து எனக்கு கிடைத்த அனுபவம்.

ஒருவேளை இப்படி ஏதும் கடிதம் வந்தால், வேறு எதுவுமே சொல்லாமல், உங்களின் கோரிக்கையை ஏற்று, இப்பதில் கிடைக்கப்பெற்ற ஒரு வாரத்திற்குள் என்மீது வழக்குத் தொடுக்க தார்மீக அனுமதி வழங்குகிறேன். வெற்றி பெற நல்வாழ்த்துக்கள் என்றும் அப்படித் தொடுக்கவில்லை என்றால் பிறகு நான் தொடுப்பேன் என்று சவால் விடும் வகையில் பதில் அனுப்பினால், கவர்னரே கூட கப்சிப் ஆகி விடுவார்.

ஆம்! இப்படி பதில் கொடுத்து குடியரசுத் தலைவர், நீதிபதிகள், வக்கீல்கள் மற்றும் முட்டாள் வாசகர்கள் என அனைவரையும் கப்சிப் ஆக்கிய அனுபவம் எனக்கு நிறையவே உண்டு.

தவறான உரிமையியல் வழக்குத் தொடுக்கப்பட்டால், அவ்வழக்கிலேயே உங்களிடம் இருந்து எதிர்மனுதார் எதிர் கோரிக்கை மூலம் பலனடைய முடியும். குற்றவியலைப் பொறுத்தவரை, நீதிநிர்வாகத்தைப் பாதிக்கச் செய்த குற்றத்துக்காக, நடவடிக்கை மேற்கொண்டு தண்டனைக்கு உள்ளாக்க முடியும் என்பதை மறந்து விட வேண்டாம்.

மொத்தத்தில், வழக்குத் தாக்கல் செய்ய நினைப்பவருக்கு அறிவிப்பே முதலீடு என்றால் அதை எதிர்கொள்ள நினைப்பவருக்கு முதலீடே பதிலறிவிப்புத்தான்.

## வக்கீல்கள் வழுக்கி விழ

நாம் நாட்டில் வாழும் பல வக்கீல்கள் தாங்களெல்லாம் ஆங்கிலேயர்களுக்குப் பிறந்தவர்கள் போல் ஆங்கிலத்தில் தான் அறிவிப்பு அனுப்புவார்கள்.

அப்படிப்பட்ட அறிவிப்புகள் பெரும்பாலும், உண்மையில் நடந்தது என்னவோ அதற்கு நேர் மாறாகத்தான் இருக்கும். தாய் மொழியில் அறிவிப்பு இருந்தால், அதற்கு ஏற்றார்போல் பதில் கொடுக்க வேண்டும்.

அறிவிப்பு உங்களின் தாய் மொழியில் இல்லாது இருந்தால், "எனக்கு ஆங்கிலம் தெரியாது என்பதால், அதனை எனது தாய்மொழியான தமிழில் மொழி பெயர்த்த தர கோருகிறேன் என்றும், அப்படித் தரும் வரை அதில் உள்ள சங்கதிகள் என்னை எந்த விதத்திலும் கட்டுப்படுத்தாது என்றும், அதனால் வரும் விளைவுகளுக்குத் தாங்களே தார்மீகப் பொறுப்பு" என்றும் அனுப்பலாம்.

மேலும், தாங்கள் ஆக்ஸ்ஃபோடு யுனிவர்சிட்டியில் ஆங்கிலத்தில் படித்தவர் அல்ல என்பது எனக்கு நன்றாகவே தெரியும் என்பதால் நமது தாய் மொழியில் மொழி பெயர்த்துத் தருவது நியாயமானதே என்றும் தெரிவித்துப் பதில் அனுப்ப வேண்டும்.

நியாயத்திற்கு புறம்பான அறிவிப்பாக இருந்தால், "கண்ணால் காண்பதும் பொய், காதால் கேட்பதும் பொய், தீர விசாரிப்பதே மெய்" என்ற அடிப்படையில் நடந்தது என்ன என்பது தெரியாமலேயே புரிந்துபேசும் அடிப்படையில் அல்லாமல் பரிந்து பேசும் அடிப்படையில் (வக்காலத்து வாங்குவது) தவறான ஆலோசனைகளை எடுத்துக் கூறியுள்ளீர்கள்.



"இவ்வறிவிப்பின் மூலம் உங்களின் கட்சிக்காரரான எனது நண்பரின், சகோதரரின் (பிற உறவு முறைகளை குறிப்பிட்டு) அவரின் சொத்துக்களை உங்களின் சொத்துக்களாக்க முயற்சி மேற்கொள்ளும் விதமாக நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்துத் தீரத்தீர (அவரின் சொத்து, பணம் தீரத்தீர) விசாரணை செய்ய திட்டமிட்டு உள்ளீர்கள். வெற்றி பெற வாழ்த்துக்கள்" என்று தெரிவித்து நேரடியாகவே வக்கீலுக்கு பதில் அனுப்பலாம்.

வக்கீல்களுக்குச் சட்டம் தெரியாது என்பது உட்பட வக்கீல் தொழில் பற்றிய அனைத்து உண்மைகளையும் உங்களின் எதிர்மனுதாரருக்கும் விளங்க வைப்பதற்காக அதன் நகலை எதிர்தரப்பினருக்கு அனுப்புவதோடு, நீதிமன்றத்துக்கும் அனுப்ப வேண்டும்.

எது எப்படி இருப்பினும், "தங்களுக்கு இது போன்றதொரு சட்ட அறிவிப்பை அனுப்ப எந்தச் சட்ட அதிகாரமும் இல்லை என்ற நிலையில், சட்டத்துக்குப் புறம்பான இவ்வறிவிப்பு நீதிமன்ற சாசனத்தின் உறுபு 126 க்கு எதிரானது என்பதால், இது தொடர்பாக எழும் எந்த ஒரு வழக்கிலும் தாங்களை அச்சட்டத்தின் உறுபு 128-இன் கீழ் முக்கிய சாட்சியாக அழைத்து விசாரிக்க உள்ளதால் இவ்வழக்கை ஏற்று நடத்த எந்தச் சட்டத் தகுதியும் இல்லை" என்றும் குறிப்பிடலாம்.

இப்படி குறிப்பிட்ட பின் அவர்கள் அவ்வழக்கில் வாதாடக்கூடாது. வாதாடினால், சட்டப்பிரச்சினையை எழுப்பி மனு கொடுக்கலாம்.

குறிப்பிட்ட கால அவகாசத்தில் வழக்குத் தொடரத் தார்மீக அனுமதி அளிக்கிறேன். தாங்கள் இக்காலத்திற்குள் தொடரவில்லை என்றால், உங்கள் மீது நான் தொடர வேண்டி வரும் என்றும் எச்சரிக்கலாம்.

**வக்கீல் மீது வழக்குத் தொடர அறிவிப்பு**

வக்கீல்கள் மீது வழக்கை முறையாக நடத்தாதது உட்பட யாது காரணத்துக்காகவும் வழக்குத் தொடுக்கலாம்.

இது குறித்து அறிவிப்பு அனுப்பினால், **"நான் தங்களுக்காகக் கட்டணம் ஏதும் வாங்காமல் இலவசமாகத்தான் வாதாடினேன்.**

**ஆனால், தாங்கள் எனது நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுத்தும் வகையில் அறிவிப்பு அனுப்பி உள்ளீர்கள். இதற்காக உடனே மன்னிப்பு கோர வேண்டும். இல்லா விட்டால் உங்கள் மீது கிரிமினல் மற்றும் சிவில் வழக்குகள் தொடுக்க நேரிடும்"** எனத் தான் மட்டுமே புத்திசாலி என நினைத்து முட்டாள் தனமாக பதில் கொடுப்பார்கள்.

ஆம்! வழக்கறிஞர் தொழிலும் ஒரு தொழிலே என்ற அடிப்படையில், வழக்கறிஞர்கள் தான் ஈட்டிய வருவாய்க்குத் தக்கவாறு அரசுக்கு வருமான வரி சட்டம் 1961-இன் பிரிவு 28-இன்படி வரி செலுத்த கடமைப் பட்டவர்கள்.

இதனால், வருமான வரிச் சட்டப்பிரிவு 44 இன் கூடுதல் உட்சேர்க்கை 11 (அதாவது 44 எஎ) மற்றும் வருமான வரி விதிகள் 1962-இன் விதி 6 இன் கூடுதல் உட்சேர்க்கை 6 இன்படி (அதாவது 6 எஃப்) பணக்குறிப்பேடு, வணிக நடைமுறை கணக்கு பராமரிப்பு குறிப்பேடு, பேரேடு ஆகியனவற்றை, சம்பந்தப்பட்ட ஆண்டில் இருந்து பதினேழு ஆண்டுகள் வரை பராமரித்து வரவேண்டும்.

அப்படிப் பராமரிக்கவில்லை என்றால், பிரிவு 271-இன்படி இரண்டாயிரம் முதல் ஒரு லட்சம் வரை



அபராதம் தண்டனையாக விதிக்கப்படும்.

இதன் நோக்கத்திற்காக இந்திய வழக்கறிஞர் தொழில் விதிகளின் விதி 38-இன்படி, வரி கட்ட வேண்டிய கட்டணத்தை விடக் குறைவான கட்டணத்தை வசூல் செய்ய கூடாது என அறிவுறுத்துகிறது.

ஆனால், **"இவர்களுக்குத்தான் சட்டமே தெரியாதே. அதனால், கட்டணமே வாங்கவில்லை, இலவசமாகத் தான் வாதாடினேன் என்றால் அவர்களுக்கான தொழில் விதிகளில் கூட அறியாமையைப் பறைச்சாற்றுவார்கள்".**

**இதற்கு மேற்சொன்னவாறு பதில் கொடுத்தால் போதும், நீங்கள் எந்த வித ஆதாரமும் இல்லாமல் கொடுத்த பணம் ஆதாரபூர்வமான வகையில் உங்கள் வீடு வந்து சேரும் என்பது நமக்கு கிடைத்த அனுபவம்.**

சில சமயங்களில் வக்கீல் உங்களின் வழக்கில் முன்னிலையாகாத காரணத்தால் ஒரு தலைப்பட்சமாக தீர்ப்பு வழங்கப்பட்டால், அதற்காக வக்கீல்கள் மீது நுகர்வோர் சேவை குறைபாடு வழக்கை நீங்கள் தொடுக்க முடியும் என்பதையெல்லாம் சட்ட அறிவுக் களஞ்சியத்தில் படித்து உணருங்கள்.

சட்ட அறிவுக்களஞ்சிய நூலின் பின்பக்க அட்டையில் தொகுக்கப்பட்டுள்ள வக்கீல்கள் மற்றும் நீதிபதிகள் குறித்து மகாத்மா காந்தியின் கருத்துக்களைப் பொது நலன் கருதி உங்களின் பெயரில் துண்டு பிரசுரமாக வினியோகம் செய்ய உள்ளேன் எனத் தகராறு செய்யும் வக்கீலிடம் தெரிவித்து மாதிரி ஒன்றை தயார் செய்து கொடுத்தால் போதும்.

'காச்மூச்' என்று சத்தம் போட்ட வக்கீல்கள் எல்லாம் **"கப்சிப்"** என அடங்கி விடுவார்கள்.

## வரியை ஏய்க்கும் வக்கீல்கள்

மற்றவர்களை ஏய்த்துப் பிழைக்கும் பிழைப்பே வக்கீல் பிழைப்பு என்பதை இப்போது நன்றாகவே புரிந்திருப்பீர்கள். வருமானவரிச் சட்டத்தின்படி வக்கீல் தொழிலும் ஒரு தொழிலே என்ற அடிப்படையில் அவர்களும் வரி செலுத்தக் கடைமைப்பட்டவர்கள் என்பது குறித்து பார்த்தோம் அல்லவா?

ஆனால், பெரும்பாலான வக்கீல்கள் நாட்டிற்குச் செலுத்த வேண்டிய வரியைக்கூட செலுத்தாமல் ஏமாற்றிக் கொண்டுதான் இருக்கிறார்கள். பல்வேறு துறை சார்ந்தவர்களின் இல்லங்கள், தொழிற்சாலைகளில் அதிரடி ஆய்வு செய்து வரி ஏய்ப்பைக் கண்டு பிடித்து சட்ட நடவடிக்கை மேற்கொள்ளும் வருமான வரித்துறை வக்கீல்களை மட்டும் கண்டு கொள்வதே இல்லை.

**“வக்கீல்கள் சட்டம் தெரிந்தவர்கள் என்பதால் அவர்களிடம் நமது அதிரடி நடவடிக்கைகள் எடுபடாது”** என்ற அறியாமையில்தான் வருமான வரித்துறையும் உள்ளது.

வங்கி, காப்பீட்டு நிறுவனங்கள் போன்றவற்றில் சட்ட ஆலோசகர்களாக இருக்கும் வக்கீல்களுக்குத் தக்க ஆதாரத்தோடுதான் ஊதியம் வழங்கப்படுகிறது என்றாலும் கூட அந்த ஆதாரங்களும் வரி செலுத்தத் தேவையில்லாத சம்பாத்தியத்திற்குத் தக்கவாறே பராமரிக்கிறார்கள்.

இப்படியெல்லாம் ஏய்த்துப் பிழைக்கும் வக்கீல்களோ வரி செலுத்தும் அளவிற்கு ஏது வருமானம் என்ற கேள்வியின் மூலம் தனது வக்கீல் புத்தியைக் காட்டாமல் இருப்பதில்லை. ஒருசில வக்கீல்களைத் தவிர பெரும்பாலான வக்கீல்கள் மாடமாளிகை, கார் என சொகுசு வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது நீதிமன்ற வளாகத்தில் நிற்கும் வக்கீல்களின் வாகனங்களே ஆதாரம்.



## வழக்குத் தோற்றாலும் வழக்குத் தொடரலாம்

**“ஒரு வழக்கு நியாயமானதா? இல்லையா?”** என்பதை மகாத்மா காந்தி போன்ற நியாயமான, திறமையான வக்கீல்களால் முடிவு செய்து விட முடியும். நியாயமான வழக்கை மட்டுமே ஏற்று நடத்த வேண்டும். வழக்கு நடத்தி வெற்றி பெற்றால் மட்டுமே கட்டணம் கொடுக்க வேண்டும்.

**“வழக்கு வெற்றி பெறாதவரை எவ்வித கட்டணமும் கொடுக்க வேண்டியதில்லை என்ற சட்டம் இங்கிலாந்தில் அமலில் இருப்பதாக உறுதியாகத் தெரிகிறது”.** இது குறித்து ஆராய்ச்சி நடைப் பெறுகிறது. இது போன்றதொரு சட்டம் இந்தியாவிலும் கொண்டு வரப்பட வேண்டும்.

அதுவரை, “வாங்கிய பொருளில் குறைபாடு என்றால் எப்படி நுகர்வோர் வழக்குத் தொடுத்து உரிய கட்டணத்தை அல்லது நஷ்ட ஈட்டோடு பொருளை மாற்றிப் பெறுகிறோமோ அதுபோல, வக்கீலிடம் வழக்கைக் கொடுத்து ஏமாந்தவர்கள் நுகர்வோர் வழக்கு தொடுத்து உரிய நஷ்ட ஈட்டோடு, கொடுத்த கட்டணத்தைத் திரும்பப் பெற வேண்டும்”.

## நகலை ஏன் நீதிமன்றத்துக்குச் சமர்ப்பிக்க வேண்டும்?

நமது பிரச்சினையை நாமே தீர்த்துக் கொள்வதில் உள்ள முக்கிய அம்சங்களில் செலவைக் குறைப்பது என்பது மிகவும் முக்கியமானது. எவ்வளவுக்கு எவ்வளவு சிக்கனமாக இருக்கிறோமோ அவ்வளவுக்கு அவ்வளவு வலிமையுடன் எதிர்த்துப் போராட முடியும்.

**பொதுவாக எப்படிப்பட்ட பிரச்சினையையும் ஒரேயொரு அறிவிப்பில் கூட தீர்த்து விட முடியும். இப்படி நான் தீர்த்ததில் மிக முக்கியமானதுதான் தகவல்**

அறியும் உரிமை விண்ணப்பத்திற்கு கட்டணம் ரூ-50 ஐ ரூ-10 ஆக குறைத்து. இப்படிச் செய்வதற்குச் சரியான சட்ட அதிகாரம் யாருக்கு இருக்கிறதோ அவர்களுக்கு மட்டுமே அறிவிப்பை அனுப்ப வேண்டும்.

அறிவிப்புகள் மட்டுமல்லாது எந்த ஒரு ஆவணத்தையும் நேரடியாகக் கொடுத்து அதற்கான நகலில் ஒப்புதல் பெறுவதே சிறந்த முறை.

அறிவிப்பின் நகலை நீதிமன்றத்துக்குச் சமர்ப்பிப்பதாக இருந்தால் முதலில் நேரடியாக நீதிமன்றத்தில் சமர்ப்பித்து அதற்கான ஒப்புதலைப் பெற்று, அதை அப்படியே நகல் எடுத்துச் சம்பந்தப்பட்ட நபர்களுக்கு அனுப்பி வைப்பதன் மூலம் நீங்கள் நிச்சயம் நீதிமன்றத்துக்கு செல்வீர்கள் என்பதை உணர்த்தலாம்.

நகலைப் பெறும் நீதிமன்றம் குற்றவியலைச் சார்ந்ததா? அல்லது உரிமையியலைச் சார்ந்ததா? என்பதைப் பொறுத்து கு.வி.மு.வி இன் விதி 2(7) மற்றும் 2(4) அல்லது உ.வி.மு.வி இன் விதி 90-இன்படி, "யாருக்கு அறிவிப்புத் தரப்பட்டுள்ளதோ அந்த நபருக்கு அவ்வறிவிப்புத் தொடர்பாக குறிப்பிட்ட கால அளவிற்குள் விளக்கம் தரக் கேட்டுக் கடிதம் அனுப்பி முதல் கட்ட நடவடிக்கையை எடுக்க வேண்டும்".

சம்பந்தப்பட்டவரிடமிருந்து குறிப்பிட்ட கால அளவிற்குள் பதில் வந்தால் அதை மனுதாரருக்கு அனுப்பி விளக்கம் கேட்க வேண்டும். மனுதாரர் அவ்விளக்கத்தை ஒத்துக் கொள்ளாத பட்சத்திலும் அல்லது நீதிமன்றம் குறிப்பிட்ட கால அளவிற்குள் அறிவிப்புக்குப் போதிய விளக்கத்தை தரவில்லை என்றாலோ நீதிமன்றமே சுயவிருப்ப அடிப்படையில் வழக்கைப் பதிவு செய்து முறைப்படி விசாரித்துத் தக்க நீதி வழங்க வேண்டும்.



ஆனால், இப்படி எந்த நீதிமன்றமும் செய்வதில்லை. காரணம், வக்கீல்களுக்கும், வக்கீல்களாய் இருந்து நீதிபதிகளான நீதிபதிகளுக்கும் இப்படியெல்லாம் சட்டம் இருக்கிறது என்பது தெரியாததுதான். நீங்கள்தான் இதையெல்லாம் நடைமுறைப்படுத்தி சட்டத்தில் சாதனைப் புரட்சி செய்ய வேண்டும்.

## ஆணையங்களைப் பற்றியதோர் அலசல்

அண்மையில் சென்னையைச் சேர்ந்த வாசகர் காவல்துறை உதவி ஆய்வாளருக்கு எதிராக அறிவிப்பு அனுப்பி அதன் நகலை தமிழ்நாடு மாநில மனித உரிமை ஆணையத்திற்கு அனுப்பி வைத்து, அவ்வறிவிப்பையே மனித உரிமை ஆணைய வழக்கு எண் 2077/09 ஆகப் பதிவு செய்ய வைத்துச் சாதனை படைத்துள்ளார் என்பதோடு இறுதியாக கிடைத்த தகவலின் படி, எதிர்மனுதாரர் ஆன உதவி ஆய்வாளரிடம் இருந்து ரூ-50 ஐ செலவுத்தொகையாகவும் ஆணையத்தின் உத்தரவின் பேரில் பெற்றுள்ளார்.

மனித உரிமை வழக்கைப் பொறுத்தவரை; குற்றவியல் மற்றும் உரிமையியல் என்ற இரண்டு தன்மைகளிலும் விசாரணை செய்யப்படுகின்றன.

மனித உரிமை பாதுகாப்புச் சட்டம் 1993-இன் பிரிவு 30-இன் புகார் செய்தால் மாவட்ட அமர்வு நீதிமன்ற மன்றமே மனித உரிமை நீதிமன்றம் என்பதால் அறிவிப்பின் நகலை மனித உரிமை ஆணையம் அல்லது மனித உரிமை நீதிமன்றமான அமர்வு நீதிமன்றத்துக்கு பிரிவு 30-இன் கீழ் சமர்ப்பிக்க வேண்டும்.

இப்படி சமர்ப்பிக்கப்படும் அறிவிப்பை வழக்காக எடுத்துக் கொள்ளா விட்டாலும் கூட மனுவாக பிரிவு 30-இன் கீழே சமர்ப்பிக்கலாம். இப்படி சமர்ப்பிக்கப்படும்

மனுவின் மீதான விசாரணை கு.வி.மு.வி இல் சொல்லப்பட்ட படியே நடக்க வேண்டும்.

இப்படி சமர்ப்பிக்கப்படும் மனு வருடத்திற்கு சராசரியாக சுமார் ஐந்துதான். இதிலும் உருப்படியாக யாரும் நிவாரணம் பெற்றதாக இதுவரை எனக்குத் தெரியவில்லை. மனித உரிமை ஆர்வலர்களும், அமைப்புகளும் எந்த அளவிற்கு **'கடைமை'**யை ஆற்றுகிறார்கள் என்பதற்கு இதுவே தக்கச் சான்று.

மனித உரிமை ஆணையத்தில் கொடுக்க வேண்டும் என்றால் பிரிவு 10(2)-இன் கீழ் கொடுக்கலாம். இப்படி கொடுக்கும் மனுவை சம்பவம் நடந்த ஒரு வருடத்துக்குள் கொடுக்க வேண்டும் எனக் கால நிர்ணயம் செய்திருக்கிறார்கள். இது நியாயமானதாகத் தெரியவில்லை. இது குறித்து மேலும் விரிவாக கால நிர்ணயம் தேவையா? என்ற தலைப்பில் பார்ப்போம்.

**சிறப்பு குறிப்பு :** மனித உரிமை ஆணையத்திற்கு சமர்ப்பிக்கப்படும் அறிவிப்பை அல்லது மனுவை மற்ற எந்த அதிகார அமைப்பிற்கும் சமர்ப்பிக்க கூடாது. அப்படி சமர்ப்பித்தால் அவ்வதிகார அமைப்பு நடவடிக்கை எடுக்கும் என்ற அடிப்படையில் மனு எடுத்த எடுப்பிலேயே நிச்சயமாக நிராகரிக்கப்படும். எச்சரிக்கை.

மனித உரிமை மட்டுமல்லாது எவ்வித ஆணையமாக இருந்தாலும் விசாரணைக்காக கொடுக்கப்படும் மனு விசாரணை ஆணையங்கள் சட்டம் 1952-இன் பிரிவு 4-இன் அறிவுருத்தலுக்கு ஏற்ப, உ.வி.மு.வி இன் விதி முறைகளின்படி விசாரணை செய்யப்பட்டு தீர்வு காணப்படும்.

ஆணையங்களின் செயல்பாடுகளை களையெடுக்க விரும்புவோர் விசாரணை ஆணையங்கள் சட்டம் 1952-ஐ தெரிந்து கொள்ள வேண்டும்.



## சிக்கனமான சிறப்பான சான்று அஞ்சல்

அறிவிப்புகளை நேரில் சமர்ப்பிப்பதில் இடைஞ்சல் ஏதும் இருந்தால் அஞ்சலில்தான் அனுப்ப வேண்டியிருக்கும்.

சாதாரண அஞ்சல், சான்று அஞ்சல், பதிவு அஞ்சல், விரைவு பதிவு அஞ்சல் மற்றும் தனியாருக்குச் சொந்தமான தூதஞ்சல் (கூரியர்) என பல விதமான அஞ்சல்கள் பல்வேறு கட்டணங்களில் அமலில் உள்ளன.

சாதாரண அஞ்சலில் என்பது அஞ்சல் செய்ததற்கும், அதைப் பெற்றுக் கொண்டதற்கும் ஆதாரம் ஏதும் இருக்காது. சான்று அஞ்சல் என்பது நாம் அஞ்சல் செய்ததற்கு ஆதாரம் இருக்கும். ஆனால், யாருக்கு அனுப்பினோமோ அவர்கள் பெற்றுக் கொண்டார்கள் என்பதற்கு ஆதாரம் ஏதும் இருக்காது.

பதிவு அஞ்சல் என்பது அனுப்பியதற்கும், பெற்றதற்கும் ஆதாரமாகி விடும். விரைவுப் பதிவு அஞ்சல் என்பது அனுப்பியதற்கும், பெற்றதற்கும் ஆதாரமாகி விடும் என்பதோடு பெறுநர் பெற்றுக் கொண்டார் என்பதற்கான அத்தாட்சி ஒப்புகையை நீங்கள் பெற்றுக் கொண்டீர்கள் என்பதற்கு அஞ்சல் துறை உங்களிடம் ஒப்பத்தை பெற்றுக் கொள்ளும்.

தனியார் நிறுவனங்கள் நடத்தும் தூதஞ்சல், குறைந்த செலவில் அஞ்சல் துறையின் விரைவு பதிவு அஞ்சலில் உள்ள சங்கதிகள் அனைத்தும் இருந்தாலும், வழக்கு நடவடிக்கை என்று வரும் போது செல்லாததாகி விடும்.

ஏனெனில், தூதஞ்சலைப் பட்டுவாடா செய்பவர்கள் நிரந்தரப் பணியாளர்களாக இல்லாமல் நல்ல வேலை கிடைக்கும் வரை கிடைக்கும் வேலையைச் செய்வோம் என்ற நிலையில் குறைந்த ஊதியத்திற்கு வேலைக்குச்

சேர்ந்து பின்னர் நின்று விடுவார்கள்.

வழக்கில் தூதஞ்சலை ஒப்பமிட்டு பெற்றுக் கொண்டவர் ஒப்பம் என்னுடையது அல்ல என மறுத்தால் ஒன்று, தூதஞ்சலை ஒப்படைத்த நபரை அழைத்து விசாரணை செய்து அவர்தான் பெற்றார் என்பதை நிரூபிக்க வேண்டும். இதற்காக, அவ்வூழியரை எங்கே போய்த்தேடுவது?

இதற்கு வாய்ப்பில்லை எனும்போது தடய அறிவியல் சோதனைக்குத்தான் உட்படுத்த வேண்டியிருக்கும். இதனால், கால விரயம், பண விரயம் இரண்டுமே ஆகும். எனவே சான்று அஞ்சலே மிகவும் சிக்கனமானதோடு, சிறப்பானதாகவும் இருக்கிறது.

**அஞ்சல் மூலமாக அனுப்பப்படும் எது ஒன்றையும் சான்று அஞ்சலில் அனுப்ப தற்போதைய கட்டண விகிதத்தின்படி, ரூ.3 மட்டுமே கூடுதல் செலவாகும்.**

இக்கூடுதல் செலவில் உங்களின் திறனைப் பொறுத்து ஒன்று முதல் மூன்று அஞ்சல்கள் வரை செய்யலாம். அதாவது மூன்று கடிதங்கள் வரை மூன்று ரூபாய்தான். கூடுதலாக ஒன்று என்றால் கூட மேலும் மூன்று ரூபாய்தான் செலவாகும். இப்படி ஒரு நபர், ஒரே நேரத்தில் எத்தனை கடிதங்களை வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும் அனுப்பலாம்.

இப்படிப்பட்ட அஞ்சலுக்கு வழக்கம் போலவே கடிதங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும். பின் அக்கடிதத்தின் மேல் பகுதியில் **"சான்று அஞ்சல்"** எனக் குறிப்பிடல் வேண்டும்.

பின்னர், இப்புத்தக அளவுள்ள ஒரு வெள்ளைத் தாளின் மேலே சான்று அஞ்சல் என குறிப்பிட்டு விட்டு பின், அனுப்புதலில் உங்களின் முழு முகவரியையும்,



பெறுதலில் யார் யாருக்கு கடிதம் அனுப்புகிறீர்களோ அவர்களின் முழு முகவரியையும் எழுதி அதன் பின் அனுப்பும் கடிதங்களுக்கு தக்கவாறு அஞ்சல் முத்திரை வில்லையை ஒட்ட வேண்டும்.

**சான்று அஞ்சலின் மாதிரி இதோ...**

இக்காகிதத்தோடு, கடிதங்களை அஞ்சல் நிலைய அலுவலரிடம் **"சான்று அஞ்சல்"** எனச் சொல்லிக் கொடுத்தால், முகவரிகளைச் சரிபார்த்து விட்டு அஞ்சல் முத்திரை மீது, அஞ்சலக முத்திரை இட்டுக் கொடுப்பார்கள்.

கூடவே, அதில் எத்தனைக் கடிதம் பெற்றுக் கொள்ளப்பட்டது என்பதைக் குறிப்பு எழுதி அதைப் பெற்றுக் கொண்ட அலுவலர் கையொப்ப மிட்டு தர வேண்டும் என்பது அஞ்சலக சட்ட விதியாக இருந்தாலும் கூட ஒரு சில அலுவலர்கள் மட்டுமே பின்பற்றுகிறார்கள். நீங்கள் கேட்டு வாங்குவது உங்களின் திறமையைப் பொறுத்து.

**முக்கிய குறிப்பு**

**இந்திய அஞ்சல் துறை வணிக நோக்கோடு இச்சான்று அஞ்சல் முறையை தனது, Department of Posts letter No 2-4/2008-PO dated 23.2.2011 இன் மூலம் ரத்து செய்துள்ளது. இதற்கான Gazette Notification No 58(E) dated 31.1.2011 அன்று வெளியிடப்பட்டுள்ளது. இதனை திரும்பவும் கொண்டு வருவதற்கான முயற்சிகளை மத்திய அரசும், ஆர்வலர்களும் முயற்சிக்க வேண்டும்.**

இதுவே இன்னின்னாருக்கு இன்னின்ன தேதியில் நீங்கள் கடிதம் அனுப்பினீர்கள் என அஞ்சல்துறை வழங்கும் சான்றாகும் என்பதால் இதைப் பத்திரமாகப்

பாதுகாக்க வேண்டும். தனித்தாளாக இருப்பதால் பாதுகாப்பது கடினம். இது போன்ற சிரமங்களைத் தவிர்ப்பதற்காக ஒரு நோட்புக்கைக் கூட பயன்படுத்திக் கொள்ளலாம்.

**அஞ்சல் ஊழியர்களையும் சமாளிக்கணும்**

சில ஊழியர்கள் சான்று அஞ்சலுக்கான சான்றில், அனுப்புதல் முகவரி இருக்கக் கூடாது என்றும் பெறுதல் முகவரி மட்டுமேதான் இருக்க வேண்டும் என்றும் தங்களின் அறிவு வறுமையைப் பறைசாற்றுவார்கள்.

**சரிங்க, நீங்கள் எனக்குத் தரும் இந்த அஞ்சல் சான்றை இங்கேயே தவறவிட்டு விட்டு சென்று விடுகிறேன்.**

**இதனை, "கண்டெடுக்கும் நீங்கள் என்னிடம் ஒப்படைக்க வேண்டியது கட்டாய சட்டக் கடமை என்ற நிலையில் என்னுடைய முகவரி இருந்தால்தானே ஒப்படைக்க முடியும்? இதை எந்த சட்ட விதி தடுக்கிறது?"** என்று கேள்வி எழுப்பி உங்களின் புத்திசாலித்தனத்தை நிரூபிக்கலாம். ஊழியர்களின் அறியாமையை அகற்றலாம்.

**சான்று அஞ்சலை நீதிமன்றத்தில் நிலை நிறுத்துவது எப்படி?**

நீதிமன்ற விசாரணையில், சான்று அஞ்சல் மூலம் எனக்கு அனுப்பிய கடிதம் வரவில்லை என்று எதிர்தரப்பில் சொன்னால் அதற்காகக் கவலைப்படத் தேவையில்லை. நீதிமன்றத்துக்கு அவ்வறிவிப்பின் நகலை அனுப்பி இருப்பீர்கள் இல்லையா? அது கிடைத்து அதற்கு வரிசை எண்ணிட்டு வைத்திருப்பார்கள்.



அது பற்றி விபரம் தெரிந்தால், **"நீதிமன்றத்துக்குக் கிடைத்திருக்கும் போது உங்களுக்கு எப்படிக் கிடைக்காமல் போகும்?"** எனக் கேள்வி எழுப்பி நீதிமன்றத்துக்கு உங்கள் தரப்பு நியாயத்தை உணர வைக்கலாம்.

இது தவிர, **"நீதிபதியிடம் அய்யா, அவர் வரவில்லை என்று சொல்வதால், இப்போது நீங்களே அறிவிப்புகளை நேரடியாக அவருக்குக் கொடுத்து விடுங்கள். பதில் தர ஏதுவாக பதினைந்து நாள் கால அவகாசத்தில் வழக்கை ஒத்தி வையுங்கள். என்ன பதில் சொல்கிறார் என்பதைப் பொறுத்து வழக்கை நடத்துவதா? அல்லது திரும்பப் பெற்றுக் கொள்வதா?"** என்பதை முடிவு செய்து கொள்ளலாம் என்று சொல்லி விடலாம்.

**"வழக்கு நடக்காமலே உரிமை கிடைத்தால் அதைவிட வேறு சந்தோசம் என்ன இருக்க முடியும்?"**

இதையே முதலில் தெரிவிக்காமல் வழக்கு விசாரணையின் இடையில் தெரிவித்தால், சான்று இட்டுத்தந்த அஞ்சல் ஊழியரை அல்லது அஞ்சல் துறையின் முக்கிய அதிகாரியை முக்கிய சாட்சியாக அழைத்து, சான்று அஞ்சல் மூலம் அனுப்பும் கடிதம் சம்பந்தப்பட்டவருக்குப் போய் சேருமா? சேராதா? என்று கேள்வி கேட்டால், சேரும் என்றுதானே பதில் சொல்ல முடியும்?

ஒருவேளை சேராது என்று சொன்னால், அதையே தக்க சான்றாவணமாக்கி, நுகர்வோர் சேவைக்குறைபாடு என்ற வகையில் நுகர்வோர் வழக்குத் தொடுத்து நிவாரணம் பெற்று விடலாமே!

## கடிதம் திரும்பி வந்தால்...?

**சான்று அஞ்சல் மூலமோ அல்லது வேறு எந்த முறையிலோ நீங்கள் அனுப்பிய கடிதம் திரும்பி வந்தால் அதை எக்காரணம் கொண்டும் பிரிக்கக் கூடாது.**

**“அப்படிப் பிரித்து விட்டால், சந்தேகத்திற்கு உரிய ஆவணமாகி அது சட்டப்படிச் செல்லத்தகாத ஆவணமாகி விடும்”.**

திரும்பி வந்த கடிதத்தை வழக்கில் தாக்கல் செய்ய வேண்டியிருக்கும் என்பதால் அதைப் பாலித்தீன் உறையில் வைத்து எவ்விதத்திலும் சேதம் ஏற்படாத வகையில் பராமரிப்பது நல்லது.

வழக்குத் தாக்கல் செய்யும் போது அதனுடனான சான்று ஆவணங்களுடன் திரும்பி வந்த கடிதத்தையும் அதன் உள்ளே இருக்கும் கடிதத்தின் நகலையும் தக்க காரணங்களைக் குறிப்பிட்டுச் சேர்க்க வேண்டும்.

திரும்பிய கடிதத்தின் உள்ளே இருப்பதாகச் சொல்லப்பட்டு இணைக்கப்படும் கடிதம் சந்தேகத்திற்கு உரியதாக இருக்கும் போது அது குறித்து ஆட்சேபணை செய்தால் உ.வி.மு.வி கட்டளை 11 விதி 15-இன்படி, அதைத் திறந்த நீதிமன்றத்தில் நீதிபதியே பிரித்துச் சரிபார்க்க கடமைப்பட்டவராவார்.

அவசியத் தேவை எனில் அதன் சான்றிட்ட நகலைப் பெறுவதற்கும் எவருக்கும் உரிமையுண்டு.

தஞ்சாவூர் குடும்பநல நீதிமன்றத்தில் நடைபெற்ற இந்திய விவாகரத்து அசல் வழக்கு எண் 76/2003 என்ற வழக்கில் அந்நீதிமன்ற வரலாற்றில் திரும்பி வந்ததாகச் சொல்லப்பட்ட கடிதத்தைப் பிரிக்க வைத்து, சான்று நகலை பெற்று சாதனை செய்தார் நமது வாசகர்.



## அரசு அலுவலர்களுக்கு எதிராக வழக்கு

**‘சட்டத்தின் முன் அனைவரும் சமம்’** என்ற இந்திய சாசன கோட்பாடு 14-இன்படி, சாதாரண அரசு ஊழியர் முதல், முதல் குடிமகனான குடியரசு தலைவர் வரை எவர் மீது வேண்டுமானாலும் உரிமையியல் வழக்கு தொடுக்கலாம்.

**“மாநில பொதுத் தேர்வாணையம் (பப்ளிக் சர்வீஸ் கமிஷன்) நடத்தும் தேர்வில் கலந்து கொண்டு தேர்வெழுதி கடமையாற்ற வரும் அதிகாரிகள் கூட பப்ளிக்கை (பொதுமக்களை), சர்வீஸை (கடமையை) மறந்து விட்டு கமிஷன் (இலஞ்சப் பிச்சை) அடிப்படையிலேயே கடைமையை ஆற்றி வருகின்றனர்”.**

இப்படிப்பட்டவர்கள் மீது வழக்கு தொடுப்பதற்கு முன்பாக உ.வி.மு.வி 80-இன்படி, அறுபது நாட்களுக்கு முன்பாக அது குறித்து அறிவிப்பு கொடுத்த பின்பே உரிமையியல் வழக்கைத் தொடர முடியும். அதாவது அறிவிப்பை பெற்ற அறுபது நாட்களுக்கு பின்னரே வழக்கு தொடுக்கலாம்.

உ.வி.மு.வி 80(2)-இன்படி, **“நீதிமன்றத்தின் முன் அனுமதியோடு அறுபது நாள் கால அவகாசம் இல்லாமலும் வழக்கு தொடுக்கலாம். இப்படி தொடுக்கும் யோசனை இருந்தால் அறிவிப்பின் நகலை நீதிமன்றத்துக்கு அனுப்பும் போதே இது குறித்த முகப்பு கடிதத்தை இணைத்து விடுவது, நீதிமன்றத்தில் முன் அனுமதி கோரும் போது மிகவும் பயனுள்ளதாக இருக்கும்”.**

ஆளுநர் மீதும், குடியரசு தலைவர் மீதும் இந்திய சாசன கோட்பாடு 361(4) இன் கீழ் அறிவிப்பு கொடுப்பது சாலச் சிறந்தது. இதில் அறுபது நாட்களுக்கு முன்பாக சிறப்பு அனுமதி ஏதும் கிடையாது.

## அத்தியாயம் - 2

### வழக்கில் முன்னிலையாகுதல் குறித்து

இந்தியக் குடிமகன் ஒருவர் தன் வழக்கில் தானே வாதாடுவது என்பது அவரின் அடிப்படை உரிமை என்பதைப்பற்றி முன்பாக விரிவாகவே பார்த்துள்ளோம்.

இப்படி ஆஜராகி வாதாடும் பலர் தன் பெயருக்குக் கீழே "தன் வழக்கில் தானே வாதாடுபவர்" என குறிப்பிட்டுக் கொள்கிறார்கள். இது நியாயமானதுதான் என்றாலும் கூட, தேவையில்லாத ஒன்றே.

தன் வழக்கில் தானே வாதாடும் ஒருவரின் அடிப்படை நோக்கமும், தத்துவமும் அவரின் பிரச்சினையை அவரைத் தவிர வேறு யாரும் நன்கு அறியமாட்டார் என்பது போலவேதான் எதிர்மனுதாரரும் என்பதால் அவர்களும் வக்கீல் இல்லாமல் ஆஜராக வேண்டும் என வழக்கின் தரப்பினர்கள் வலியுறுத்த முடியும்.

ஒருவரின் பிரச்சினை அவருக்கு அடுத்தபடியாக அவரோடு நெருங்கிய தொடர்பு உள்ளவர்களுக்கே நன்றாகத் தெரியும் என்ற அடிப்படையில், ஒருவர் அவருடைய நெருங்கிய உறவுகளுக்காகவும், நன்பர்களுக்காகவும் பிரதிநிதியாக அல்லது வழக்கறிஞராக வாதாட இயலும்.

அதேபோல உரிமையியல் சார்ந்த வழக்குகளில் பல மனுதார்களுக்காக அல்லது எதிர்மனுதாரர்களுக்காக அதில் சம்பந்தப்பட்ட ஒருவர் மட்டும் முன்னிலையாகி வழக்கை நடத்தலாம்.

'வக்கீல் என்றாலே எல்லா வழக்கிலும் வாதாடலாம்' என்ற எண்ணம் மற்றவர்களிடம் மட்டுமல்லாது வக்கீல்களிடமும் கூட இருக்கிறது. இது முற்றிலும் தவறு.



வக்கீல்கள் வாதாட எல்லாவிதச் சட்டத்திலும் தடைகள் இருக்கின்றன. இவைகள் வக்கீல்களுக்கும், வக்கீலாய் இருந்து நீதிபதியானவர்களுக்குமே தெரியாமல் இருக்கும் போது, வக்கீலுக்குப் படிக்க வருபவர்களுக்கு மட்டும் எப்படி தெரிந்து விடும்? இந்த விசயம் தெரிந்தால், யாருமே வக்கீலுக்குப் படிக்க வரமாட்டார்கள்.

இது குறித்து சட்ட அறிவுக்களஞ்சியம் நூலில் மிகவும் விரிவாகவே சொல்லியுள்ளதால் இங்கு தவிர்க்கிறேன்.

### யாராக இருந்தாலும் வக்கீல் வக்கீல்தான்

வக்கீல் வைத்து வாதாடாமல் நீங்களே வாதாடுங்கள் என்று சொல்கிறீர்கள். வக்கீல் நமது அப்பாவாகவோ அல்லது சகோதரராகவோ இருந்தால் கூட அவர்களை வைத்து வழக்கு நடத்தக்கூடாதா என்ற கேள்வியை இதுவரை யாரும் என்னிடம் கேட்டதில்லை என்றாலும் கூட இப்படியொரு சந்தேகம் வந்து விடக்கூடாது அல்லவா?

நிச்சயமாக கூடாது என்றுதான் சொல்லுவேன். ஏன்?

"எவர் ஒருவர் வழக்கறிஞர் படிப்பை வைத்துத் தொழில் செய்கிறாரோ அவரால், நாம் கையாள்வது போன்று சட்ட விதிகளைக் கையாண்டு மிகச்சரியான நியாயத்தை பாதிக்கப்பட்டவருக்குப் பெற்றுத்தரவும், பாதிப்பை ஏற்படுத்தியவருக்கு உரிய தண்டனையை வாங்கித்தரவும் முடியாது என்பது நிச்சயம்".

ஏனெனில், "அடிப்படையிலேயே இல்லாத ஒரு சங்கதி எப்படி வெளிப்பட முடியும்?!" அப்படி வாங்கித்தர முனைந்தால் அதன் பிறகு வக்கீல் தொழிலை செய்ய முடியாது.

'வாதாடுவது உங்களின் கடமை'. "வாதாடினால் மட்டுமே கிடைக்கும், உங்களின் உரிமை".

மிகச்சிறந்த தீர்ப்புகள் என்று வர்ணிக்கப்படும் தீர்ப்புகளை வழங்கும் நீதிபதிகளை கூட சட்டம் தெரியாதவர்கள் என்றுதான் சொல்கிறீர்களா? என சிலர் கேள்வி எழுப்பினர்.

ஆம்! அப்படிப்பட்ட நீதிபதிகள் கூட Best in worst ஆகத்தான் இருக்கிறார்கள் என்பதே உண்மை. சிறப்பான தீர்ப்புகள் என பெரும்பாலான மக்களுக்கு தெரிய வருவதே உச்ச நீதிமன்றத்தின் தீர்ப்புகள்தான்.

உண்மையில், இவைகள்தான் சிறப்பான தீர்ப்பு என்றால், கீழமை நீதிபதிகள் நீதிமன்றத்தில் கடமையாற்ற முடியாது. மாறாக, கடமைக்காக சிறைச்சாலையில்தான் இருக்க வேண்டும். ஆனால், அப்படி யாரும் இல்லையே?

அதனால்தான் நாம் சொல்கின்றோம், நம் நாட்டிற்காக கடமையாற்றும் தகுதி உள்ள நீதிபதிகள் Not only best in worst; we expect, 'best in the best!' ஆக இருக்க வேண்டும்.

Best in worst நீதிபதிகள் வழங்கும் தீர்ப்புகளைக் கூட அலசி ஆராய்ந்து அதன் குறைகளை, என்னால் புட்டு புட்டு வைக்க முடியும்.

## வக்கீலை நீக்கி விட்டு முன்னிலையாக வேண்டியதன் அவசியம்.

வக்கீல் வைத்து வழக்கு நடத்திக் கொண்டிருப்பவர்கள் தானே வழக்கை நடத்த வேண்டும் என நினைத்தால் முதலில், வழக்கில் இருந்து வக்காலத்தை திரும்ப பெற்றுக் கொள்ள அறிவுறுத்தலாம்.



அப்படி திரும்ப பெற்றுக் கொள்ளாத போது வழக்கில் இருந்து வக்கீலை நீக்கி விடுவதற்கான மனுவை நீதிபதியிடம் கொடுத்து தக்க உத்தரவு பெற்றுக் கொள்ள வேண்டும்.

இப்படிச் செய்யாமல் நீங்களே வாதாடி வழக்கை முடித்தால் கூட, "உங்களுக்காக வக்கீல் வாதாடியது போலத்தான் தீர்ப்பில் குறிப்பிடுவார்கள்". நீங்கள்தான் வாதாடினீர்கள் என்பதற்கான வலுவான ஆதாரமே இல்லாமல் போய் விடும். எச்சரிக்கை!

## வக்கீல் படிப்பை விரும்பும் குற்றவாளிகள்

படிப்பில் கடைசியிடம் வகிப்பவர்களே வக்கீலுக்குப் படித்து, வக்கீலாகிறார்கள் என்றும் பின்னர் இவர்களே நீதிபதியாவதும்தான் கொடுமையிலும் கொடுமை என முதல் நூலான குற்ற விசாரணை நூலில் சொல்லி இருந்தேன்.

தற்போது கிடைத்துள்ள ஆய்வு முடிவுகளின்படி, "வக்கீல் படிப்பைப் படிக்க வருபவர்களில் குறைந்தது ஐம்பது சதவிகிதம் பேர் குற்றத்தில் ஈடுபடும் நோக்குடனும் அல்லது குற்றத்தில் ஈடுபட்டு விட்டு அதில் இருந்து தப்பிக்க வேண்டும் என்ற நோக்கம் உடையவர்களாகவும் இருக்கிறார்கள்" என்பதற்கு வக்கீல்கள் மீதுள்ள வழக்குகளின் எண்ணிக்கையும், அவைகள் எவ்வித விசாரணைகளும் இன்றி முடங்கிக் கிடப்பதுமே தக்க ஆதாரமாகும்.

இவர்களால் எப்படிக் குற்றத்தைத் தடுக்கவோ அல்லது நியாயத்தை நிலைநாட்டவோ நாட்டை முன்னேற்றவோ முடியும்?!

## வக்கீல் படிப்பை / தொழிலை தடை செய்ய வேண்டும்

வக்கீலாக இருந்தால் எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்ற எண்ணம் சமுதாயத்தில் இன்று மிகவும் ஆழமாக வேருன்றி விட்டது என்ற நிலையில் சட்ட வழியில் சமூக விரோதிகளாகவும், சமூக விரோதிகளுக்கு ஆதரவாகவும் செயல்படும் வக்கீல்களை, நீதிபதிகளைச் சட்ட வழியில் சீர்திருத்தும் கொள்கையோடு சட்ட விழிப்புணர்வை ஏற்படுத்தி நீங்களே நீதிமன்றத்தில் வாதாடுங்கள் என வலியுறுத்தி அதற்கான ஆக்கப்பூர்வ முயற்சிகளில் களமிறங்கி உள்ளேன்.

இப்படிக் களமிறங்கியதில் அசாதாரண விசயங்களை கூட மிகச் சாதாரணமாகச் சட்ட வழியில் சாதித்த பாமரர்கள் கூட பலருண்டு.

ஆனால், தனக்குத் தானே வாதாடி நியாயம் கிடைக்காத சில கொள்கையாளர்கள் கூட, **‘வக்கீலாக இருந்து தனது கருத்தைச் சொல்லும் போதுதான், தங்களின் கருத்து எடுபடும்’** என்ற முட்டாள்தனமான எண்ணத்தில் வக்கீல் படிப்பைப் படிக்கிறார்கள்.

அப்படிப் படிக்க இயலாத சிலர் தங்களின் வாரிசுகள் மீது தங்களின் ஆசையைச் சுமத்தி அவர்களுக்குச் சட்டப் படிப்பைத் திணிக்கிறார்கள் என்ற நிலைமையையும் நான் கண்கூடாகக் காண்கிறேன்.

இப்படிப்பட்ட நிலைக்கு வருபவர்கலெல்லாம் குற்றம் புரிந்து விட்டு அதை ஒப்புக்கொள்ள மனமில்லாமல் அதிலிருந்து தப்பிக்க முடியாமல் போய் விட்டதே என்று எண்ணுபவர்களாகவும்,

தங்களது இயலாமையால் மற்றவர்களின்



மடத்தனமான, மூடத்தனமான சட்ட ஆலோசனைகளைப் பெற்றுச் செயல்பட்டதன் விளைவால் தண்டனை அடைந்தவர்களுமே ஆவார்கள்.

நான் சாதிக்கவில்லையா?! பல்வேறு வாசகர்கள் புதிது புதிதாகச் சாதிக்க வில்லையா?! இச்சாதனைகளின் வரலாறுதானே இத்தொகுப்பு நூல்கள்!

எனது இன்றைய நிலையில் வக்கீலாவதோ அல்லது நீதிபதியாவது என்பதோ முடியாத காரியமா?! ஏன் அதற்கான முயற்சிகளில் இறங்கவில்லை?

**“சமுதாயத்தின் போக்கில் போகின்றவன் சாதாரண மனிதன். சமுதாயத்தை தன் பக்கம் திருப்புகிறவனே சாதனை மனிதன்”** என்ற கொள்கையில் கொள்ளையர்களைத் திருத்த வேண்டும் என்ற கொள்கையோடு களமிறங்கி விட்டு, திருத்த முடியவில்லை என்பதற்காக அவர்களோடு கூட்டுச் சேர்ந்து திருடலாமா? மக்களைச் சுரண்டலாமா? ஒவ்வொருவருமே திருடர்களாக இருந்தால் நாம் என்னாவோம் என்பதைப் பற்றிய சிற்றறிவு வேண்டாமா?

முன்பெல்லாம் வசதியானவர்கள் வீட்டில் இருந்து மட்டுமே வக்கீலுக்குப் படித்துத் தொழில் செய்ய வந்தார்கள். இதன் நோக்கம் தொழில் செய்து சம்பாதிக்கின்றோமோ இல்லையோ தமக்கிருக்கின்ற சொத்தைக் காப்பாற்ற வேண்டும் என்ற கருத்து அடிப்படையில் இருந்தது.

ஆனால், இன்று வசதியில்லாதவர்கள் கூட வக்கீலுக்கு படிக்க முடிகிறது என்பது அவர்களின் பொருளாதார மேம்பாட்டுக்கும், அறிவுத்திறனுக்கும் நல்ல உதாரணம் என்ற நிலையில், குற்றங்கள் பெருகியிருப்பதற்குக் காரணமும் அவர்கள்தாம் என்பதையும் மறுக்க இயலாது.

**"நியாயம்தான் சட்டம்".**
**அதற்குத் தேவையில்லை வக்கீல் பட்டம்.**

ஆம்!நியாயத்தை எவர் வேண்டுமானாலும் சொல்ல முடியும். அப்படிச் சொல்ல வேண்டியவருக்கு இருக்க வேண்டிய தகுதிகள் ஐந்து.

அவைகளாவன; நடுநிலையான நோக்கு, பொது அறிவு, நாட்டுப்பற்று, நியாயத்தின் மீது நம்பிக்கை மற்றும் இயற்கையறிவு

நடுநிலை நோக்கு, பொது அறிவு, நாட்டுப்பற்று, நியாயத்தின் மீது நம்பிக்கை ஆகியவை இருந்தாலே இவைகளின் உள்ளடக்கமாக இயற்கையறிவு இருக்கும். இயற்கையறிவு என்றால் இயற்கையாகவே அமைந்த சிந்தனையுடன் கூடிய அறிவு என்று பொருள் கொள்ளலாம். இவைகளுக்கும் சட்டத்திற்கும் சம்பந்தமே இல்லை என்ற நிலையில் சட்ட பட்டப் படிப்பு எதற்கு?

நாட்டில் பல்வேறு துறைகளும், அதில் பல்வேறு விதமான பிரச்சினைகளும் இருக்கின்றன. இவைகளைத் தீர்த்து வைக்க வேண்டிய கடமை நீதித்துறையின் பொறுப்பாகவே இருக்கிறது.

ஆம்! நிர்வாகம், செயல்துறை ஆகியவை தத்தம் கடமைகளைச் சரியாகச் செய்யாத போது அதைச் செம்மைப்படுத்த அமைக்கப்பட்டுள்ள அதிகார அமைப்புத்தான் நீதித்துறை.

**ஒரு மாவட்டத்தை ஆட்சி செய்யும் ஆட்சியராக வேண்டும் என்றால் தமிழ், ஆங்கிலம், கணிதம், அறிவியல், வரலாறு, அரசியல், சமூக அறிவியல், புவியியல், கணக்கியல், தகவல் தொழில் நுட்பம், நிர்வாகம், சட்டம் எனப் பல்வேறு துறைகளில் கற்றுத் தேற வேண்டி இருக்கிறது அல்லவா?**



அப்படியானால், இவைகளில் வரும் பிரச்சினைகளை களைய குறைந்தபட்சம் இதே துறை சம்பந்தமான அறிவும், அதிபட்சமாக இவைகளை விட மேலும் பல்வேறு துறைகளிலும் போதுமான அறிவும் இருக்க வேண்டும் அல்லவா?! அப்படி இருந்தால்தானே ஒரு முடிவை அறிவிப்பதற்கான தகுதியைப் பெறமுடியும்?

ஆனால், **"குண்டு சட்டிக்குள் குதிரை ஓட்டுவது போல, நீதிபதிகளுக்கு சட்டம் என்ற ஒரு துறையைத் தவிர வேறு துறை பற்றி சிறிதும் தெரிவதில்லை".** இத்துறையிலும்கூட எவ்வளவு அறிவுடன் செயல் படுகிறார்கள் என்பதை இதற்கு மேலும் உங்களுக்கு விரிவாக விளக்க வேண்டியதில்லை.

எந்த ஒரு துறை சார்ந்த பிரச்சினையாக இருந்தாலும், அதில் வக்கீல்கள் கேட்கும் கி(கு)றுக்குக் கேள்விகளை வைத்துதான் நீதிபதிகள், நியாயம் என்ன? என்பதை முடிவு செய்கிறார்களேயொழிய, அவர்களுக்கு அத்துறை சார்ந்த போதிய அறிவு இல்லை. நீதிபதிக்கே ஒருதுறை பற்றிய அறிவில்லாத போது, வக்கீலுக்கு எப்படி இருக்கும்? வக்கீல் கேட்கும் கி(கு)றுக்குக் கேள்வியை வைத்துத் தீர்ப்பு வழங்குவது எப்படி நியாயமாகும்?

## தொடர்பில்லாத வழக்கில் கருத்து சொல்லுதல்

ஒருவரின் வழக்கில் அவரே முன்னிலையாகி வாதாட வேண்டும் என்ற கட்டாய சூழ்நிலையில் வயோதிகம், எழுத்தறிவின்மை, நோய் போன்ற காரணங்களால் அவரே நேரடியாக முன்னிலையாக சாத்திய கூறுகள் இல்லாத நிலையிலும், நெருங்கிய உறவுகளோ, நட்புகளோ இல்லாத நிலையிலும், நாம் சம்பந்தப்பட்ட அவ்வழக்கில் எத்தரப்புக்கும் சாதக, பாதகம் இல்லாமல்

தனிப்பட்ட முறையில் தனி நபராகவோ அல்லது அமைப்பின் மூலமாகவோ அவ்வழக்குக் குறித்த நமது நிலையை உ.வி.மு.வி கட்டளை 1 விதி 8 இன் கூடுதல் உட்பிரிவு 1-இன் கீழ் தெளிவுபடுத்த முடியும்.

உ.வி.மு.வி கட்டளை 1 விதி 11 - இன் கீழ், எவர் ஒருவரும் ஒரு வழக்கைத் தான் முன்னின்று நடத்தித் தருவதாக மனுச் செய்து நீதிமன்ற உத்தரவுக்கு ஏற்ப வழக்கை நடத்த முடியும் என்றாலும், இவ்விதியை மிக, மிக அரிதான வகையில் வேறு வழியே இல்லை என்ற நிலையில் மட்டும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இப்படிப் பயன்படுத்துபவர் வக்கீலைப் போன்றே செயல்படவும் மிக, மிக வாய்ப்புகள் அதிகம் என்பதால் ஆதரிக்காதீர்கள்; அபாயத்தில் சிக்கிச் சிரழியாதீர்கள். எச்சரிக்கை!

## தொடர்பில்லாத வழக்கில் குறுக்கிடுதல்

ஒரு சிலருக்கு அவர்கள் மீது வழக்கு நடந்ததே தெரியாமல் போய் வீட்டைப் பற்றுகை செய்ய (ஜப்தி) செய்ய வரும் போதுதான் தெரியவரும். அந்த நேரத்தில் என்ன செய்வது, ஏது செய்வது, எப்படி நடந்தது எனத் தெரியாமல் தடுமாறுவார்கள். இது எப்படிச் சாத்தியம்?

ஒருவரைத் திட்டமிட்டு நீதிமன்றத்தின் மூலம் பழி வாங்க வேண்டும் என நினைப்பவர்களுக்கு அல்லது ந்திபதிகளின் மறைமுக கொள்ளைகள் எல்லாம் இது போன்றுதான் நடந்தேருகின்றன.

ஒருவர் புரோநோட் எழுதிக் கொடுத்துப் பணம் வாங்கினார். ஆனால், "திருப்பித் தரவில்லை என உண்மையான ஆவணத்தை அல்லது போலியான ஆவணத்தை வைத்து வழக்கை தாக்கல் செய்து விடுவர்".



எதிர் மனுதாரருக்கான அழைப்பாணையை நீதிமன்ற ஊழியர்களே நேரடியாக சார்பு செய்யச் சட்ட விதிகள் இருந்தும் அதைத் தவிர்த்து, பதிவு அஞ்சல் மூலம் அனுப்பி வைக்க நீதிமன்றத்தில் உத்தரவு பெற்று அனுப்பி வைப்பார்கள்.

அப்படி அனுப்பி வைக்கும் முகவரி பெரும்பாலும் எதிர்மனுதாரின் உண்மையான வசிப்பிட முகவரியாக இருக்காது. மாறாக, பழைய இருப்பிட முகவரியாக அல்லது தவறான முகவரியாக இருக்கும். இதனால், அக்கடிதம் சார்பு செய்யப்படாமல் அஞ்சலக மேற்குறிப்புடன் திரும்பி வந்து விடும்.

"**வாங்க மறுத்து விட்டார்**" என்ற காரணத்தோடு திரும்பி வந்தால், சட்டப்படி அது ஒப்படைக்கப்பட்டதாக கருதி எதிரான உத்தரவை பிறப்பித்து விடுவர்.

"**முகவரி தவறு அல்லது அதுபோன்ற முகவரியே கிடையாது**" என்று அஞ்சலக குறிப்பு இருந்தால் எதிர்மனுதார் வழக்கு மனுவில் கொடுத்த முகவரி தவறு என்பதைப் புரிந்து கொண்டு மனுவை மனுதாருக்குத் திரும்ப ஒப்படைக்க வேண்டும்.

ஆனால், இப்படி ஒரு சில வழக்குகளில் மட்டுமே செய்வார்கள். கொள்ளையடிக்கும் நோக்குடைய வழக்கில் அப்படிச் செய்யமாட்டார்கள்.

நாளிதழில் அறிவிப்பு வெளியிடச் சொல்லி நீதிபதி உத்தரவு பிறப்பிப்பார். அதன்படியே பிரசுரம் செய்வார்கள். தினசரி நாளிதழ்களைப் படிக்காதவர்களே இருக்க முடியாது. அப்படிப் படிப்பவர்கள் பலரும் பல முக்கியமான செய்திகளைப் படிப்பதில்லை. அப்படிப்பட்ட செய்திகளில் ஒன்றுதான் நீதிமன்றங்கள் குறித்த பெட்டிச் செய்திகள்.

இச்செய்திகள் தினசரி காலை, மாலை இதழ்களில் மட்டுமே வெளியாகுமேயன்றி வேறு எந்த இதழிலும் வெளியாகாது. காலை இதழை விட மாலை இதழை அவ்வளவாக யாரும் படிப்பதில்லை என்பதால் வேண்டுமென்றே அதில்தான் அதிகம் வெளியிடுவார்கள்.

**தினசரியில் வெளியாகும் நீதிமன்ற செய்திகளை நீங்கள் படித்தாலும், படிக்காவிட்டாலும் உங்களுக்கு அச்செய்தி சட்டப்பூர்வமான வழியில் தெரிவிக்கப் பட்டதாகத்தான் அர்த்தம் என்பதால் அதன்படி நீங்கள் நடந்தாக வேண்டும்.**

அதில் தெரிவிக்கப்பட்டிருக்கும் நீதிமன்றத்தில், அக்குறிப்பிட்ட தேதியில் நேரடியாக நீங்களோ அல்லது உங்களின் பிரதிநியோ முன்னிலையாக வேண்டும். அப்படி இல்லையென்றால், உங்களுக்கு எதிராக வழக்குத் தீர்மானிக்கப்படும்.

உங்களுக்கு எதிராக வழங்கப்பட்டத் தீர்ப்பைத் தொண்ணூறு நாட்களுக்குள் நிறைவேற்ற வேண்டியது உங்களின் சட்டக் கடைமையாகும்.

உங்களுக்குத் தெரிந்தால்தானே நிறைவேற்றுவதற்கு? என்பதால் தொண்ணூறாவது நாளுக்குப் பிறகு, இந்நீதிமன்றம் கொடுத்த தீர்ப்பை எதிர்மனுதார் இதுவரை செயல் படுத்தவில்லை. எனவே, நீதிமன்றமே தனது உத்தரவை நிறைவேற்றித் தருமாறு கோரி, மனுதாரர் நிறைவேற்றுகை மனுவைத் தாக்கல் செய்வார்.

அதோடு, என்னை ஏமாற்றும் நோக்கத்தோடு எதிர்மனுதார் தற்போது இம்முகவரியில் வசித்து வருகிறார் அல்லது அவருக்கு இன்ன இடத்தில் அசையும் அல்லது அசையாச் சொத்துக்கள் இருக்கின்றன என்று கூறி அது தொடர்பான ஆதாரங்களைத் தாக்கல் செய்வார்.



மீண்டும், **"இம்மனு மீதும் முன்சொல்லப்பட்டுள்ளது போன்றே வெற்றுச்சடங்குகள் கடைப்பிடிக்கப்படும்".**

நாளிதழில் குறிப்பிட்டவாறு நீதிமன்றத்துக்கு செல்லவில்லை என்றால், பற்றுகை செய்து ஏலத்தில் விற்று மனுதாருக்கு சேர வேண்டிய தொகையை செலுத்திட நீதிபதி உத்தரவு பிறப்பிப்பார்.

அவ்வுத்தரவின் பேரில் பற்றுகை செய்யவரும் போதுதான் உங்களுக்கு எதிராக என்ன வழக்கு நடந்தது? எப்படி நடந்தது? என்ற விவரங்கள் எதுவுமே தெரியாமல் பேந்த பேந்த விழி பிதுங்கிக் கொண்டிருப்பீர்கள்.

நாளிதழ்கள் வாயிலாக நீதிமன்ற அழைப்பாணைகள் குறித்து நடக்கும் குற்றங்கள் எல்லாமே நீதிமன்றத்திற்குத் தெரியாமல் நடப்பதில்லை. மாறாக, நீதிபதியின் அனுமதியோடுதான் நடக்கிறது.

உண்மையில், **"இது போன்ற தவறுகள் நடக்கக் கூடாது என நீதிமன்றம் விரும்பினால், நீதிமன்றமே தன் சொந்தப் பொறுப்பில் நாளிதழில் அறிவிப்புத் தர வேண்டுமே தவிர, வழக்காளிகளுக்கு உத்தரவு பிறப்பிக்கக் கூடாது".**

## பற்றில்லா பற்றுகை

ஓர் அசையும் அல்லது அசையாப் பொருள் பற்றுகை செய்யப்பட்டால் அதன் மதிப்பு எவ்வளவாக இருந்தாலும் அதைப்பற்றிக் கவலையில்லாமல் தேவையான தொகைக்கு கேட்பவருக்கு விற்று விடுவார்கள். ஏலத்தொகை அதிகமாக வந்தால், பற்றுகைக்கு உள்ளான தொகை போக மீதி தொகையை உங்களுக்கு கொடுப்பார்கள். ஐம்பது பைசாவுக்காக வீட்டையே ஏலம் போட்ட சம்பவங்கள் எல்லாம் உண்டு. எச்சரிக்கை!

## தகவல் தெரிவிக்கும் கடமை

தினசரி இதழ்களில் வெளியாகும் நீதிமன்ற அழைப்பாணைகள் குறித்து அதில் குறிப்பிட்டுள்ள பெறுநர் முகவரிக்கு நீங்கள் அஞ்சல் அட்டை மூலம் தகவல் தெரிவித்தால் நீதிமன்றத்தில் நடக்கும் இது போன்ற தில்லு முல்லுகளை விரைவில் முடிவுக்குக் கொண்டுவர முடியும்.

இதே போன்று நான் சுமார் இரண்டு வருடங்கள் கடிதம் எழுதிப் போட்டுப் பலர் பயனடைந்து உள்ளனர்.

இதில் சிறப்பு என்னவென்றால், என்மீதான வழக்குக்கு வெளியான அழைப்பாணையே எனக்கு நண்பர் ஒருவரின் மூலமாகத்தான் தெரிய வந்தது.

நாளிதழில் வெளியாகும் அழைப்பாணையை வைத்தே அதில் எவ்வளவு உண்மையின் தன்மை இருக்கிறது என்பதை நீங்களும் மதிப்பிட்டு விட முடியும்.

அ) பெறுநர் முகவரி என்ன தரப்பட்டு இருக்கிறதோ (யாருக்காக) அந்த மாவட்டத்தில் வெளியாகும் நாளிதழில் அழைப்பாணை வெளியாக வேண்டும்.

ஆ) நீதிமன்றத்தின் பெயர் மற்றும் ஊர், வழக்கு எண், வழக்கு விசாரணைக்கு வரும் தேதி ஆகியவற்றுடனான அறிவிப்பு அவ்வட்டார **தாய்மொழி நாளிதழில் தாய்மொழியில்** வெளியிடப்பட்டிருக்க வேண்டும்.

இ) அறிவிப்பு வெளியாகும் தேதிக்கும், நீதிமன்றத்தில் முன்னிலையாக வேண்டிய தேதிக்கும் இடையில் குறைந்தது முப்பது நாட்கள் **(வழக்குரைக்கு பதிலுரை தாக்கல் செய்வதன் நோக்கில்)** இடைவெளி அல்லது கால அவகாசம் இருக்க வேண்டும்.



நீங்கள் ஆராய முயன்றால் மேற்குறிப்பிட்ட வகையில் நூற்றுக்கு பத்து அழைப்பாணை அறிவிப்புகள் கூடத் தேறாது.

தினசரியின் பெயர், எந்தப் பதிப்பு, எந்தப் பக்கம் என்ற தகவலோடு, நீதிமன்றத்தின் பெயர் மற்றும் ஊர், வழக்கு எண், வழக்கு விசாரணைக்கு வரும் தேதி ஆகியவை குறித்து அஞ்சலட்டையில் எழுதுவதோடு உங்களின் சுய முகவரியைத் தெளிவாகத் தெரியும் வண்ணம் முத்திரையிட்டு அனுப்பினால் அவர்களும் சரிபார்த்துத் துரிதமாகச் செயல்பட்டு நீதிபெறவும், நன்றிக் கடிதம் எழுதவும் உதவியாய் இருக்கும்.

## நீதிமன்றத்துக்கு தகவல் தெரிவிக்கும் கடமை

நீங்கள் அனுப்பிய அஞ்சலட்டை போய்ச் சேர்ந்ததா? அல்லது சேரவில்லையா? என்பதைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. ஒருவேளை திரும்பி வந்தால் சமுதாய அக்கறையோடு நிச்சயம் நீங்கள் கவலைப்பட்டே ஆக வேண்டும்.

சம்பந்தப்பட்ட நீதிமன்றத்துக்கு அவ்வழக்கில் இடைமனு ஒன்றை நேரடியாகவோ அல்லது அஞ்சல் மூலமாகவோ உ.வி.மு.வி கட்டளை 1 விதி 8 இன் கூடுதல் உட்பிரிவு 1 இன் கீழ் தாக்கல் செய்து, வழக்கில் கொடுக்கப்பட்டுள்ள முகவரி கட்டளை 6 விதி 8 இன் கூடுதல் உட்சேர்க்கை 1-இன்படி தவறானதாக இருக்கிறது என்று கருத்து சொல்லலாம்.

நீதிமன்றத்தின் கவனத்திற்கு வராமல் இத்தவறு நடந்திருந்தால், மனு திருப்பப்பட்டு, சரியான முகவரியோடு மனுத்தாக்கல் செய்ய அறிவுறுத்துவார்கள்.

## வாரண்ட்டும் வரலாம்

நீதிமன்றத்தின் தில்லுமுல்லு அனுமதியோடு வழக்கு நடந்தால் உங்களைச் சாட்சியம் எடுப்பதுபோல் நடித்து, நீங்கள் சொன்னவைகளுக்கு முற்றிலும் மாறாக, நீங்களே மாட்டிக் கொள்வது போல் உங்களின் சாட்சியத்தைச் தட்டச்சு செய்து ஒப்பமிட சொல்லுவார்கள். **அதையும் நீங்கள் திறமையோடு எதிர்கொண்டு நீதிபதியை திக்குமுக்காடச் செய்வது உங்களின் திறமையைப் பொறுத்தது.**

என்மீதான மூன்று வாரண்ட்டுகளில் இந்த வகையில் வந்தது இரண்டாவதாகும். இது குறித்துப் பிணை எடுப்பது எப்படி? என்ற இரண்டாவது நூலில் பக்கம் 250-இல் ஓரளவு சொல்லியுள்ளதால் இங்குத் தவிர்க்கிறேன்.

## பத்திரிகைகளின் (அ)தர்மம்; (சு)தந்திரம்!

மக்களாட்சியில் பத்திரிகை சுதந்திரம் பறிக்கப்படக் கூடாது என்பது அவ்வப்போது எழும்பி அடங்கும் குரலாகவே இன்று வரையிலும் இருந்து வருகிறது. பத்திரிகையாளர்கள் எப்படித் தங்களின் சுதந்திரத்தை விரும்புகிறார்களோ, அதுபோல அவர்களும் மற்ற நபர்களின் சுதந்திரத்தையும், உரிமையையும் காப்பதை கடமையாக அல்லவா கொள்ள வேண்டும்?!

நாளிதழ்களில் வெளியாகும் நீதிமன்ற விளம்பரங் களைச் சேகரித்து ஆய்வு மேற்கொண்டு, தில்லுமுல்லுகள் எப்படியெல்லாம் நடக்கின்றன என்பதை விளக்கி வரையறை ஒன்றை ஏற்படுத்துங்கள் என அதற்கான யோசனையையும் தெரிவித்தேன்.

ஆனால், **“அவர்களோ இதில் வரும் வருமானம்தான் எங்களின் கைச் செலவுக்கு உதவியாக இருக்கிறது**



**என்று கூறி ஏற்றுக் கொள்ளவில்லை. இவர்களின் அற்பத்தனமான கைச் செலவுக்காக ஒரு குடிமகன் தனது உடைமைகளை எல்லாம் இழக்க வேண்டும் என்பதுதான் பத்திரிகை தர்மமா? பத்திரிகை (சு)தந்திரமா?”**

இப்படி பத்திரிகைகளால் பாதிக்கப்பட்டவர்கள் தாங்கள் இழந்த உடைமைகளை வழக்கின் மூலம் அவர்களிடம் இருந்தே மீட்டெடுக்கும் காலம்தான் பத்திரிகைகளின் அதர்மங்களுக்கு முடிவு கட்டும் காலம்.

இதற்கான ஆலோசனைகள் நீதியைத்தேடி வரிசையில் இறுதி நூலாக அடுத்த ஆண்டு வெளியிடப்பட இருக்கும் சாட்சியங்களை சேகரிப்பது எப்படி? என்ற நூலில் இடம் பெறும்.

# அத்தியாயம் - 3

## முறையீடு / வழக்குத் தாக்கல் குறித்தவை

குற்றவியலைப் பொறுத்தவரை புகாரை கு.வி.மு.வி 2(4) இன்படி, எழுத்து மூலமாகவோ அல்லது வாய்மொழியாகவோ சொல்ல முடியும். ஆனால், உரிமையியல் தொடர்பான வழக்கு என்றால் நிச்சயமாக எழுத்து மூலமாகத்தான் இருக்க வேண்டும்.

இப்படி எழுத்து மூலமாகக் கொடுக்கப்படும் அறிவிப்பு, கடிதம், மனு உள்ளிட்ட எதுவாக இருந்தாலும் அது முறையான வடிவத்தில் இல்லாத போது, உ.வி.மு.வி விதி 90 இன்படி, அதை முறையான வடிவத்திற்கு கொண்டு வந்து, முறையான விசாரணை நடத்தி நீதி வழங்க வேண்டியது நீதிமன்றத்தின் கடமையாகும்.

எந்த நீதிமன்றத்தில் வழக்குத் தாக்கல் செய்வது எனக்

குழப்பம் நேர்ந்தால், அதற்காக நாம் கவலைப்படத் தேவையில்லை.

ஏனெனில், நீதிபதிகளுக்குக் கூட தங்களின் அதிகார வரம்பு எவ்வளவு? அல்லது எதுவரை? என சரியாகத் தெரியாத நிலையில், ஒரு நீதிமன்றத்தின் அதிகார வரம்பு என்ன? என்பதை நாம் தெரிந்து வைத்திருக்க வேண்டிய அவசியம் இல்லை.

நாம் தாக்கல் செய்யும் மனு அந்நீதிமன்றத்தின் அதிகாரத்திற்கு உட்பட்டது என்றால், **"அது எந்த நீதிமன்றத்தின் அதிகார வரம்பிற்கு உட்பட்டது என்பதை எழுத்து மூலமாக நீங்கள் கொடுத்த மனுவிலேயே நீதிபதி குறிப்பெழுதி, கையொப்பமிட்டுக் கொடுக்க வேண்டியது கு.வி.மு.வி விதி 201(1) மற்றும் உ.வி.மு.வி கட்டளை 7 விதி 10-இன் கீழ் நீதிபதிகளின் சட்டக் கடமையாகும்".**

இந்நூலில் உள்ள கருத்துக்கள் நீதிமன்றத்துக்கே பொருந்தும் என்பதால் இது போன்ற சட்டவிதி அரசு அதிகாரிகளிடம் கொடுக்கும் எந்த ஒரு மனுவுக்கும் கூட பொருந்தும்.

நமக்குத்தான் நன்றாகச் சட்டம் தெரியுமே! பின் எதற்கு ஏனோதானோ என்று மனு கொடுக்க வேண்டும்? முறைப்படித்தான் கொடுக்கலாமே என்று நினைத்தாலும் கொடுக்கலாம். இப்படி கொடுப்பது உங்களின் சட்டத் திறமையை வளர்ப்பதோடு, தன்னம்பிக்கையையும் வளர்க்கும்.

அதேநேரம் "நமக்குச் சட்டம் தெரியும் என்பதற்காகத் தெரிந்த சட்ட விதிகளை எல்லாம் எழுதினால் அதுவே நீதிபதிகளைப் பயமுறுத்தி விடும். பின், வழக்கை எடுத்து விசாரணை செய்யவே யோசிப்பார்கள்".



ஒருவேளை சட்ட விதிகளைச் சுட்டிக்காட்ட வேண்டிய நிலை ஏற்பட்டால் அச்சட்ட விதி குறித்தும் மிகவும் தெளிவாக விளக்கிட வேண்டியது கட்டாயமாகும். உண்மையாக வக்கீல் முன்னிலையாகி வக்காலத்து வாங்கத் தடையிருந்தால் அது குறித்த சட்ட விதியோடு விளக்கம் சொல்லிய பின் ஆட்சேபணையைத் தெரிவிக்க வேண்டும்.

நமது பிரச்சினைகளுக்கு மூலகாரணமாக இருக்கும் அல்லது பிரச்சினையைத் தீர்த்து வைத்திருக்க வேண்டிய அதிகாரிகளை நேரடி எதிர்மனுதாரராகக் கொண்டு வருவதைத் தவிர்த்து விட்டுச் சங்கதியை சொல்லிய பின், "இக்காரணத்திற்காக சம்பந்தப்பட்ட அந்த அலுவலரை முக்கிய சாட்சியாக அழைத்து விசாரணை செய்ய வேண்டிய அவசியத்தில் தான் இருப்பதாகக் குறிப்பிட வேண்டும்".

இதன் மூலம் அவர்களின் ஜாதிப்பற்றால் நம் வழக்கு விசாரணைக்கு வருவது தடைபடாமல் போகும்.

எதிர்மனுதாரர் மீது எவ்வளவுதான் கோபம் இருந்தாலும் கூட வாசகங்கள் மிகவும் நாகரீகமாகவும், மரியாதை நிமித்தமாகவும், ஒருமை சொற்களில் இல்லாமல் இருப்பதும் உங்களின் மீதான மதிப்பைக் கூட்டும். அதேசமயம் சூழ்நிலைக்குத் தக்கவாறு தாக்குதல் வார்த்தைகளைக் கொண்டு தாக்குதலும் உங்களின் மதி நுட்பத்தை எடுத்துரைக்கும்.

எதை நிரூபிக்க, தக்க சான்றுகள் இருக்கிறதோ அதை மட்டுமே கொண்டு வருவது சாலச் சிறந்தது. ஒரு சில சூழ்நிலைகளில் ஒன்றை மட்டும் நிரூபித்தால் போதும் மற்ற சங்கதிகள் அனைத்தையும் நிரூபிக்க முடியும் என்றால் அதற்குத் தக்க ஆதாரங்கள் இருந்தாலும் இல்லையென்றாலும் மனுவில் கொண்டு வரலாம்.

காவல்துறையைப் பொறுத்தவரை எல்லாக் குற்றச் சாற்றுகளையும் கூறி விட்டு, பின் பிரிவுகளைக் குறிப்பிட்டுத் தண்டனை வழங்க வேண்டும் எனக் குறிப்பிடுவார்கள். அக்குற்றத்தால் ஏற்பட்ட நஷ்ட ஈட்டைக் கோரமாட்டார்கள்.

ஆனால், **"நாம் நஷ்ட ஈட்டைக் கோருவதோடு ஒவ்வொரு செயல்பற்றி விவரிக்கும் போதே அது எப்பிரிவின் குற்றம் என்பதைக் குறிப்பிடுவது நல்லது. உரிமையியல் சார்ந்த மனுக்களில் என்னென்ன நிவாரணங்கள் தேவை"** என்பதைக் குறிப்பிட வேண்டும்.

சொத்துக்கள் தொடர்பான விசயத்தில் வழக்கை, தக்க ஆதாரச் சான்றுகளோடு தாக்கல் செய்த பின்னர் மட்டுமே தடையாணை, உறுத்துக்கட்டளை, முன்னெச்சரிக்கை மனு ஆகியவற்றைத் தாக்கல் செய்ய வேண்டும்.

உ.வி.மு.வி கட்டளை 38 - இன்படியான தீர்ப்புக்கு முன் பற்றுகை உரிமை மிகவும் தவறான முறையில் பயன்படுத்தப்படுவதால் அதை எக்காரணம் கொண்டும் வலியுறுத்தக் கூடாது.

மொத்தத்தில் தங்கு தடையின்றி, யாரும் சந்தேகக் கேள்வி கேட்க முடியாத அளவிற்கு மனு இருத்தல் அவசியம். அதுவே, **'மனுவின் வசியமும் கூட'**.

## அத்தியாயம் - 4

## வழக்கு தாக்கலின் போது கடைபிடிக்க...

### தாய் மொழியில் மனு தாக்கல்

இந்தியாவில் பணியாற்றும் எந்த ஒரு மத்திய மற்றும் மாநில அரசு அலுவலரிடமும், நீதிபதிகளிடமும்



**இ.சா.கோ 350-இன்படி, உங்களின் தாய்மொழியிலேயே மனுக் கொடுக்க உரிமை உண்டு.**

தேவைப்பட்டால், அம்மனுவைப் பெறுபவர் அவரது தாய்மொழிக்கு மொழியாக்கம் செய்து விசாரணை நடத்திய பின் உத்தரவு பிறப்பித்து, அதனை உங்களின் தாய்மொழிக்கு மொழியாக்கம் செய்து கொடுக்கக் கடமைபட்டவராவார்.

இப்படியொரு கோட்பாடு இருப்பது எவ்வூழியருக்கும் தெரியாமல்தான் இருக்கிறது. இப்படி நான் அடிக்கடி சொல்வது ஒரு சில நேரங்களில் ஏதோ மற்றவர்களை எல்லாம் குற்றம் சொல்வதாகவே கூட தெரியலாம். அதனால்தான் ஆதாரத்தோடு சில உண்மைகளை விளக்குகிறேன்.

உண்மையாக, தகவல் அறியும் உரிமைச் சட்டப் பிரிவு 6(1)-இல், **"தேசிய மொழியான இந்தியில் அல்லது இணைப்பு மொழியான ஆங்கிலத்தில் அல்லது எந்த வட்டாரத்துக்குள் மனு அளிக்கப்படுகிறதோ அவ்வட்டார மொழியில்தான் மனு இருக்க வேண்டும் என மத்திய சட்ட அமைச்சகமே இ.சா.கோ 350 எதிராகத்தான் தகவல் அறியும் உரிமை சட்டத்தை இயற்றியுள்ளது"** என்பது குறிப்பிடத்தக்கது.

சட்ட அறிவுக்களஞ்சியம் நூலில் இம்முக்கிய கருத்து அப்போதைய எனது அறியாமை காரணமாக விடுபட்டு விட்டதும் குறிப்பிடத்தக்கது.

இப்படி உங்களின் தாய்மொழியில் மனு அனுப்பும் போது, இந்திய சாசனத்தின்படி அம்மனு செல்லத் தக்கதே என்பதை, அதை பரிசீலிக்க வேண்டியவர் களுக்கு தெரியப்படுத்த வேண்டியது நமது சட்டக் கடமையாக இருப்பதால் மனுவின் தலைப்பில் அல்லது பொருத்தமான இடத்தில்,

*"This petition submited in my mother tongue right's under 350 of our indian constitution"*

என்று ஆங்கிலத்தில் குறிப்பிட்டு விட்டால் அவர்களும் உங்களின் உரிமையை, தங்களின் கடமையை உணர்ந்து செயல்பட ஏதுவாக இருக்கும். இதற்கும் செவி சாய்க்கவில்லை எனில், அடுத்தென்ன? என்பது பற்றி யோசிக்க வேண்டி இருக்கும்.

### மனுவிற்குறிய எண்ணைப் பெறுதல்

மனுவை யாரிடம் தாக்கல் செய்வது என்பது குறித்து மிகச்சரியாக ஏதும் சொல்லி விட முடியாது. குற்றவியலில் நேரடியாக நடுவரிடமும், உரிமையியலில் அதற்கான அலுவலரிடமும் மட்டுமே கொடுக்க வேண்டும் என்பது பொதுவிதி.

இது முற்றிலும் மாவட்ட மற்றும் அதற்குக் கீழான நீதிமன்றங்களுக்கு மட்டுமே. அமர்வு அல்லது உயர் நீதிமன்றம் அல்லது உச்சநீதிமன்றம் என்றால் வழக்கு மனுவை அதற்கென நியமிக்கப்பட்ட அலுவலரிடம் தாக்கல் செய்து, அது சரி பார்க்கப்பட்ட பின்னரே விசாரணைக்குச் செல்லும்.

நீதிமன்றத்தில் நேரடியாகத் தாக்கல் செய்தாலும், அலுவலரிடம் தாக்கல் செய்தாலும் முதல் வேலையாக அம்மனுவிற்குரிய எண்ணைப் பெற்றுக் கொள்ள வேண்டும். மனு பரிசீலனையில் இருக்கும் போது வரிசை எண்ணையும், விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்ட பின் அதற்குரிய எண்ணையும் கொடுப்பார்கள்.

### சான்றாவணங்களின் நகல்கள் மட்டுமே தாக்கல்

வழக்குத் தாக்கல் செய்யும் போது அதில் சொல்லப்பட்டுள்ள சங்கதிகளை நிரூபிக்கத் தேவையான



சான்று ஆவண ஆதாரங்களை மனு தயார் செய்யும் முறையிலேயே தயார் செய்து கொள்ள வேண்டும்.

அதில் வரிசைக்கிரகமாக ஆவணத்தின் தேதி, அந்த ஆவணம் யார் யாருக்குக் கொடுக்கப்பட்டது அல்லது தொடர்புடையது, மற்றும் எத்தனைப் பக்கங்களைக் கொண்டது என்பதை தெளிவாக விளங்கும்படிப் பட்டியலிட வேண்டும்.

பின், பட்டியலை முகப்பாகவும் சான்றாவணங்களை வரிசைக்கிரமமாகவும் வைத்துப் புத்தகத்தைத் தைப்பது போல் தைத்து மனுவோடு சேர்த்து தாக்கல் செய்ய வேண்டும்.

ஒரு சான்றாவணத்தில் நிறைய சங்கதிகள் இருக்கலாம். ஆனால், நீதிமன்ற சாசன உறுபு 39-இன்படி, அதில் ஒரு பகுதி மட்டும்தான் நமது தரப்பை நிரூபிக்க தேவைப்படும்.

இப்பகுதியை மட்டும் எவரும் எளிதாக காணும்படி, தனியாக தெரியும் வண்ணம் பின்புற வண்ணமிடுதல் (ஹலேட்), அடிக்கோடிட்டு காட்டுதல், வாய்ப்பிருப்பின் சம்பந்தபட்ட சங்கதிகளை பெரிதாக்கி காட்டுதல் என ஏதாவதொரு முறையில் தனிமைப்படுத்தி காட்ட வேண்டும்.

இப்படிச் செய்வது பல விதங்களில் பலருக்கும் உதவும். கால விரயம், குழப்பம் ஆகியவற்றைத் தடுக்கும். உங்களின் திறன் மதிப்பை அதிகப்படுத்தும்.

**மிக முக்கிய குறிப்புகள்:**

அ) வழக்குக்கு ஆதாரமே சான்றாவணங்கள்தாம் என்பதால் அசல் சான்றுகளை எக்காரணம் கொண்டும் வழக்குத் தாக்கல் செய்யும் போதே தாக்கல் செய்து விடக்கூடாது.

ஆ) இன்றைய சூழ்நிலையில் நீதிமன்றங்களில்தாம் அதிகமான குற்றங்கள் நடைபெறுகின்றன என்பது ஊரறிந்த ரகசியமாக இருப்பதால் அசல் ஆவணத்தை திருடி விட்டார்கள் என்றால் அடுத்து எதுவுமே செய்ய இயலாமல் போய் விடும்.

இ) அசலைப் பிரதி எடுத்து அதில் நீ.சா.உ இன் கீழ் உண்மை நகல் எனச் சான்று செய்து உங்களின் கையொப்பத்தை இட்டு விட்டால், சட்டப்படி அதுவே உண்மை நகலாகி விடும்.

ஈ) அந்நகலுக்கு நிகரான மாற்று ஆவணத்தை எதிர்தரப்பில் தாக்கல் செய்து, நீங்கள் தாக்கல் செய்துள்ள ஆவணம் பொய்யானது என மறுப்பு தெரிவிக்கும் நிலையில், நீதிமன்றம் அசலைத் தாக்கல் செய்ய வேண்டும் என எழுத்து மூலமான உத்தரவு பிறப்பித்தால் மட்டுமே கொண்டு செல்ல வேண்டும்.

உ) நீதிபதிக்கு அசலை நகலோடு ஒப்பிட்டுக்காட்டி, அவரை நகலில் அசல் ஆவணத்தை ஒத்து இருக்கிறது என்று மேற்குறிப்பு எழுதிக் கொள்ளச் செய்து உடனே திரும்பப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

இவைகளில் மிகுந்த எச்சரிக்கையாக இருக்கவும்.

## சாட்சிகளின் பட்டியல்

மனுவோடு சான்று ஆவணங்களை எப்படிப் பட்டியலிட்டுத் தாக்கல் செய்கிறீர்களோ, அது போலவே உங்கள் தரப்புக்கு ஆதரவான சாட்சிகளின் பட்டியலையும் தாக்கல் செய்ய வேண்டும்.

**“சாட்சிகளின் பட்டியலில் எந்த சாட்சி எதை பற்றி சாட்சி சொல்ல இருக்கிறார் என்பது குறித்துக் குறிப்பிட வேண்டும்”**



எனக் கேட்பார்கள். இதற்கு உ.வி.மு.வி கட்டளை 16 விதி (1)(2) இல் உரிமையிருக்கிறது என்றாலும், **“இப்படியொரு விதி இருப்பது சரியானதா? அல்லது தவறானதா? என்ற முடிவுக்கு என்னால் இதுவரை வர முடியவில்லை என்பதே உண்மை”.**

எதற்காகச் சாட்சியாக அழைக்கிறோம் என்று வெளிப்படையாக எதிர்தரப்புக்குத் தெரிந்தால் அதைத் தடுக்கவோ அல்லது சீர்குலைக்கவோ முயலலாம் எனும் அதேநேரம் எதற்காக அழைக்கிறோம் எனத் தெரியாமல் அழைத்தால் வரும் சாட்சி எப்படிச் சாட்சி சொல்லத் தயாராக வர முடியும்? என்ற கேள்விதான் ஒரு முடிவுக்கு வர இயலாமைக்குக் காரணம்.

எது எப்படி இருப்பினும், உங்களுக்கு ஆதரவான சாட்சி இல்லாத நிலையில் அவரை விசாரணை செய்தே தீர வேண்டும் என்றால் மேற்படி விதியின் கீழ் மனுக் கொடுத்து அழைப்பாணை அனுப்பித்தான் விசாரணை செய்ய முடியும் என்றாலும் இக்கருத்தை வலியுறுத்தலாம்.

ஆதரவான சாட்சி என்றால் உ.வி.மு.வி கட்டளை 16 விதி 1 இன் கூடுதல் உட்சேர்க்கை 1 இன்படி, நீதிமன்றத்திற்கு மனுச் செய்து அழைப்பாணை சார்பு செய்யாமல் நேரடியாகவே நீதிமன்றத்துக்கு அழைத்துச் சென்று சொல்ல வைக்கலாம்.

## மனுவைத் திருப்பினால் கால அளவு

நீதிமன்றம் மனுவைத் திருப்பினால், அதற்கானக் காரணத்தை குறிப்பிட்டு, அதை எத்தனை நாட்களுக்குள் திரும்பத் தாக்கல் செய்ய வேண்டும் என்பதைக் கட்டாயமாகக் குறிப்பிட வேண்டும்.

**“இம்மனு நமக்குத் தலைவலியைக் கொடுக்கும்”**

என்ற நிலை இருக்கும் போது, ஒரு சில நீதிபதிகள் திரும்ப எத்தனை நாட்களுக்குள் சமர்ப்பிக்க வேண்டும் எனக் குறிப்பிடுவதில்லை.

**கால அளவு குறிப்பிடப்படாததால், எப்போது வேண்டுமானாலும் தாக்கல் செய்யலாம் என நினைப்போம்.**

ஆனால், உ.வி.மு.வி கட்டளை 6 விதி 18 இன்படி, உரிமையியல் தொடர்பான மனுக்கள் திருப்பப்பட்டால் பதினான்கு நாட்களுக்குள் கண்டிப்பாகத் தாக்கல் செய்தே ஆக வேண்டும்.

அப்படிச் செய்யாத போது கால வரையறைச் சட்டம் 1988-இன் பிரிவு 5-இன் கீழ் தாமத நாட்களை மன்னித்து மனுவை ஏற்றுக் கொள்ளக் கோர வேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்படுவதோடு, மனுவை ஏற்றுக் கொள்வதும், நிராகரிப்பதும் நீதிபதியின் இயல்பான அதிகாரத்திற்குள் சென்று விடும். எச்சரிக்கை!

## அத்தியாயம் - 5

## அழைப்பாணை தொடர்பானவை

மனுவை / வழக்கை விசாரணைக்கு எடுத்துக் கொண்டு எண் கொடுக்கப்பட்டதும் எதிர்மனுதாருக்கு அழைப்பாணை அனுப்ப வேண்டிய சூழல் ஏற்படுகிறது.

காவல்துறை மூலமான அல்லது தனி நபரால் தொடுக்கப்படும் குற்ற வழக்கு என்றால் காவல்துறையே எதிரிக்கு அழைப்பாணையைச் சார்பு செய்து விடுவார்கள்.

எதிரி அரசு ஊழியர்களாக இருந்தால் பணியிட மாற்றம் செய்யப்படுவதுண்டு. அவ்வாறு பணியிட



மாறுதல் செய்யப்பட்ட இடம் எதுவென்று தெரிய வில்லையே என நாம் கவலைப்படத் தேவையில்லை.

ஏனெனில், சட்ட விதிகளின்படி அரசு பணியாளராக எத்துறையில் பணியாற்றுகிறாரோ அத்துறையின் தலைவருக்கு அனுப்பி அவர் மூலமாக நீதிமன்றமே சார்பு செய்ய வேண்டும்.

உரிமையியல் என்றால் நீதிமன்ற ஊழியர்கள் நேரடியாகச் சார்பு செய்ய வேண்டும். இப்படிச் சார்வு செய்வதில் பல லீலைகளை அவர்கள் செய்கிறார்கள்.

மிக முக்கியமாகப் பிச்சை பெற்றுக் கொண்டு எதிர் மனுதாரர் இல்லை என்று காரணம் கூறியே சார்பு செய்யாமல் இருப்பார்கள். எதிர்மனுதாரர் வீட்டில் உள்ள 18 வயது நிரம்பியவர்களிடம் அல்லது முகவரிடம் சார்பு செய்ய சட்ட விதி இருந்தாலும் அதையெல்லாம் சட்டை செய்வதில்லை.

எனவே, வழக்கைத் தாக்கல் செய்யும் போதே உ.வி.மு.வி கட்டளை 5 விதி 19 இன் கூடுதல் சேர்க்கை 1-இன்படி, எதிர்தரப்புக்கான அழைப்பாணையை நாமே ஒப்புதல் இணைந்த பதிவஞ்சல் மூலமாக அனுப்பக் கோரிக்கை வைத்தால் நீதிமன்றம் உத்தரவு பிறப்பிக்கும். அதன் பேரில் சார்பு செய்து விடலாம்.

உரிமையியலில் எதிர்மனுதார் மற்றும் சாட்சிகளுக்கு உரிய அழைப்பாணையை பதிவு அஞ்சல் மூலம் சார்பு செய்ய உரிமை இருந்தாலும் கூட, குற்றவியலைப் பொருத்தவரை சாட்சிக்கு மட்டுமேதான் அஞ்சல் வழியில் அனுப்ப முடியும். எதிரிக்கு நேரில்தான் சார்பு செய்ய வேண்டும்.

நாமே அழைப்பாணையை அனுப்ப ஒரு வெள்ளைக் காகிதத்தில் அனுப்புதல், பெறுதல், பொருள், எந்த நீதிமன்றத்தில் ஊரில் வழக்கு தொடரப்பட்டுள்ளது.

அதில் என்றைக்கு அழைப்பாணைக்கு உரியவர் முன்னிலைப்பட வேண்டும் என்பன போன்ற சங்கதிகளை தெளிவாக எழுதி அல்லது தட்டச்சுச் செய்து நீதிமன்றம் உத்தரவு பிறப்பித்த அன்றோ அல்லது ஓரிரு நாட்களிலோ கட்டாயம் அனுப்பி விடவேண்டும்.

இப்படி அனுப்பிய இரண்டாவது அல்லது மூன்றாவது நாள் அக்கடிதம் இந்தியாவின் எந்தப் பகுதியாக இருந்தாலும் சென்று சேர்ந்து விடும் என்பதால் அதற்கான ஒப்புதல் ஒரு வாரம் முதல் பத்து நாட்களுக்குள் கிடைத்து விடும். முக்கியமாக அஞ்சல் ஒப்புகையில் அனுப்பிய ஊரின் அஞ்சலக முத்திரை மற்றும் அஞ்சலை ஒப்படைத்த ஊரின் அஞ்சலக முத்திரை எனக் குறைந்தது இரண்டு இருக்க வேண்டும்.

சில சமயங்களில் ஒப்புகை அட்டை வராது போனால், கடிதம் அனுப்பிய விபரங்கள் குறித்தும், அதன் நிலை என்ன என்பது குறித்தும் சம்பந்தப்பட அஞ்சலகத்தில் எழுதிக் கேட்கலாம் அல்லது மாவட்டத் தலைமை அஞ்சலக அதிகாரிக்கு அஞ்சல் அட்டை எழுதிப் போட்டாலே போதும். நீங்கள் அனுப்பிய பதிவு அஞ்சல் கடிதம் ஒப்படைக்கப்பட்டது குறித்துச் சான்றுக் கடிதம் ஒன்றை அளிப்பார்கள். இது தக்க ஆதாரமாகும்.

அழைப்பாணையின் நகலையும், அதைப் பெற்றுக் கொண்டதற்கு அடையாளமான பதிவு அஞ்சலின் ஒப்புகை அட்டையையும் வழக்கு விசாரணை நாளன்று ஒரு மனுவோடு இணைத்துத் தாக்கல் செய்ய வேண்டும். மனுவில் அழைப்பாணையைப் பதிவு அஞ்சலில் அனுப்பிய தேதி, பதிவு எண், அனுப்பிய அஞ்சலகத்தின் பெயர், அதை எதிர்மனுதார் ஒப்புகையில் ஒப்பமிட்டுப் பெற்றுக் கொண்ட விபரம் ஆகிய சங்கதிகள் இருந்தால் போதும்.



## அத்தியாயம் - 6

### எதிர்மனுதாரர் தொடர்பானவை

நீதிமன்றத்தின் அழைப்பாணையை அல்லது அதன் பேரில் அனுப்பப்படும் தனி நபர் அழைப்பாணையைப் பெறும் எவர் ஒருவரும் அதில் சொல்லப்பட்ட தேதியில், நேரத்தில் நீதிமன்றத்தில் முன்னிலையாக வேண்டியது கட்டாயமாகும்.

குற்றவியல் வழக்கு என்றால் பிடியாணை பிறப்பிக்கப்படும் என்ற பயத்தில் அதிகபட்சம் முன்னிலையாகி விடுவார்கள். ஆனால், உரிமையியல் வழக்கில் அதிகபட்சம் அப்படி முன்னிலையாவதில்லை.

முன்னிலையாகவில்லை என்றால், "நீதிபதிகள் வழக்கை மனுதாருக்குச் சாதகமாகவும், எதிர் மனுதாருக்கு பாதகமாகவும் ஒரு தரப்பாகத் தீர்ப்புரைப்பதை வழக்கமாக வைத்துள்ளார்கள்".

**மனுதாருக்கு இதில் உள்ள சூட்சுமங்கள் தெரியாததால், ஒரு தரப்பு தீர்ப்பில் மகிழ்ச்சியடைந்து விடுவார். வக்கீல்கள் இதுதான் தக்க சமயம் என்று ஒரே விசாரணையில் வழக்கை முடித்து விட்டதாகக் கூறிக் காசைக் கறந்து விடுவார்கள்.**

### ஒரு தரப்புத் தீர்ப்பு எவ்விதத்திலும் சரியல்ல

இரண்டு தரப்பையும் முறையாக விசாரணை செய்து வழங்கும் தீர்ப்புதான் சரியானது என்ற முறையில் அதைக் கடைப்பிடிக்காமல் ஒரு தரப்பாகத் தீர்ப்புரைப்பது, அதாவது நீங்கள் என்ன கோரிக்கை வைக்கிறீர்களோ அதற்கான காரண காரியங்கள், தக்க சான்றுகள் இருக்கிறதா? என்பதையெல்லாம் அலசி ஆராயாமல்

தீர்ப்புரைப்பது எதிர்மனுதாரர் அது குறித்து ஆட்சேபணை செய்யாதவரை மட்டுமே சட்டப்படி செல்லத்தக்கது.

"ஆட்சேபணை செய்யும் பட்சத்தில் செல்லாது" என்பதால் இவ்விரண்டு நிலைகளுக்குமே சட்ட விதிகளில் இடமிருக்கிறது.

அதேபோல, நீதிமன்ற உத்தரவுக்குக் கட்டுப்படாத ஒருவரை ஆறுமாதம் வரையில் சிறையில் அடைக்க இ.த.ச பிரிவு 174 இன் கீழ் அதிகாரம் உள்ளது. ஆனால், "இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தி இதுவரை எவர் ஒருவரும் சிறையில் அடைக்கப்பட்டதாகத் தெரியவில்லை".

வக்கீல்கள் தங்களின் சுயநலம் ஒன்றே பெரிதெனக் கருதி இதுபோன்ற நடவடிக்கைகளை மேற்கொண்டதில்லை என்பதால், வக்கீலாய் இருந்து நீதிபதிகளான நீதிபதிகளுக்கும் நடவடிக்கை எடுக்க மனமில்லை.

இது குறித்து கேட்டால், "எவர் ஒருவரும் தனக்குத் தானே நீதிபதியாக இருக்க முடியாது" என்ற அடிப்படை தத்துவத்தில் எந்த நீதிமன்றம் அழைப்பாணை அனுப்பியதோ அந்நீதிமன்றமே சம்பந்தப்பட்டவரைத் தண்டிக்க முடியுமா?

உரிமையியல் சார்ந்த நீதிமன்றங்களுக்குச் சிறைத் தண்டனை வழங்கும் அதிகாரம் இருக்கிறதா? என்ற இரண்டு முக்கியமான சட்டப் பிரச்சினைகள் இருக்கின்றன என்பார்கள்.

அக்குற்றம் நீதிபதிக்கு எதிராக புரியப்பட்டுள்ளதா? அல்லது அந்நீதிபதியின் முன் நடக்கும் வழக்கு விசாரணையில் நடைபெற்றதா? என்பதைப் பொறுத்து இரண்டு வகையான குற்றங்களாகப் பிரிக்கலாம்.



## முன்னிலையில்லை என்றால் தண்டனை

குற்றம் நீதிபதிக்கு எதிராகப் புரியப்பட்டிருந்தால் அதனை கு.வி.மு.வி 479 இன் கீழ் அக்கறையுள்ள வழக்காகக் கருதி அக்குற்றம் குறித்து விசாரணை செய்யவும், தண்டனை வழங்கவும் அதிகாரம் இல்லை என்று சொல்லி விடலாம்.

நீதிபதி முன்பாக விசாரணையில் உள்ள வழக்குக்கு எதிரான குற்றம் என்றால், அதனை உரிய முறையில் விசாரணை செய்து தண்டனை வழங்கும் அதிகாரம் உண்டு. இதற்குக் குறிப்பிட்டு சொல்லும்படியான சட்டத்தடையோ அல்லது உரிமையோ கிடையாது என்றாலும்கூட நியாயத்தின் அடிப்படையில் செல்லத் தக்கதே. எவரும் ஏற்றுக்கொள்ள வேண்டியதேயாகும்.

இதிலும் குறிப்பாக, "அழைப்பாணைக்கு இணங்க நீதிமன்றத்துக்கு வருகை தராத போது முதல் நோக்கிலேயே தனக்கும், வருகை தராதவருக்கும் எந்தப் பிரச்சினையும் இல்லை" என்ற வலுவான காரணத்தின் அடிப்படையில் உரிமையியல் சார்ந்த நீதிபதிகள் தண்டனை வழங்க முன்வர வேண்டும். அப்போதுதான் வழக்குகள் விரைவில் முடிவுறும்.

## தகுதியின் அடிப்படையில் உத்தரவு

ஒரு தரப்புத் தீர்ப்பை எப்போது வேண்டுமானாலும், ரத்துச் செய்துவிட்டுப் புதிதாக விசாரணை நடத்திட வேண்டும் எனக் கோர முடியும் என்பதால், வழக்கை எதிர் கொள்ள இயலாத எதிர்மனுதாரர்கள் வழக்கின் ஒரு தரப்பு தீர்ப்பைத் ரத்து செய்து முன்னிலையாவார்கள்.

பின் அடுத்தடுத்த விசாரணைகளில் மீண்டும் காணாமல் போய் விட, மீண்டும் ஒரு தரப்புத்தீர்ப்பு உட்பட வழக்கு

அப்படியே காலாகாலத்துக்கும் தொடர்கதையாகி விடுகிறது.

இவைகளைத் தடுக்க இரண்டு வழிகளில் ஒன்றுதான் சிறை தண்டனைக்கு உள்ளாக்குவது. இச்சட்டக் கடமையைச் செய்ய வலியுறுத்துவது மனுதாரரின் தார்மீக உரிமையாகும். நீதிபதிகள் முன்வராத போது, தகுதியின் அடிப்படையில் வழக்கை நடத்தி முடிக்க வேண்டும் என கோரலாம்.

**'தகுதியின் அடிப்படையில் வழக்கை நடத்துவது என்றால் என்ன?'** என்பதும் எல்லோருக்கும் புரியாத புதிராகத்தான் இருக்கிறது. ஏனெனில், இதற்குச் சட்ட விதிகளில் வரையறை ஏதும் இல்லை.

அதாவது, **'ஒரு வழக்கில் எதிர்தரப்பினர் வந்திருந்து வழக்கை நடத்தினால் எந்த அளவிற்குக் கேள்விகளைக் கேட்டு நடத்துவார்களோ அதையே எதிர்தரப்பினர் வராத போது நீதிபதி கடைப்பிடித்து வழக்கை விசாரணை செய்து முடிப்பது'** என்று பொருள் கொள்ளலாம்.

**"குடும்ப நல நீதிமன்றங்களின் அடிப்படை நோக்கமே பிரிந்து வாழும் தம்பதிகளைச் சேர்த்து வைப்பதுதான்".**

ஆனால், விவாகரத்து போன்ற வழக்குகளில் கூட, ஒரு தரப்பு உணர்ச்சி வசப்பட்டு விவாகரத்துக் கேட்கும் போது எதிர்தரப்பு முன்னிலையாகாத நிலையில் எந்த விசாரணையும் இல்லாமல் ஒருதரப்பாகத் தீர்ப்புரைப்பது ஒருதரப்பு தீர்ப்புக் கொடுமையின் உச்சக்கட்டம்.

முக்கிய குறிப்பு: ஒரு தரப்பாக வழங்கப்படும் தீர்ப்பை எதிர்த்து தகுதியின் அடிப்படையில் உத்தரவு பிறப்பிக்கக கோரும் உங்கள் கோரிக்கை நிராகரிக்கப்பட்டாலும், அல்லது ஒரு தரப்பு தீர்ப்பை ரத்து செய்த பின்னர்



நீதிமன்றத்துக்கு வருகை தராது போனாலும் அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்.

இதற்கு இருக்கிறது மாற்று சட்ட வழி மனுத்தாக்கல். இதற்கு **"மீட்டளிப்பு மனு"** என்று பெயர். இம்மனுவை சமர்ப்பித்தால் நீக்கப்பட்ட ஒரு தரப்பான தீர்ப்பு மீண்டும் புதுப்பிக்கப்பட்டு அமலுக்கு வந்து விடும் என்பதோடு, அம்முடிவே அந்நீதிமன்றத்தைப் பொறுத்தவரை இறுதியான உத்தரவாகி விடும் என்பதால், அதனை எதிர்த்து மேல்முறையீடுதான் செய்ய வேண்டும்.

இம்மீட்டளிப்பு தொடர்பான சட்ட விதிகள் உரிமையியல் சார்ந்த எல்லா சட்டங்களிலும் இருக்கிறதா என்பது பற்றி எனக்கு சரியாக தெரியவில்லை. இல்லை என்றால் உரிய திருத்தங்களின் மூலம் கொண்டு வருவதற்கான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும்.

அது வரை **"நியாயம்தான் சட்டம்"** என்ற அடிப்படையில் நீதிமன்றத்தின் கடமையாக உத்தரவு பிறப்பிக்க வேண்டும் எனக் கோரி மீட்டளிப்பு மனு கொடுக்கும் புது யுக்தியை தைரியமாக கையாளுங்கள்.

குறிப்பாக, தொழிலாளர் தொடர்பான வழக்குகளில் முதலாளிகள் தொழிலாளியை அலைக்கழிப்பு செய்து, உரிமையை அல்லது இழந்த உரிமையை திரும்ப கொடுக்காமல் மறுத்து விட வேண்டும் என்பதில் குறியாக இருப்பார்கள். அவர்களை வழிக்கு கொண்டு வர, **"மீட்டளிப்பு மனு"** கைக்கொடுக்கும்.

தொழிலாளர்கள் தொழில் நல்லுறவு விதிகள் 1958-இன் விதி, 48-இன் கூடுதல் உட்சேர்க்கை 1-இன்கீழ் மீட்டளிப்பு மனுத்தாக்கல் செய்ய வேண்டும்.

முன்பாக ஒரு தரப்பு தீர்ப்பை ரத்து செய்யக்கோரும் மனுவின் மீது பதில் அளிக்கும் தொழிலாளி மனுதாரர்

தனது பதிலுரையில் மீட்டளிப்பு மனு குறித்தும், சட்ட விதிகளின்படி நிர்ணயிக்கப்பட்ட கால அளவிற்குள் வழக்கை நடத்தி முடிப்பேன் என்ற உத்திரவாதத்தை தர வேண்டும் என்றும் கோர உரிமையுண்டு. கூடவே, வருகை தவறியதற்கான காரணத்தையும் சரிபார்த்தும், எடுத்து உரைத்தும், மனுவை ஏற்க அல்லது நிராகரிக்க கோரலாம்.

## ஒரு தரப்பு தீர்ப்பை ரத்து செய்தல்

தனது சட்ட முறையான காரணங்களின் அடிப்படையில் நீதிமன்றத்தில் முன்னிலையாக இயலாமல் போன காரணத்தால் பிறப்பிக்கப்பட்ட ஒரு தரப்புத் தீர்ப்பை, தக்க காரணத்தையும் அதற்கான சான்றுகளையும் முன் வைத்து ஒரு தரப்புத் தீர்ப்பை ரத்துச் செய்து, மீண்டும் விசாரணை செய்ய வேண்டும் எனத் தனக்கு எதிராக தொடுக்கப்பட்ட அசல் வழக்கின் உள்ளாக இடைமனு ஒன்றை தாக்கல் செய்ய முடியும்.

தீர்ப்புரைத்த நீதிபதிகள் பெரும்பாலும் இப்படித் தாக்கல் செய்யப்படும் மனுக்களை ஏற்றுக் கொண்டு ஒரு தரப்புத் தீர்ப்பை ரத்துச் செய்து விடுவார்கள். ஒருசில சமயங்களில் மறுப்பார்கள். அப்படி மறுத்தால் அதற்கும் மேலான நீதிமன்றத்தில் சீராய்வு மனு அல்லது மேல் முறையீட்டு மனுவைத்தான் தாக்கல் செய்ய வேண்டும் என்பதை வக்கீல்கள் கடைப்பிடித்து வருகிறார்கள்.

ஆனால், நம்மைப் பொறுத்தவரை புதிது புதிதான மாற்றுச் சட்ட விதி வழி வகைகளைக் கண்டுபிடித்துச் செயல்படுத்துவதுதானே?! அந்த வகையில் நமக்கு எதிராகத் தீர்ப்புரைத்த நீதிபதியிடமே சீராய்வு மனுவைத் தாக்கல் செய்யலாம். இதுபற்றி விரிவாக இந்நூலின் பிற்பகுதியில் **'தீர்ப்புரைத்த நீதிபதியிடமே சீராய்வு'** என்ற தலைப்பில் தொகுத்துள்ளேன்.



## பதிலுரை தாக்கல்

எதிர்மனுதாரர் தனக்கு நீதிமன்றம் வழங்கும் சட்ட விதிமுறையான கால அளவிற்குள் பதிலுரை தாக்கல் செய்ய வேண்டியது கட்டாய கடமையாகும்.

இதில் தக்க ஆதாரங்களின் அடிப்படையில் பதில் தாக்கல் செய்ய ஏதுவாக (விதிவிலக்காக) கூடுதல் கால அவகாசமும் உண்டு. என்றாலும் கூட, தேவைப்பட்டால் மட்டுமே அதனைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

மனுவில் ஒவ்வொரு பத்தியிலும் என்ன சொல்லப் பட்டுள்ளதோ அதேபோல, அதற்குத் தக்க காரணங்களை முன்வைத்துப் பதிலுரையில் பதில் சொல்ல வேண்டும்.

கூடவே, என்ன பதில் சொல்லப்படுகிறதோ அதற்குத் தக்க ஆதாரங்களையும் பதிலுரையில் குறிப்பிடுவதோடு, அது தொடர்பான சான்றுகளை, சாட்சிகளைப் பட்டியலிட்டு சமர்ப்பிக்க வேண்டும்.

பதிலுரை தொடர்பான சான்றாவணம் தனது கைவசம் இல்லாத போது, அது யாருடைய பாதுகாப்பில் இருக்கிறது என்பதைக் குறிப்பிட்டு அதைத் தாக்கல் செய்ய வேண்டும் எனக் கோர வேண்டும்.

ஆனால், தற்போது இதற்கெல்லாம் தனியாக இடைமனு தாக்கல் செய்து காலத்தை வீணடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

தொடுக்கப்பட்ட வழக்கு உண்மையென்றால், அதனை ஒப்புக்கொண்டு சமரச முயற்சியில் ஈடுபட வேண்டும். பொய்யான வழக்கு என்றால் உ.வி.மு.வி கட்டளை 8 இன்படி எதிர்கோரிக்கை வைக்க வேண்டும் அல்லது வழக்கைத் தோற்கடித்துக் குற்ற நடவடிக்கை மேற்கொள்வேன் என தெரிவிக்கலாம்.

உ.வி.மு.வி கட்டளை 38-இன் படியான தீர்ப்புக்கு முன் பற்றுகை உரிமை மிகவும் தவறான முறையில் பயன் படுத்தப்படுவதால் அந்த விசயத்தில் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

## அத்தியாயம் - 7

### பதிலுரையின் மீது மனுதாரரின் நடவடிக்கை

சில சமயம், எதிர்மனுதாரர் பதிலுரையை படித்த பின்னர்தான் மனுவில் சொன்ன சங்கதிகளில் கூடுதல் அல்லது குறைச்சல் தெரியவரும்.

இதனால் வழக்கு நடவடிக்கை என்னாகுமோ என அச்சப்படத் தேவையில்லை. மனுவில் ஏதும் திருத்தங்களைச் செய்ய அனுமதியுண்டு.

பின்னர், திருத்தங்களின் அடிப்படையில் விசாரணை நடைபெறும். இவ்வகைத் திருத்தம் குற்றவியல் மற்றும் உரிமையியல் சார்ந்த இருவகையான வழக்குகளுக்குமே பொருந்தும்.

பதிலுரையில் எதிர்மனுதாரர் பொய்யான தகவலைத் தெரிவித்திருந்தாலோ அல்லது வேறு சட்டச் சிக்கலை ஏற்படுத்தி இருந்தாலோ அது தொடர்பாக விளக்க மளிக்கவும், தெளிவுபடுத்தவும் மனுதாரருக்கு இருக்கும் நல்லதொரு வாய்ப்புத்தான் **'எதிருரை'** சமர்பிப்பது.

எதிருரை சமர்ப்பிக்கும் போது அவ்வுரையை மெய்ப்பிக்கும் வகையில் தேவைப்படும் ஆதாரச் சான்றுகள் மற்றும் சாட்சிகளின் பட்டியலைக் கூட்வே தாக்கல் செய்ய வேண்டும்.



## அத்தியாயம் - 8, 9

### மனு / பதிலுரை மீதான விசாரணை

எதிருரை தாக்கல் செய்வது வரை வழக்குப் பரிசீலனையில் இருப்பதாக அர்த்தம். இதற்குப் பிறகுதான் விசாரணை ஆரம்பமாகிறது. இதனை உரிமையியல் சார்ந்த வழக்கில் **'விசாரணை'** என்றும், குற்றவியல் சார்ந்த வழக்கில் **'வழக்கு விசாரணை'** என்றும் இருவிதமாக குறிப்பிடுவார்கள் என்றாலும் இரண்டுக்கும் சட்ட ரீதியான செயல்முறையில் வேறுபாடுகள் ஏதும் கிடையாது.

விசாரணைக்கு என்று குறிப்பிடப்படும் நாளில் மனுதார்/வழக்கைத் தாக்கல் செய்தவர் வழக்கு தொடர்பாக தனது சாட்சியத்தை நீதிமன்றத்தில் அளிக்க வேண்டும். சாட்சியம் அளிக்க ஆகும் காலத்தைக் கருத்தில் கொண்டு உருவாக்கப்பட்டதுதான், **'உறுதிமொழி பத்திரம்'** தாக்கல் செய்வது ஆகும்.

இதனால் பொன்னான நேரம் மிச்சமாவதோடு, சாட்சிக் கூண்டில் ஏறிச் சாட்சியம் அளிக்கும் போது பழக்கமின்மையால் ஏற்படும் பயம் மற்றும் அவசர கதியில் சொல்ல வந்ததைச் சொல்லாமல் விடுதல், சொன்ன சங்கதிகளை நீதிமன்ற ஊழியர் தவறாகத் தட்டச்சுச் செய்தல் போன்ற பல்வேறு குழப்பங்களில் இருந்து தப்பிக்கலாம்.

ஆனால், **"இந்த உறுதிமொழிப் பத்திரம் உரிமையியல் சார்ந்த வழக்குகளில் மட்டுமே தாக்கல் செய்வது நடைமுறையில் இருந்து வருகிறது. குற்றவியல் வழக்குகளிலும் கு.வி.மு.வி விதி 297-இன்படிப் பயன்படுத்திக் கொள்வது சாலச்சிறந்தது".**

எந்த சங்கதியைப்பற்றி சாட்சியம் அளிக்கப் படுகிறதோ அதனதன் முடிவில் அதற்கான ஆதாரச் சான்றை **'மனுதாரர் தரப்புச் சான்றாவணம் 1, 2... என குறியீடு'** செய்து கொள்கிறேன் என வரிசைக் கிரமமாக அனைத்துச் சான்றுகளையும் குறிப்பிட வேண்டும். மனுதாரர் தரப்புச் சாட்சிகளும் இப்படியே செய்ய வேண்டும்.

**உறுதிமொழிப் பத்திரம் முழுக்க முழுக்க ஒருமையில் தன்னை முன்னிலைப்படுத்திக் கொள்வதாக அமைய வேண்டியது மிக முக்கியம்.** மனு ஒருமை வாக்கியத்திலோ அல்லது மூன்றாம் வாக்கியத்திலோ இருக்கலாம்.

அதாவது, மனுவில் நான், எனது மற்றும் மனுதார் என எப்படி வேண்டுமானாலும் குறிப்பிடலாம். ஆனால், உறுதிமொழி பத்திரத்தில் மனுதாரர் என்ற சொல்லை மனுதாரரோ அல்லது எதிர்மனுதாரர் என்ற சொல்லை எதிர்மனுதாரரோ பயன்படுத்தக் கூடாது. இக்கட்டுப்பாடு சாட்சிகளுக்கும் பொருந்தும்.

மனுதாரரின் உறுதிமொழியை அடுத்து நிர்ணயிக்கப்பட்ட நாளில், **'எதிர்மனுதாரர் தனது மற்றும் தனது தரப்பு சாட்சிகளின் உறுதிமொழிகளையும் தாக்கல் செய்ய வேண்டும்'.**

**அத்தியாயம் - *10, 11***

## குறுக்கு விசாரணை

இருதரப்பு உறுதிமொழிகளும் தாக்கல் செய்யப்பட்ட பிறகு நிர்ணயிக்கப்பட்ட நாளில் மனுதாரர் மற்றும் அவர் தரப்புச் சாட்சிகளை எதிர்மனுதாரர் குறுக்கு விசாரணை செய்யவேண்டும்.



கண்ணால் காண்பதும் பொய். காதால் கேட்பதும் பொய். தீர விசாரிப்பதே மெய்! என்பதன் அடிப்படையே **'குறுக்கு விசாரணைதான்'.**

ஆனால், **தீர விசாரணை என்றால் இரண்டு கட்சிகாரர்களின், வழக்காளிகளின் பணமும், சொத்துக்களும் தீரும்வரை விசாரிப்பதே தீரத்தீர விசாரிப்பது என வக்கீல்களும், நீதிபதிகளும் நினைத்து அதன்படியே தீர்க்கவும் செய்கிறார்கள்.**

குறுக்கு விசாரணையைக் கீழ்க்கண்டபடி மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

அ) கேள்வியைக் கேட்டு விரிவான பதிலை வர வைப்பது.

ஆ) நாம் என்ன பதில் வர வேண்டும் என எதிர் பார்க்கிறோமோ அதற்குத் தக்கவாறு கேள்வியை எழுப்பி **'ஆம் அல்லது இல்லை'** என்ற பதிலை மட்டும் வர வைப்பது.

இ) ஆதாரச் சான்றைக் காண்பித்து ஒப்புக் கொள்கிறாரா? அல்லது மறுக்கிறாரா? என்று பதிலை வரவழைப்பது.

உண்மையில், வழக்கு உண்மையாக இருந்தால் சாட்சியை அல்லது வழக்கைப் பொய்யென மெய்ப்பிக்கக் குறைந்த பட்சம் மூன்று கேள்விகளும் அதிகபட்சம் ஏழு கேள்விகளும் போதும்.

இதற்கு மேல் கேள்விகள் கேட்கப்படும் சூழ்நிலை உருவானால் அவ்வழக்கில் ஓரளவேனும் உண்மை இருக்கிறது என்றே அர்த்தம்.

## முதல் விசாரணையும், ஒப்பமிடுதலின் முக்கியத்துவமும்

எந்த வகையான வழக்காக இருந்தாலும் வழக்குத் தொடுத்தவரை அல்லது மனுதாரரை மட்டுமே முதலில் விசாரணை செய்வார்கள். அதாவது நடந்தது என்ன? என்பது குறித்து சாட்சிக்கூண்டில் ஏற்றி சத்தியப் பிரமாணம் செய்வித்து வாக்குமூலம் வாங்குவார்கள்.

அதன்பின் அவரது தரப்புச் சாட்சிகள் யாராவது இருப்பின் அவர்களையும் அப்படியே செய்வார்கள்.

இப்படிச் செய்யப்படும் விசாரணைக்கு முதல் விசாரணை என்று பெயர். இதனை தரப்பினர்களின் தரப்பில் வக்கீல் இருந்தால் அவர் கேட்க (எடுத்துக் கொடுக்க) தரப்பினர்கள் சொல்ல (எடுத்துக் கொடுத்ததை சொல்ல) நீதிபதியின் உதவியாளர் தட்டச்சுச் செய்து கொள்வார்.

அதன் பின் அதில் சாட்சியம் அளித்தவர் தான் சாட்சியமாக சொன்ன சங்கதிகள்தாம் சரியாக தட்டச்சு செய்யப்பட்டுள்ளதா? என்பதை ஆற அமரப் படித்துப் பார்த்து, திருத்தங்கள் ஏதும் இருப்பின் அதனைத் திருத்தச் சொல்லி நீதிபதியிடம் கொடுக்க வேண்டும்.

முழுமையாக திருத்திய பின்னர் அதில் எத்தனை திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன என்பதை எழுத்தால் எழுதிய பின்னரே அதில் கையொப்பமிட வேண்டும்.

இப்படிச் செய்யவில்லை என்றால் நீங்கள் கையெழுத்திட்ட பின் அதில் உள்ள தவறுகளை வைத்தே வழக்கை உங்களுக்குப் பாதகமாக முடித்து விடுவார்கள் அல்லது உங்கள் மேலேயே பொய் சாட்சி சொன்னதாக நடவடிக்கை எடுக்க முயல்வார்கள் அல்லது கூடுதல்



திருத்தங்களைச் செய்து உங்களைத் தோற்கடித்து விடுவார்கள்.

பின், **“எந்த நீதிமன்றத்துக்குச் சென்றாலும் நீங்கள் கையெழுத்திட்ட வாக்குமூலம்தான் செல்லும்”** என்பதால் மிகுந்த எச்சரிக்கை! எச்சரிக்கை!!

உறுதிமொழிப் பத்திரம் தாக்கல் செய்திருந்தால் அதுதான் முதல் விசாரணையாகும். உறுதிமொழிப் பத்திரத்தைத் தேவையான கால அவகாசத்தில் தயார் செய்து பயன்படுத்தக் கற்றுக் கொண்டால் நேரடியாகச் சாட்சியம் அளித்தல் மற்றும் அதில் ஏற்படும் இன்ன பிற சிக்கல்களைத் தவிர்க்கலாம்.

**“தன் வழக்கைத் தானே நடத்த முயல்பவர்களுக்கு உறுதிமொழிப் பத்திரம் தாக்கல் செய்வது பல விதத்தில் பேருதவியாக”** இருக்கும்.

ஒருவேளை நேரடியாக நீதிமன்றத்தில் சாட்சியம் அளிப்பதாக இருந்தால் வழக்குச் சம்பந்தமாக தெரிந்த விபரங்களைத் தானாகவே சொல்லச் சொல்லச் தட்டச்சு செய்து கொள்வார்கள். மேலும், தேவைப்படும் விபரங்களை நீதிபதியும் கேட்டுக் கொள்வார்.

## குறுக்கு விசாரணையில் குற்றத்தை ஒப்புக்கொள்ள வைப்பதெப்படி?

வக்கீல் வைத்து வழக்கு நடத்துபவர்கள் சாட்சியாக என்ன சொல்ல வேண்டும் என்பதை எடுத்துக்கூறி **‘ஆம் அல்லது இல்லை’** என்ற கேள்வியை மட்டும் கேட்பார்கள். சாட்சியோ சுதாரித்துக் கொண்டு ஆம் அல்லது இல்லை என்று கூறுவார்கள்.

ஒரு சாட்சியை அவரது வக்கீல் இப்படி ஆம் அல்லது

இல்லை என்ற வகையில் கேள்வி கேட்கிறார் என்றாலே அவ்வழக்கில், நியாயம் இல்லை அல்லது அவ்வளவாக இல்லை என்ற முடிவுக்கு நீங்கள் வந்து விடலாம்.

## "விடை பொதி வினா" மூலம் "போட்டு வாங்குவது" எப்படி?

இப்படி கேட்கப்படும் கேள்விக்கு **'விடை பொதி வினா'** என்று பெயர். அதாவது சாட்சியிடம் இருந்து என்ன விடை வர வேண்டும் என எதிர்பார்க்கிறோமோ அதற்கு ஏற்றவாறு கேள்வியைக் கேட்டு, ஆம் அல்லது இல்லை என்ற பதிலை வரவழைப்பதாகும்.

இப்படிப்பட்ட விடை பொதி வினாவை, **"ஒரு சாட்சியிடம் அந்தச் சாட்சிக்கு எதிரான தரப்பினர் மட்டுமே நீதிமன்றத்தின் அனுமதி பெறாமல் கேட்க முடியும்"**.

சாட்சி யாருக்கு ஆதரவாக வருகிறாரோ அத்தரப்பு முதல் மற்றும் மறு விசாரணையில் விடை பொதி வினாவைக் கேட்கக் கூடாது என ஆட்சேபணை செய்வதற்கு நீதிமன்ற சாசன உறுபு 142-இன்கீழ் எதிர்தரப்பினருக்கு உரிமையுண்டு.

ஆனாலும், சாட்சியின் இயலாமை மற்றும் மற்ற சிறப்பான காரணங்களை கருத்தில் கொண்டு நீதிமன்றம் அனுமதியளிக்க முடியும்.

ஒருவேளை உங்களின் ஆட்சேபணையை மீறிச் சட்டத்துக்குப் புறம்பாக நீதிமன்றம் அனுமதியளித்தால், என்ன காரணத்துக்காக அனுமதியளிக்கப்படுகிறது என்பது குறித்து வழக்கு விசாரணை நாட்குறிப்பில் குறிப்பு எழுத வலியுறுத்த வேண்டும், அல்லது சிறு ஞாபக குறித்து கொடுத்து அதில் உத்தரவாக பதிவு செய்ய வலியுறுத்த வேண்டும்.



## சாட்சியத்தின் சான்று நகலை உடனே பெற வேண்டும்

இப்படி அளிக்கப்படும் சாட்சியத்தின் மீது குறுக்கு விசாரணைக்குத் தேவையான கேள்விகளை தயார் செய்வதற்காக அச்சாட்சியத்தின் சான்று நகலை அன்றைய தினமே பெற்றுக் கொள்ள வேண்டும்.

ஒரு பொது ஆவணத்தைச்ச சான்று நகலாகப் பெற விண்ணப்பிக்கும் போது அப்பொது ஆவணத்தின் அப்பழுக்கற்ற பிரதி நகல் (ஜெராக்ஸ்) வேண்டும் எனக் கோர வேண்டும்.

அப்படியில்லாமல் தட்டச்சுச் செய்து தர நேர்ந்தால் கால விரயத்தோடு, தெரிந்தோ அல்லது தெரியாமலோ ஆவணத்தின் கருத்துக்களை பிழைகளோடு தட்டச்சு செய்து தர வாய்ப்புண்டு என்பதால் எச்சரிக்கை! எச்சரிக்கை!!

அப்படிப் பெற்றுக் கொள்ளவில்லை என்றால், நீதிபதியின் துணையோடு வேறு சாட்சியத்தைத் தயார் செய்து வழக்கில் சேர்த்து விடும் ஆபத்தும் இருக்கிறது. ஆமாம்! இன்றைய நீதிமன்றங்களின் செயல்பாடுகள் அப்படித்தான் இருக்கின்றன.

## முரண்படுத்தி முட்டாளாக்குவது எப்படி?

சாட்சி சொல்வது பொய் என நிரூபிக்க நினைப்பவர்கள், சாட்சி சொல்வது மட்டும் பொய்யல்ல. சாட்சி சொல்ல வந்திருப்பவரே பொய் என்பதை நிரூபிக்கும் வண்ணம் கேள்விகளைத் தயார் செய்து கொள்ள வேண்டியது கட்டாயக் கடமையாகும்.

இதன் நோக்கத்திற்காக எதிர்மனுதார் மனுதாரின்

மனு, எதிருரை, உறுதிமொழி மற்றும் சாட்சிகளின் உறுதிமொழிகளில் இருந்து ஒன்றுக்கொன்று முரணாக உள்ள சங்கதிகளைக் கேள்வி கேட்பதற்காக குறிப்பாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

பின், இவைகளில் எது உண்மையோ அதற்கான சான்றுகளைக் கொண்டு அல்லது தம்மிடம் உள்ள ஆதாரச்சான்றுகளைக் கொண்டு தரப்பினர் மற்றும் தரப்பினரின் சாட்சிகளை எதிர்மனுதாரர் முரண்படுத்தி உண்மையை ஒப்புக்கொள்ள வைக்க வேண்டும்.

இப்படித் தங்கள் வசம் உள்ள சான்றுகளின் மூலம் உண்மையை ஒப்புக் கொள்ள வைக்கும் போது அந்தச் சான்றாவணத்தை நீதிமன்ற சாசன உறுபு 145 இன்படி, அச்சாட்சிக்கு காட்ட வேண்டும். அச்சாட்சி முரண்பாட்டை ஒப்புக் கொண்டாலும் அல்லது மறுத்தாலும் அதைப் பற்றி கவனத்தில் எடுத்துக் கொள்ளாமல் உங்கள் தரப்பு ஆதாரச் சான்றாவணமாகக் குறியீடு செய்து கொள்ள வேண்டும்.

உண்மையை வெளிக்கொண்டு வரும் நோக்கில் எந்த ஒரு சாட்சியையும் (வழக்கில் தொடர்புடைய சாட்சிகள், தரப்பினர்கள் உட்பட) நீதிமன்ற சாசன உறுபு 141-இன்படி, **'விடை பொதி வினா'** எழுப்பிக் குறுக்கு விசாரணை செய்யலாம்.

உங்களுக்கு ஆதரவான சாட்சி என்று ஒருவரை மிகுந்த நம்பிக்கையோடு சாட்சியாக அழைத்து வருகிறீர்கள் அல்லது நீதிமன்ற அழைப்பாணை விடுவித்து அழைக்கிறீர்கள்.

ஆனால் அந்த சாட்சியோ யாது காரணம் கருதியோ உண்மையை மறைத்துப் பொய்யான சாட்சியத்தை அளிக்கிறார். **"நீங்கள் அழைத்து வந்த சாட்சி என்பதாலேயே அவர் சொன்ன சான்று அப்படியே உங்களைக் கட்டுப்படுத்தும் என்பதில்லை".**



அச்சாட்சி பொய் சொல்கிறார். அவரின் கூற்று உங்களைக் கட்டுப்படுத்தாது என்பதை நிரூபித்து, பொய் சாட்சியம் அளித்த சாட்சியை வழக்கில் சிக்க வைக்கவும் உங்களுக்கு ஒரு வாய்ப்புண்டு.

ஆம்! நீங்கள் அழைத்து வந்த அல்லது அழைத்த சாட்சியின் சாட்சியத்தின் மீது குறுக்கு விசாரணை செய்ய எப்படி எதிர்தரப்பினருக்கு உரிமையுண்டோ அது போலவே நீதிமன்ற சாசன உறுபு 154-இன்படி உங்களுக்கும் உண்டு.

சாட்சியாக யார் யாரை அழைக்கலாம் என்பது பற்றி நீதிமன்ற சாசன உறுபுகள் 118 முதல் 134 வரையில் அறிவுறுத்தப்பட்டுள்ளது.

மற்ற சட்டங்களை விட நீதிமன்ற சாசனம்தான் உலக அளவில் ஒரே மாதிரியாக இருப்பதால் இதனை நன்றாகவே தெரிந்து வைத்துக் கொள்வது நல்லது.

மகாத்மா காந்திக்கு இந்த சட்டம் நன்றாக தெரிந்த ஒரே காரணத்தால்தான் ஆதாரங்களின் அடிப்படையில் உண்மையான வழக்குகள் எவை என கண்டு பிடித்து நியாயத்தை தேடித்தர முடிந்தது என்பதும், இங்கிலாந்து, தென்னாப்பிரிக்கா போன்ற வெளிநாடுகளின் உச்ச நீதிமன்றங்களில் கூட திறமையை வெளிப்படுத்த முடிந்தது என்பதும் அவர் சொல்ல மறந்து விட்ட செய்தியாகும்.

## பிறழ் சாட்சியைப் பின்னியெடுக்கணும்

அப்படிக் குறுக்கு விசாரணை செய்து அவரின் சாட்சியம் பொய் என்பதை முரண்படுத்தி விட்டால் அந்தச் சாட்சி பிறழ் சாட்சியாகி விடுவார். **'பிறழ் சாட்சி'**

என்றால் உண்மையில் இருந்து தடம்புரண்டு வேண்டு மென்றே பொய்ச் சாட்சி புகன்றவர் என்று பொருள்.

இவர் மீதும் பொய்ச் சான்றுரைத்த காரணத்துக்காகக் குற்ற நடவடிக்கை எடுக்க முடியும். கட்டாயம் எடுக்க வேண்டும்.

ஆனால், காவல்துறை தொடுக்கும் குற்ற வழக்குகளில் சாட்சிகள் பல்டியடித்தால் அவர்களைப் பிறழ் சாட்சிகள் என அறிவித்து அவர்களின் சாட்சியத்தைப் புறந்தள்ளி விடுவார்களே தவிர, அவர்கள் மீது சட்ட ரீதியான நடவடிக்கைகளை மேற்கொள்வதில்லை என்பதால் தான் குற்றங்களின் எண்ணிக்கையும், பிறழ்சாட்சி, பொய்ச் சாட்சிகளின் எண்ணிக்கையும் நாளுக்கு நாள் அதிகரித்துள்ளது. குற்றமும் குறைந்தபாடில்லை.

தன் வழக்கில் தானே வாதாடுபவர்கள் இதையெல்லாம் கவனத்தில் கொண்டு மிகவும் சரியான சட்ட வழியில் நடவடிக்கை மேற்கொள்ள வேண்டும். அப்போதுதான் சட்ட விழிப்புணர்வின் உண்மையான நோக்கத்தை நிறைவேற்றவும், சீர்கெட்டுக் கிடக்கும் நீதித்துறையைச் சீர்திருத்தவும் முடியும்.

இதே நடைமுறைகள் மனுதாரர் மற்றும் எதிர் மனுதாரர் ஆகிய இரு தரப்புக்கும் பொருந்தும்.

## குற்ற வழக்கில் உள்ள குறைபாடுகள்

உரிமையியல் சார்ந்த வழக்குகளில் இருதரப்பு விசாரணைக்குப் பின்னர்தான் தீர்ப்பு உரைக்கப் படுகிறது. ஆனால், குற்ற வழக்கில் அப்படியில்லாமல் காவல்துறை தொடுக்கும் புகார் மற்றும் தனிநபர் தொடுக்கும் புகார் என்ற இருவிதமான புகார்களில் மூன்று விதமான விசாரணைகள் மேற்கொள்ளப்படுகின்றன.



அதாவது, ஒரு தரப்பை மட்டும் விசாரணை செய்து விடுவிப்பது அல்லது இருதரப்பையும் விசாரணை செய்து விடுவிப்பது அல்லது தண்டிப்பது என்பதே. இதனை மூன்று வகைகளாக பிரிக்கலாம்.

அ) தனிப் புகாரைப் பொறுத்தவரை குற்றம் சாற்றப்பட்டவரை நீதிமன்றத்துக்கு அழைக்காமல் குற்றம் சாற்றியவரை மட்டும் விசாரணை செய்து குற்றச்சாற்றுக்கான அடிப்படைக் காரணமே இல்லை என்று கூறி அடிப்படையிலேயே புகாரை நிராகரித்து விடுவது.

ஆ) காவல்துறை வழக்கைப் பொறுத்தவரை, குற்றம் சாற்றப்பட்டவரை நீதிமன்றத்துக்கு அழைத்துக் குற்றம் சாற்றிய மற்றும் அக்குற்றத்தைப் புலனாய்வு மூலம் உறுதிப்படுத்திய வர்களை மட்டும் விசாரணை செய்துவிட்டுக் குற்றம் சாற்றப்பட்டவரை விடுவித்து விடுவது.

இ) குற்றம் சாற்றியவர், அக்குற்றத்தைப் புலனாய்வு மூலம் உறுதிப்படுத்தியவர்களையும் விசாரணை செய்த பின், நீதிமன்றமே குற்றத்தைச் சுமத்திக் குற்றம் சாற்றப்பட்டவரை விசாரணை செய்த பின் தண்டிப்பது அல்லது விடுவிப்பது.

காவல்துறை தொடுக்கும் வழக்கில் காவல்துறை புலனாய்வு செய்து சமர்ப்பிக்கும் அறிக்கையின் அடிப்படையில் நீதிமன்றம் குற்றச்சாற்றினை வனைந்து (புனைந்து) அதை குற்றம் சாற்றப்பட்டவருக்குப் படித்துக் காண்பித்து, **"உங்கள் மீது சுமத்தப்பட்டுள்ள குற்றத்தை ஒப்புக் கொள்கிறீர்களா? அல்லது மறுக்கிறீர்களா?"** என நீதிபதியே வினவுவார்.

முதலில் இப்படிக் கேட்பதே தவறு. குற்றத்தை ஒப்புக் கொள்கிறீர்களா? அல்லது தற்காத்துக் கொள்ள விரும்புகிறீர்களா? அல்லது தற்காத்துக் கொள்ள விசாரணை வேண்டும் என்கிறீர்களா? என்றுதான் கேட்கணும்.

ஏனெனில், விதிவிலக்கான ஒரு சில சமயங்களைத் தவிர, பெரும்பாலான சமயங்களில் ஒரு குற்றம் நடக்கிறது என்றால் அதற்கு இரண்டு பக்கங்களிலும் தொடர்பு இருக்கத்தான் செய்யும். இதில் ஒரு தரப்புத்தான் புகார் கொடுக்கும். புகார் கொடுக்காத தரப்பு எதிரித் தரப்பாகக் கருதப்படும்.

. சில சமயங்களில், **“இரண்டு தரப்புப் புகார்களையும் பதிவு செய்து, அதனையே இரு தரப்புக்கும் மாற்றி மாற்றிக் காண்பித்து இரண்டு தரப்பிடமிருந்தும் பணத்தைக் கறப்பதில் காவல்துறைக்கு நிகர் காவல் துறைதான்”.**

காசு கறக்க வழியில்லாத போது இருதரப்புப் புகாரைக் கொண்டும் காவல் அறிக்கை தயார் செய்து நீதிமன்ற விசாரணைக்கு அனுப்பி விடுவர்.

## காவல்துறையின் கள்ளத்தனம்

ஆனால் காவல்துறை என்ன செய்ய வேண்டும்?

ஒரு தரப்பால் குற்றம் உருவாக்கப்படும் போது அதை எதிர்தரப்பு எதிர் கொள்வதென்பது தற்காப்பு உரிமையே.

ஆனால், “அந்தத் தற்காப்பு உரிமை சரியான முறையில் உபயோகப்படுத்தப்பட்டுள்ளதா? அல்லது கூடுதலாக உபயோகிக்கப்படுத்தப்பட்டுள்ளதா? என்பதைக் காவல்துறை புலனாய்வு செய்து இருதரப்பின் மீது வழக்கு பதிவுப் செய்திருந்தாலும் ஒரு தரப்பை நீக்கி விட்டு, ஒரு தரப்பு மீது மட்டுமே குற்ற அறிக்கை தாக்கல் செய்ய வேண்டும்”.

## அரசு வக்கீலின் அறிவில்லாத்தனம்

அரசு வக்கீலும் தனக்கு வர வேண்டிய பங்குத்தொகை கிடைக்காமல் போய் விட்டதே என்ற ஆத்திரத்தில் மிகக் கடுமையாக வாதாடி (போராடி) இருதரப்புக்கும் தண்டனை வாங்கித்தர மும்முரமான முயற்சியில் ஈடுபடுவார்.



அதாவது முதல் வழக்கில் இரண்டாவது வழக்கின் புகார்தாரர்தான் குற்றம் புரிந்தார் என வாதாடுவார். இரண்டாவது வழக்கில் முதல் வழக்கின் புகார்தாரர்தான் குற்றம் புரிந்தார் என வாதாடுவார்.

இப்படி வாதாடுவது முன்னுக்கு பின் முரணானது மற்றும் நீதிமன்ற சாசன கோட்பாடு 126-க்கு எதிரானது என்ற சிற்றறிவு கூட அரசு வக்கீல்களுக்குக் கிடையாது என்றால் அதை எதிர்த்து வாதாடும் வக்கீல்களுக்கும் கிடையாது என்பது ஒருபுறம்.

மற்றொரு புறமோ எவன் எக்கேடுகெட்டால் நமக்கென்ன? இது போன்ற அற்ப வழக்குகளுக்கெல்லாம் அரசு வக்கீல்களைப் பகைத்து கொள்ள கூடாது. அரசு வக்கீலின் தயவு இல்லாமல் நாம் எவ்விதத்திலும் தொழில் செய்ய முடியாமல் போய் விடும் என்று கண்டும் காணாமல் இருந்து விடுவார்கள்.

## நீதிபதிக்கு அரசு வக்கீல் சாக்கு

**‘வேலிக்கு ஓணான் சாக்கு’** என்பது பழமொழி. **“நீதிபதிக்கு அரசு வக்கீல் சாக்கு”** என்பது புதுமொழி.

ஆம்! நீதிபதிகளும் தனக்கு வர வேண்டிய பங்குத் தொகை வராமல் போய் விட்டதே என்ற கோபத்தில் அரசுத் தரப்பு வக்கீலின் வாதத்தைக் காரணம் காட்டி நீதிபதியும் இரு வழக்கிலும் எதிரிகளாக உள்ள நபர்களைக் குற்றவாளிகளாக அறிவிப்பார்.

ஆனாலும், சட்டத்துக்குப் புறம்பாக விசாரணை செய்து குற்றவாளியாக அறிவிக்கிறோம் என்பது

நன்றாகவே தெரியும் என்பதால் சிறைத் தண்டனையை மட்டும் வழங்கமாட்டார். வழங்கவும் முடியாது.

சிறைத் தண்டனைக்குப் பதிலாக நன்னடத்தையோடு இருப்பேன் (இதுபோன்ற செயல்களில் ஈடுபடாமல் அமைதி காப்பேன்) என்று ஓரிரண்டு ஆண்டுகளுக்குக் கடப்பாடு ஆவணத்தை எழுதி வாங்கிக் கொண்டு விடுவித்து விடுவார்.

### சட்டத்தைக் கையாள வக்கில்லாத வக்கீல்கள்

சட்டம் என்பது ஒருவருக்கு நன்மையைச் செய்யக் கூடியது என்ற உண்மையான நிலைப்பாடு போய், தீமை செய்வதற்கே சட்டம் என்ற எண்ணம் அனைத்துத் தரப்பிலும் ஆணித்தரமாகப் பரவியிருப்பதற்குக் காரணமே சட்டத்தைக் கையாள வக்கில்லாத வக்கீல்களின் கையாலாகாத்தனமும், முட்டாள்தனமும்தான்.

ஆம்! சட்டம் ஒழுங்கை நிலைநாட்டிக் குற்றம் நடைபெறாமல் காக்கும் **'கடமை'**யாளர்களை ஊக்குவிக்காமல் **'கடைமை'**யாளர்களை ஊக்குவிக்கும் நிலையே நிர்வாகம், செயல் மற்றும் நீதித்துறை உட்பட அனைத்து தரப்பு ம(ா)க்களிடமும் ஊடுருவி இருக்கிறது.

### கடமையும், கடைமையும்

**'கடமை'** என்றால் **"தனக்குள்ள பொறுப்பை மிகவும் நேர்த்தியாக செய்பவர்"** என்று பொருள். இது ஒருவரின் உயர்நிலைத் தன்மையைக் குறிக்கும்.

**'கடைமை'** என்றால் தனக்குள்ள பொறுப்பை உணராமல் **'ஏனோதானோ'** என்று செயல்படுபவர். இது ஒருவரின் கீழ்நிலைத் தன்மையைக் குறிக்கும்.



ஒருவர் தானாக முன்வந்து தனது கடமையைச் செய்யும் போது உண்மையில் அவரது அதிகாரம் **"வானமே எல்லை"** என்றுத்தாம் இருக்க வேண்டும். பொது மக்களாகிய நமக்கு இவ்வதிகாரம் இருக்கிறது. ஆனால் நாம் கடமையாற்ற முன்வருவதில்லை.

ஆனால், அதிகாரிகளுக்கு அப்படியில்லை. அவர்களுக்கென நிர்ணயிக்கப்பட்டுள்ள வரையறைக்கு உட்பட்டுதான் கடமையாற்ற முடியும்.

அதுவும் பலருக்கு கீழ்ப் படிந்தே கடமையைச் செய்ய வேண்டியுள்ளது.

இதிலும் குறிப்பாகக் **'கடமை'**யைச் செய்பவருக்கு அல்ல. **'கடைமை'**யைச் செய்பவருக்கே.

கடமையைச் செய்பவர்களை விட **'கடைமை'**யைச் செய்பவர்களுக்கே மதிப்பும், மரியாதையும் தரப்படுகிறது என்பதற்கு நல்லதொரு உண்மையைச் சொல்ல வேண்டும் என்றால், காவல்துறையைச் சொல்லலாம்.

காவல்துறையில் குற்றம் ஏதும் நடக்காமல் **'கடமை'**யாற்றுபவர்களை யாரும் கண்டு கொள்வதே கிடையாது என்பது மிகவும் வேதனைக்குறிய செய்தி.

ஆனால், **'கடைமை'**யாற்றியதன் விளைவாக குற்றம் நடந்து, அக்குற்றவாளியைப் பிடித்து விட்டால் அதைப் பெரிதாகப் பாராட்டிப் பணமுடிப்பும், பாராட்டும் தந்து பதவி உயர்வுக்கு நல்ல அடித்தளத்தை அமைத்துத் தருகிறார்கள். இப்படித்தான் ஒவ்வொரு துறையிலும் நடக்கிறது.

இப்படி ஊக்குவித்தால் எப்படித் தத்தம் **'கடமையைச் செய்வார்கள்?'** **'கடைமை'**யைத்தானே செய்வார்கள்?!

## குற்ற வழக்கில் ஒரு தரப்பு விசாரணை நியாயமல்ல

உரிமையியல் வழக்கில் எதிர்மனுதார் அழைப்பாணை பெற்றுக் கொண்டு வழக்கு விசாரணைக்கு வராமல் இருந்தால், 'ஒரு தரப்பாக மனுதாருக்குச் சாதகமாகத் தீர்ப்புரைப்பார்கள் என்பது குறித்துக் கடந்த அத்தியாயத்தில் பார்த்தோம்'.

இப்போது மீண்டும் குற்ற வழக்கின் குறைபாடுகளை விடுபட்ட இடத்திலிருந்து பார்ப்போம்.

பொதுவாக, **"ஒரு விசாரணை என்றாலே இரு தரப்பையும் விசாரணை செய்து முடிவை அறிவிப்பது என்பதுதான் விசாரணையின் அடிப்படை தத்துவம்".**

ஏற்கனவே, இரண்டு விதமாகத் தாக்கல் செய்யப்படும் இருவித விசாரணைகள் குறித்துப் பார்த்தோம் அல்லவா?

இதில் காவல்துறை தாக்கல் செய்த வழக்காக இருந்தாலும் அல்லது தனிநபர் தாக்கல் செய்த வழக்காக இருந்தாலும் சாட்சியமோ அல்லது குறுக்கு விசாரணையோ செய்யாமல் வழக்கின் முதல் நிலையான பரிசீலனையிலேயே குற்றம் சாற்றப்பட்டவரை விடுவிக்க கு.வி.மு.வி 227, 239 மற்றும் 245 இன் கீழ் அமர்வு மற்றும் குற்றவியல் நீதிமன்றங்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளன.

இதனை நீதிமன்றத்தின் ஒரு தரப்பான முடிவாகவே கருதவேண்டியுள்ளது.

பரிசீலனையில் குற்றம் புரிந்திருப்பதற்கான முகாந்திரம் இருப்பதாகக் கருதினால் நீதிபதியே குற்றச்சாற்றை வனைந்து (தொடுத்து), அதை எதிரிக்கு படித்துக்காட்டியதும், குற்றத்தை ஒப்புக்கொண்டால்



தண்டனையை வழங்கவும், மறுத்தால் விசாரணை செய்யவும், விசாரணைக்குப் பின் விடுதலை அல்லது தண்டனை வழங்கவும் அதிகாரம் வழங்கப்பட்டுள்ளன.

இதில் இரண்டு மூன்று சிக்கல்களும் ஐயப்பாடும் உள்ளன.

அ) விசாரணை இல்லாமலே குற்றத்தை ஒப்புக் கொண்டால் தண்டனை வழங்குவது என்பது உண்மையான குற்றவாளிகளிடம் பிச்சைப் பெற்றுக் கொண்டு நிரபராதிகள் குற்றத்தை ஒப்புக்கொண்டு தண்டனையை அனுபவிக்க நேரிடலாம்.

ஆ) குற்றச்சாற்றை வனைந்தவருக்கு அதை மெய்ப்பிக்க வேண்டிய கடமை இருக்கிறது என்ற நிலையில் நீதிபதியோ அல்லது நடுவரோ குற்றச்சாற்றை வனைந்தால் அது நிரூபிக்கப்பட்டு தண்டனை வழங்கப்பட வேண்டியதாகத்தான் இருக்க வேண்டுமே தவிர விடுதலை செய்யப்படக் கூடியதாக இருக்கக் கூடாது.

இ) காவல்துறை புலனாய்வு செய்து குற்றம் நடந்திருப்பதை உறுதி செய்து கு.வி.மு.வி 173(2)-இன் கீழ் தாக்கல் செய்யும் காவல் அறிக்கையின் அடிப்படையில் குற்றச்சாற்று நிரூபிக்கத் தவறினால் அது இ.த.ச பிரிவு 166 இன்படி கடமையில் தவறியது, 167 இன்படி, பொய்யாவணம் புனைந்தது, 211-இன்படி, பொய் வழக்கை புனைந்தது போன்ற குற்றங்களாகக் கருதப்படும்.

இதற்காக அக்காவலதிகாரி மீது குற்றவியல் நடவடிக்கையோ அல்லது நிவாரணமாக உரிமையியல் நடவடிக்கையோ மேற்கொண்டு நட்ட ஈட்டுத் தொகையைப் பெறலாம். இது போன்ற நடவடிக்கைகள் ஒவ்வொரு வழக்கிலும் எடுக்கப்படவில்லை என்றாலும் கூட பலமுறை எடுக்கப்பட்டுள்ளன.

ஆ) அதுபோல, நீதிபதி குற்றச்சாற்றை வனைந்த பின் அதை நிரூபிக்க முடியாமல் விடுதலை செய்யப்பட்டால், சுமத்திய குற்றச்சாற்றை நிரூபிக்க முடியாமல் போனதற்காக நீதிபதி மீதும் மேற்கண்டவாறே இ.த.ச பிரிவு 166, 167, 211 இன்படி, குற்ற சட்ட நடவடிக்கை எடுக்க வேண்டும் அல்லவா?

ஆனால், இதுவரை எந்த நீதிபதி மீதும் குற்ற நடவடிக்கை மேற்கொண்டு சிறையில் அடைத்ததாகச் சரித்திரம் இல்லை. காரணம், **"குற்றத்தை விசாரணை செய்து தண்டனை அளிக்க வேண்டியவர்களும் நீதிபதிகளாக இருப்பதும், இவர்களின் ஜாதிப்பற்றுமே".**

இப்பிரிவுகள் தவிர, சூழ்நிலையைப் பொறுத்து இந்திய தண்டனைச் சட்டத்தின் ஒன்பதாவது அத்தியாயத்தில் உள்ள பல்வேறு சட்டப்பிரிவுகளும் பொருந்தும்.

குற்றம் சாற்றப்பட்டவர் குற்றத்தை மறுத்து, விசாரணை நடத்தப்பட்டாலே இருதரப்பையும் விசாரித்துத்தான் தீர்வை அறிவிக்க வேண்டும் என கு.வி.மு.வி விதி 243 தெளிவாக அறிவுறுத்துகிறது.

ஆனால், **"பல்வேறு வழக்குகளில் குற்றத்தரப்பை மட்டுமே விசாரித்த பின் பெரும்பாலும் எதிரியை விடுவித்துத் தீர்ப்புரைக்கப்படுகிறது"** என்றால் என்ன அர்த்தம்? இதுபோன்ற வழக்கு நடவடிக்கைகளில் எதிரிகள் தரப்பிலிருந்து நீதிபதிகள் நிச்சயம் பிச்சை எடுத்திருப்பார்கள்.

**"ஆயிரம் குற்றவாளிகள் விடுவிக்கப்படலாம். ஆனால், ஒரு நிரபராதி தண்டிக்கப்படக் கூடாது"** என்பதைத் தாங்கள் பிச்சையெடுப்பதற்கு சாதகமாக்கிக் கொள்ளத்தான் சொன்னார்களோ, நீதிபதிகள்?!



## முரண்படுத்தத் தேவையான முக்கிய சங்கதிகள்

நமது பிரச்சினை எப்படி நம்மை விட வேறு யாருக்கும் நன்றாகத் தெரியாதோ, அது போலவே, நமக்குப் பிரச்சினை கொடுப்பவர்களைப் பற்றியும் அவர்களின் தரம், நிலை மற்றும் பலவகையான சங்கதிகள் பற்றியும் நமக்குதான் நன்றாக தெரியும்.

இதன் மூலம் ஆதாரச்சான்றுகள் ஏதும் இல்லாமலே கூட முரண்படுத்தவும், வழக்கை மெய்ப்பிக்கவும் அல்லது பொய்ப்பிக்கவும் முடியும். உண்மையாக, எப்படி முரண்படுத்தலாம் என்பது பற்றி எனது அனுபவம் உங்களுக்கு உதவியாகவும், வழிகாட்டுதலாகவும் இருக்கும்.

சென்னை இரண்டாவது கூடுதல் தொழிலாளர் நீதிமன்றத்தில் நடந்த கோரிக்கை விண்ணப்பம் 51/2000 இல் நிர்வாகத்தின் சார்பில் வழக்கைப் பற்றி ஒன்றுமே தெரியாத நிர்வாகப் பொறுப்பில் உள்ள ஒருவரைச் சாட்சியாக வைத்திருந்தனர்.

இவர் அதிகபட்சம் மூன்று கேள்விகளுக்கு மேல் தாக்குப் பிடிக்க மாட்டார் என்றாலும் எவ்வளவு கேள்விகளை அதிகபட்சம் கேட்க முடியுமோ அவ்வளவு கேள்விகளையும் குறிப்பு எடுத்துக் கொண்டேன்.

நீதிபதி குறிப்பிட்ட நேரத்துக்குச் சற்று முன்னதாக நீதிமன்றத்துக்குள் சென்றேன். என்னை பார்த்து விட்டால் போதும். நீதிபதி சுறுசுறுப்பாகி விடுவார்.

எல்லா வழக்கையும் அப்படியே நிறுத்தி விட்டு எனது வழக்கை விசாரணைக்கு எடுத்து விடுவார். அப்படியே அன்றும் எடுத்தும் விட்டார். குறுக்கு விசாரணைக்காகச் சாட்சிக் கூண்டில் ஏறினார். குறுக்கு விசாரணையை ஆரம்பித்தேன்.

தொழிலாளர் நீதிமன்றத்தில் ஒரு நிர்வாகத்தை எதிர்த்து ஒரு தொழிலாளி வழக்கை நடத்தினாலே பரபரப்பாக இருக்கும்.

ஆனால், "நானோ நீதிபதியை பல முறை நீதிமன்றத்திலேயே சட்டம் படிக்க வைத்து உத்தரவு பெற்றவன் ஆயிற்றே. அதனால் நீதிபதி உட்பட பலரிடமும் பரபரப்பு. கூடவே அதிக எதிர்பார்ப்பு வேறு".

எனக்கோ, **'அதுதான் முதல் குறுக்கு விசாரணை'.**

நீதிபதிக்கோ, இவன் இன்றைக்கு என்னவெல்லாம் கூத்தடிக்கப் போறானோ! எதையெல்லாம் படிக்க வைக்கப் போறானோ! என்ற யோசனையில் ஆழ்ந்து விட்டார். குறுக்கு விசாரணையில் **'விடை பொதி வினா'** கேட்க நீதிபதியின் அனுமதியைப் பெற வேண்டியதில்லை என்பது சரியாகப் புரியாமல், எதற்கும் இருக்கட்டுமே என்று நீதிபதியிடம் அனுமதி கேட்டேன்.

நீதிபதியோ, எதையாவது பண்ணிக்கோ என்று கூறும் விதத்தில் கையாலேயே சைகை அனுமதி கொடுத்தார்.

**முதல் கேள்வி:** இந்த வழக்குச் சம்பந்தமான சான்றாவணங்களை எல்லாம் படித்து விட்டீர்களா?

**சாட்சியின் பதில்:** படித்து விட்டேன். (தட்டச்சுச் செய்யப்படுகிறது)

(நீதிபதியோ, "நறுக்குன்னு நாலு கேள்வி கேட்பான்னு பார்த்தா, இப்படி மொக்க போடுறானே" என நினைக்க, "எனக்கெதுக்கு நாலு கேள்வி, மூன்று கேள்விலேயே தூக்குறேன் பாருங்க" என்று நினைத்துக் கொண்டே....)

**இரண்டாவது கேள்வி:** இந்த வழக்குத் தொடர்பான ஆவணங்கள் ஆங்கிலத்திலும், தமிழிலும் இருக்கின்றன என்று சொல்கிறேன். சரியா?



**சாட்சியின் பதில்:** படித்து விட்டேன். (தட்டச்சுச் செய்யப்படுகிறது)

(இவனுக்கு என்னாச்சு இன்னிக்கு இதெல்லாம் ஒரு கேள்வின்னு கேட்டு, இப்படி ஓவரா மொக்க போடுறானே என அலுப்பு வந்து நாற்காலியில் 'அசால்டாகச்' சாய்ந்து விட்டார்)

**மூன்றாவது கேள்வி:** உங்களுக்குத் தமிழ் பேசதான் தெரியுமே தவிர, **"படிக்கவோ, எழுதவோ தெரியாது"** என்று சொல்கிறேன். ஒத்துக்கொள்கிறீர்களா?

**சாட்சியின் பதில்:** ஆமாம். (தட்டச்சுச் செய்யப் படுகிறது)

நீதிபதிக்கு சாட்சியின் பதிலைக் கேட்டதும் **'தூக்கிவாரி'** போட்டு விட்டது. அதான பார்த்தேன். **'பாலாவா கொக்கா?'** என நினைத்துக் கொண்டே நன்றாக எழுந்து உட்காந்து விட்டார்.

உனக்குத் தமிழ் எழுத, படிக்க தெரியுமா? தெரியாதா? எனச் சாட்சியிடம் நீதிபதியே கேட்க, பொய் சாட்சியோ என்ன சொல்வதென்று தெரியாமல் பேந்தப் பேந்த விழிக்கிறாரேத் தவிர, பதில் சொல்ல யோசிக்கிறார்.

நீதிபதியோ, சாட்சி கேள்விக்கு பதில் சொல்ல நீண்ட நேரம் எடுத்துக் கொள்கிறார் என தட்டச்சு செய்யச் சொல்ல தட்டச்சுச் செய்யப்படுகிறது.

**"தெரியும்"** என்று சொன்னால் படித்து காட்டவோ அல்லது எழுதிக்காட்டவோ சொல்வார்கள் என்ன செய்வது என்று வேறு வழியில்லாமல் தெரியாது என்பதை ஒப்புக் கொள்ள கையெழுத்து வாங்கிக் கொண்டு நிர்வாகத்தரப்பு வக்கீலைக் காறித் துப்பாத குறைதான்.

**"சாட்சி சொல்ல வந்திருப்பது மட்டும் பொய்யல்ல, சாட்சியே பொய்"** என்பதை முன்றே கேள்வியில் முடித்தது நான் ஒருவனாகத்தான் இருக்கும்.

பொய் சாட்சிக்கு தனது தகுதி என்ன என்பது தெரியாமல் சாட்சி சொல்ல வந்ததன் விளைவு என்ன? என்பதை புரிந்து கொள்ள இதை விட உண்மையான சம்பவம் எதுவும் தேவையிருக்காது.

அதே சமயம், எதிர்தரப்பை பற்றி நன்றாகத் தெரிந்தது நாமே என்பதால் ஏற்பட்ட நன்மை என்ன? என்பதெல்லாம் நன்றாகவே விளங்கியிருக்கும். இவ்வளவுதான் குறுக்கு விசாரணை.

குறிப்பாக குறுக்கு விசாரணையில் சாட்சியின் வாய்மையைச் சோதிக்க, அவர் யார் என்பதைக் கண்டுக் பிடிக்க, வாழ்க்கையில் அவரது நிலை என்ன என்பதை கண்டு பிடிக்க, அவரின் குணங்கள் கேடானவை என்பன போன்றவைகளை நிருபிக்கத் தேவையான கேள்விகளைக் கேட்க உறுபு 146-இன் கீழ் உரிமையுண்டு.

குறுக்கு விசாரணையில் பதிவு செய்யப்பட்ட சாட்சியத்திலும் சாட்சி சொன்ன ஒருவரே கையொப்பமிடுவது மட்டுமே வழக்கமாக இருக்கிறது. இது நியாயமாகத் தெரியவில்லை.

ஏனெனில், குறுக்கு விசாரணை செய்தவர்தான் இக்கேள்விகளை கேட்டார் என்ற வகையில் அந்த ஆவணத்தில் தொடர்புடையவர் என்பதாலும் அவர் கையொப்பமிடுவதன் மூலம், அவருக்கு தெரியாமல் தில்லுமுல்லு செய்து சாட்சியத்தை மாற்றாமல் இருக்க சிறந்த வழி.

சாட்சி மட்டுமேதான் கையொப்பமிட வேண்டும் என்றோ அல்லது குறுக்கு விசாரணை செய்தவர் கையொப்பமிடக் கூடாது என்றோ சட்ட விதிகள் ஏதும் இருப்பதாக தெரியவில்லை என்பதால் அதை வலியுறுத்துவது உங்களின் விருப்பத்தைப் பொறுத்தது.



தில்லுமுல்லுகள் நடைபெறாமல் தடுக்க வேண்டும் என்றால் குறுக்கு விசாரணை முடிந்ததுமே அதன் சான்று நகல் பெற்றுக் கொள்ளுதல் மிக, மிக அவசியம்.

## மறு விசாரணையில் மறுப்பது எப்படி?

குறுக்கு விசாரணையில் குறிப்பாக **'விடை பொதி வினாவில்'** தான் உண்மையை கொண்டு வர முடியும் என்றாலும் கூட, சில சமயங்களில் தேவையில்லாமல் சிக்க வைக்கவும் முயற்சிக்கலாம்.

பகையாளி ஒருவரின் மீது உங்களுக்குக் கோபம். அவரைத் தீர்த்துக் கட்டி விட வேண்டும் என்ற கோபத்தில் கத்தியை எடுத்துக் கொண்டு செல்கிறீர்கள். பகையாளியைத் தேடிக் கண்டு பிடிப்பதற்குள் கோபம் தணிந்து விடுகிறது.

இவனைக் கொலை செய்திட்டா நாம என்ன சந்தோசமாக இருக்க முடியும்? சிறையில் அல்லவா துன்பப்பட வேண்டும் என்று நினைத்துக் கத்தியைப் போட்டு விட்டு வந்து விடுகிறீர்கள்.

சினிமாவில் வருவது போல அதே கத்தியை, தனது கைரேகை பதியாமலிருக்கத் துணியைப் போட்டு வேறு ஒருவர் எடுத்து, உங்களின் பகையாளியையோ அல்லது வேறு ஒருவரையோ தீர்த்துக் கட்டி விடுகிறார்.

காவல்துறை புலனாய்வில் உங்களின் கைரேகை படித்த கத்தி அகப்படவே உங்கள் மீது குற்றம் சாற்றப்பட்டு குறுக்கு விசாரணையில் **'விடை பொதி வினா'** கேட்கப்படுகிறது.

**கேள்வி:** இந்த கத்தி உங்களுடையது தானே?

**பதில்:** ஆமாம். (இல்லை என்று சொன்னால் தடய அறிவியலின் சோதனைப்படி கைரேகை உங்களுடையது என நிரூபிக்கப்படும்)

**கேள்வி:** பகையாளியைக் கொலை செய்ய இந்த கத்தியைத்தானே எடுத்து சென்றீர்கள்?

**பதில்:** ஆமாம்.

இத்தோடு எனது குறுக்கு விசாரணையை முடித்து கொள்கிறேன் என்று முடித்துக் கொள்வார்கள்.

ஆனால், நீங்களோ மறு விசாரணை வேண்டும் எனக் கோர வேண்டும். அதுவும் சாட்சியத்தின் கீழேயே தட்டச்சு செய்யப்பட்ட பிறகுதான் கையொப்பமிட வேண்டும். இல்லை என்றால் நீங்கள்தான் குற்றவாளி என முடிவு செய்யப்படுவீர்கள்.

நீதிமன்ற சாசன கோட்பாடு 138-இன்படியான மறு விசாரணையில் உங்களின் உண்மை நிலை என்ன என்பதை விரிவாக நீங்கள் தெரிவிக்க முடியும். தேவைப்பட்டால், அதன் மீது குறுக்கு விசாரணை செய்யவும் உரிமையுண்டு. இத்தோடு இருதரப்பு விசாரணையும் முடிவுக்கு வந்து விடும் என்பதால் மிகவும் கவனமாகச் செயல்பட வேண்டும்.

### நினைவைப் புதுப்பித்துக் கொள்ளல்

தனக்கு நடந்த ஒரு சம்பவத்தை யாரும் அவ்வளவு சீக்கிரம் மறந்து விட முடியாது. தூக்கத்தில் எழுப்பிக் கேட்டாலும் கூட டக்டக்கென பதில் சொல்லுவார்கள். இருந்தாலும் கூடக் காலம் கடந்த விசாரணை, வழக்கு அல்லது பாதிப்பு, நோய்வாய், வயோதிகம், மறதி



ஆகியவற்றின் காரணங்களால் நடந்த சம்பவங்கள் மறந்து போகலாம் அல்லது சரியான நிலை என்ன என்று தெரியாமல் இருக்கலாம்.

இது போன்ற சமயங்களில், சொல்ல வேண்டிய சாட்சியம் ஆவணத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளதாக இருக்கும் போது அதைப் பார்த்து நினைவைப் புதுப்பித்துக் கொள்ள நீதிமன்ற சாசன உறுபு 159-இன்படி உரிமை உள்ளது.

மேலும், நினைவில் இல்லாததைக் குறிப்பிட்டு அச்சான்றாவணத்தில் உள்ளவற்றைக் கருத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் கோரலாம்.

சான்றாவணம் என்றால் அதில் எத்தனையோ சங்கதிகள் இடம் பெற்றிருக்கும் என்பதால் அதில் முக்கியமாக எப்பகுதி குறித்து நாம் நிரூபிக்க வேண்டியுள்ளதோ அப்பகுதியை மட்டும் தனியாகத் தெரியும் வண்ணம் அடிக்கோடிட்டு அல்லது தனியாக பிரித்துக்காட்டும் வண்ணமிட்டு சிறப்பித்து காட்டுதல் சிறப்பானதாக இருக்கும். தேவையெனில் அது குறித்து அருகில் குறிப்பும் எழுதலாம்.

**எச்சரிக்கை:** உண்மை ஆவணத்தில் எவ்விதக் குறிப்பும் எழுதக்கூடாது. தேவையில்லாத போது வெளியில் எடுத்துச் செல்லக்கூடாது. எதிரிகள் திட்டமிட்டு அசல் ஆவணங்களை அபகரிக்க முயலலாம்.

உண்மை ஆவணங்கள் பறிபோய் விட்டால் ஒன்றும் செய்ய இயலாது. ஒருவேளை அப்படியேதும் நடந்தால் அது குறித்து உடனே தகுந்த முறையில் வழக்குப் பதிவு செய்து கொள்ள வேண்டும். அசலில் இருந்து ஒன்றுக்கு இரண்டு மூன்று நகல் எடுத்து வைத்துக் கொள்வது நல்லது.

## அத்தியாயம் - 12

## வாதுரை தொடர்பானவைகள்

இருதரப்பு சாட்சிகளின் சாட்சியங்கள் முடிந்த பிறகு வாதுரைக்கென நாள் குறிக்கப்பட்டு வழக்கு ஒத்தி வைக்கப்படும். அந்த நாளில் வழக்குரையைத் தாக்கல் செய்ய வேண்டும்.

பொதுவாக எவ்வகையான வழக்காக இருந்தாலும் வாதுரையை எழுத்து மூலமாகத் தாக்கல் செய்வதற்கு சட்ட விதிகள் உள்ளன. ஆனால், பெரும்பாலும் அவைகளைக் கடைப்பிடிக்காமல், தேவையில்லாமல் வக்கீல்கள் நேரடியாக நீதிபதியிடம் (வி)வாதம் செய்வதையே வாடிக்கையாக வைத்துள்ளார்கள்.

இப்பேச்சை வேடிக்கை பார்க்கும் நீதிபதிகள் ஏதோ கொஞ்ச நஞ்சம் குறிப்பெடுத்துக் கொள்ளுவார்கள். அவர் நினைத்தால் முக்கியமான சங்கதிகளை விட்டு விடவும் செய்யலாம் என்பதால் எப்போதும் வாதுரையை எழுத்து மூலம் தாக்கல் செய்வதே சிறந்தது.

அதன் முக்கிய கருத்துக்களைக் கருத்தில் எடுத்துக் கொள்ளாது போய் வழக்குத் தோற்றால், அவரிடமே கண்டு கொள்ளாத தவறைக் குறிப்பிட்டுச் சீராய்வு மனுத்தாக்கல் செய்யவோ அல்லது மேல் முறையீட்டுக்கு அடிப்படையான சங்கதியாகவோ தெரிவிக்க முடியும். மொத்தத்தில், **"நீதிபதிகள் நம்மை ஏமாற்றாமல் தடுக்க எழுத்து மூலமான வாதுரை மிகவும் கைகொடுக்கும்".**

ஆனால், இது உரிமையியல் தொடர்பான சட்ட விதிகளுக்கு அடித்தளமான உ.வி.மு.வி இல் 2002 ஆண்டு கொண்டு வரப்பட்ட திருத்தத்தின் மூலமே சேர்க்கப்பட்டது.



அதே சமயம், எழுத்து மூலமாக வாதுரை செய்யக் கூடாது என்ற தடையும் இல்லாததால் நீதிமன்றத்தின் இயல்பான அதிகார விதி 151-இன் கீழ் எழுத்து மூலம் தாக்கல் செய்தால் அதனை நீதிமன்றம் மறுக்க இயலாது. அப்படி மறுத்தால் வழக்கில் உள்நோக்கத்துடன் செயல்பட உள்ளார்கள் என்பதாக கருத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

முதல் நூலான **'குற்ற விசாரணைகள்'** நூலில் நாமே வாதாடுவதற்கும், வக்கீல்கள் வாதாடுவதற்கும் உள்ள வித்தியாசங்களை முரண்பாடுகளை பட்டியலிட்டு காட்டியது போன்றே வாதுரை தயார் செய்யும் போது எதிர்தரப்பு பக்கமுள்ள முரண்பாடுகளை வேறுபடுத்தி பட்டியலிட்டுக் காட்டலாம்.

மனுதாரரைப் பொறுத்தவரை எதிர்மனுதாரரின் பதிலுரை-முதல் சாட்சியம், முதல் சாட்சியம்-குறுக்கு விசாரணை, குறுக்கு விசாரணை-மறு விசாரணை மற்றும் மறு விசாரணை-குறுக்கு விசாரணை ஆகியவற்றில் உள்ள முரண்பாடுகளை தனித்தனியாக பட்டியலிடலாம்.

எதிர்மனுதாரரைப் பொருத்தவரை மனு-எதிருரை, எதிருரை-முதல் சாட்சியம், முதல் சாட்சியம்-குறுக்கு விசாரணை, குறுக்கு விசாரணை-மறு விசாரணை மற்றும் மறு விசாரணை-குறுக்கு விசாரணை ஆகியவற்றில் உள்ள முரண்பாடுகளை தனித்தனியாக பட்டியலிடலாம்.

மேலும், தான் சொன்ன சங்கதிகள் எந்தச் சட்ட விதிப்படி சரியென்றும், எதிர்தரப்பு சொன்ன சங்கதிகள் எந்தெந்தச் சட்ட விதிப்படி தவறு என்றும் குறிப்பிட்டுக் காட்டினால் அதை விடச் சிறப்பு ஏதும் கிடையாது.

இவைகள் சட்டத்தில் உங்களின் தெளிவைப் புலப்படுத்தும். தவறு செய்ய நினைக்கும் நீதிபதிகளை

நிச்சயம் யோசிக்க வைக்கும். இதே போலச் சாட்சிகளும் கூட, தாங்கள் சம்பந்தப்பட்ட சங்கதிகள் வரை தங்களின் வாதுரையைச் சமர்ப்பிக்கலாம்.

இவைகள் அனைத்தின் மூலமும் உங்களது தரப்பில் இறுதியாகச் சொல்ல வருவது என்ன என்பதை வலியுறுத்தி நீதி நல்குமாறு இறுதியாக கோரிக்கை வைத்து வாதுரையை முடிக்க வேண்டும்.

## அத்தியாயம் - 13

## தீர்ப்புரை தொடர்பானவை

இருதரப்பு வாதுரைக்குப் பிறகு தீர்ப்புரைப்பதற்காக குறிப்பிட்ட கால இடைவெளியில் தேதி குறிப்பிட்டு வழக்கு ஒத்தி வைக்கப்படும். அந்த நாளில் தீர்ப்பானது திறந்த நீதிமன்றத்தில் முழுவதுமாக படிக்கப்பட்டு உரைக்கப்பட வேண்டும்.

விதிவிலக்காக, பாலியல் தொடர்பான வழக்குகள் மற்றும் குடும்ப விவகாரம் தொடர்பான வழக்குகளில் திறந்த நீதிமன்றத்தில் தீர்ப்புரைக்க வேண்டியதில்லை.

ஆனால், நீதிபதிகளைப் பொறுத்தவரை, ஒரு சில முக்கிய வழக்குகளைத் தவிர (பிரபலங்களின் வழக்கு என்றால் ஊடகங்களில் செய்தி வரும். அப்போது தீர்ப்புரைத்த நம் பெயரும் வரும் என்பதால்) மற்ற வழக்குகளில் திறந்த நீதிமன்றத்தில் முழுத்தீர்ப்பையும் படிப்பதில்லை.

பல நீதிபதிகள் தீர்ப்பு சொல்வதை தங்கள் விருப்பப்படி நிறுத்தி வைப்பார்கள். இது சட்ட விதிகளின்படி சரியல்ல.

**உ.வி.மு.வி கட்டளை 20 விதி 1-இன்படி, உரிமையியல் வழக்குகளில் விசாரணை (வாதுரை)**



**முடிந்த அன்று முதல் குறைந்தபட்சமாக பதினைந்து நாட்களுக்குள்ளும் அதிபட்சமாக முப்பது நாட்களுக்கு உள்ளும் தீர்ப்புரை வழங்கப்பட வேண்டும்.**

ஆனால், கு.வி.மு.வி விதி 353-இல் **"உடனே அல்லது அதற்குப் பின்னர் என்று தீர்ப்புரைக்க வேண்டும்"** என அறிவுருத்தப்பட்டுள்ளது என்றாலும் கூட அதிகபட்சம் முப்பது நாட்கள் எனக் கணக்கில் எடுத்துக் கொள்ளலாம்.

குற்றவியல் சார்ந்த வழக்குகளில் தண்டனை என்றால் மட்டும் அதற்கான காரணத்தை மட்டும் ரத்தினச் சுருக்கமாக வாசிக்கும் பழக்கம் உள்ளது.

மற்றபடி எவ்வகையான வழக்காக இருந்தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டால் அனுமதிக்கப்பட்டது என்றும், தள்ளுபடி செய்யப்பட்டது என்றால் தள்ளுபடி என்ற ஒரு வார்த்தை மட்டும்தான் வரும்.

பல நீதிபதிகள் தாம் பணியாற்றும் நீதிமன்றத்தின் தாய்மொழி என்ன என்பது தெரிந்திருந்தாலும் கூடத் தாங்கள் மெத்தப்படித்த மேதாவிகள் என்பதை பறைசாற்ற ஆங்கிலத்தில் தீர்ப்பெழுதுவார்கள்.

இது சட்டப்படிச் செல்லத்தக்கதல்ல.

**"நீதிமன்றத்தின் தாய்மொழி என்னவோ அம்மொழியிலேயே தீர்ப்புரையை மாற்றி உரைக்க வேண்டும், தீர்ப்புரையின் சான்று நகலைத்தர வேண்டும்"** எனக் கோரிப் பெறலாம்.

பாலியல் தொடர்பான மற்றும் குடும்பம் தொடர்பான வழக்கு விசாரணைகள் மட்டும் மற்றவர்களுக்கு தெரியாத வகையில் ரகசியமாக நடத்தப்பட வேண்டும். இதற்கு **"அந்தரங்க விசாரணை"** என்று பெயர். மற்ற வழக்குகள்

எல்லாம் எல்லோர் முன்னிலையிலும் நடத்தப்பட வேண்டும். இதற்கு **"திறந்த நீதிமன்ற விசாரணை"** என்று பெயர்.

**முக்கிய குறிப்பு:** திறந்த நீதிமன்றத்தில் எல்லோர் முன்னிலையிலும் வழக்கு விசாரணை நடைபெற்றால், நமது வழக்கு தொடர்பான சாட்சிகள் என்ன சாட்சியம் அளிக்கிறார்கள் என்று எதிர் தரப்பு கவனித்து அதற்கு தக்கவாறு செயல்பட முடியுமே என்ற எண்ணினால் அதுவும் சரிதான்.

அப்படிப்பட்ட நபர்களை மட்டும் நீதிமன்றத்துக்குள் அனுமதிக்க கூடாது என கோரிக்கை வைக்க அச்சட்ட விதிகளிலேயே விதிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கும். அதன்படி மனு கொடுத்து வெளியே அனுப்பி விடலாம்.

## அத்தியாயம் - 14

## வழக்கின் சான்று நகலைப் பெறுதல்

தீர்ப்புரைக்கப்பட்ட பின்னர் தீர்ப்பின் நகலை வழக்குத் தரப்பினர்களுக்குத் தரப்பட வேண்டும் என கு.வி.மு.வி விதி 353(4) மற்றும் உ.வி.மு.வி கட்டளை 20 விதி 1(2)-இல் அறிவுறுத்தப்பட்டுள்ளது.

ஒரு வழக்கில் தீர்ப்பு உரைப்பதற்கு முன்போ அல்லது பின்போ எப்போது வேண்டுமானாலும் அவ்வழக்குத் தொடர்பான ஆவணங்களைச் சான்று நகல்களாக அவ்வழக்குத் தரப்பினர்கள் மட்டுமல்லாது யார் வேண்டுமானாலும் பெறலாம்.

இடைமனுக்கள் மீதான உத்தரவுகள், சாட்சியங்கள் ஆகியவற்றை அவ்வப்போது சான்று நகல்களாகப் பெற்றுக்கொள்ள வேண்டும்.



வழக்கு ஆரம்ப தினத்திலிருந்து தீர்ப்புரைக்கப் பட்ட நாள் வரை, ஒவ்வொரு வழக்கு விசாரணை நாளன்றும் அவ்வழக்கின் மீது நடத்தப்பட்ட விசாரணைகளின் குறிப்பை நீதிமன்ற வழக்கு கோப்பில் எழுதுவார்கள். அக்குறிப்புகளின் சான்று நகலையும் பெற்றுக் கொள்ள வேண்டும்.

இதனைப் பெற விண்ணப்பிக்கும் போது சிலர் பி எக்ஸ்டாக்ட் டைரி வேண்டும் என்று கேட்க நீதிபதிகள் என்னவென்று புரியாமல் குழம்பி விடுவார்கள்.

அதாவது நீதிமன்ற வழக்கு கோப்பில் எழுதும் சங்கதிகளை பின், நீதிமன்ற டைரி என்று சொல்லப்படும் பொது நாட்குறிப்பேட்டில் எழுதுவார்கள். இதன் நகலை கோருபவர்கள் டைரியை கொடுங்கள் என்று கோருவதால், நீதிமன்றத்துக்கான பொது டைரியை எப்படி தனிப்பட்டவருக்கு கொடுக்க முடியும் எனக் குழம்பி போய் டைரியைக் கொடுக்க இயலாது என்பார்கள்.

எனவே, எவ்வித குழப்பத்திற்கும் இடம் தராமல் **"மனுவும் மனுவின் மீது விசாரணை நாட்களன்று பிறப்பிக்கப்பட்ட உத்தரவுகளின் நகலையும்"** சான்று நகலாக தரக் கோருகிறேன் எனக் குறிப்பிட்டால் போதும்.

தேவைப்பட்டால் எதிர்மனுதாரர் சமர்பிப்பித்த அனைத்து ஆவணங்களையும் கூடச் சான்று நகல்களாக முறைப்படி விண்ணப்பம் கொடுத்துப் பெற்றுக் கொள்ள வேண்டும்.

ஒரு சிலர் முறையாக விண்ணப்பம் கொடுத்துச் சான்று நகலைப் பெறாமல் குறுக்கு வழியில் திருட்டுத்தனமாக ஊழியர்களுக்குப் பிச்சை போட்டு எடுக்கும் பழக்கமும் இருக்கிறது. இது சில சமயங்களில்

நன்மையாகவும், பல்வேறு சமயங்களில் சிக்கல்களுக்கும் வழி வகுத்து விடும். எச்சரிக்கை!

## அத்தியாயம் - 15

## தீர்ப்புரையை நிறைவேற்றக் கோருதல்

சிறைத் தண்டனை வழங்கத்தக்க குற்றம் சாற்றப்பட்ட குற்றவியல் வழக்கில், தண்டனை வழங்கப்பட்டால் தண்டனைக்கு உள்ளான நபர் நீதிமன்றத்துக்கு வருகை தந்திருந்தால் தண்டனை காலத்தைப் பொருத்து மேல்முறையீடு செய்து கொள்ள வசதியாக குறிப்பிட்ட கால அளவிற்குப் பிணையில் விடுவிப்பார்கள் அல்லது உடனே கைது செய்து சிறையில் அடைப்பார்கள்.

நீதிமன்றத்துக்கு வருகை தராமல் தண்டனை வழங்கப்பட்டால் கைது செய்து சிறையில் அடைக்க முயற்சிப்பார்கள்.

அபராதம் மட்டுமே விதிக்கத்தக்க தண்டனையாக இருந்தால், உடனே அபராதம் செலுத்த வேண்டியவரைப் பிணையில் விடுவிக்க வேண்டும். அந்த அபராதத்தை அதிகபட்சமாக மூன்று தவணைகளிலும், இரண்டு மாதத்திற்குள்ளும் செலுத்த கு.வி.மு.வி 424-இன் கீழ் உரிமையுண்டு.

அதற்குள் செலுத்தவில்லை என்றால் மட்டுமே அபராதத்துக்குத் தக்கவாறு சிறை தண்டனை விதித்துக் கைது செய்து சிறையில் அடைக்க முடியும். அப்படிச் சிறையில் அடைக்கப்பட்டாலும் கூடச் சிறையில் இருந்த நாட்களுக்கு தக்கவாறு அபராதத்தைக் குறைத்துக் கட்டி விட்டுச் சிறைத் தண்டனையிலிருந்து விடுபட முடியும்.

இதுபற்றி மேலும் விரிவாக பிணை எடுப்பது எப்படி?



என்ற இரண்டாவது நூலில் தெரிந்து கொள்ளுங்கள்.

பிழைப்பூதியம் என்ற வகை வழக்குகள் சூழ்நிலைக்கு ஏற்ப குடும்பநல நீதிமன்றத்தில் அல்லது குற்றவியல் நீதிமன்றங்களில் தாக்கல் செய்யப்படுகின்றன. இவ்விரண்டு நீதிமன்றங்களின் அதிகாரங்கள் ஒன்றுதான் என்றாலுங்கூட, குடும்பநல நீதிமன்றத்தால் பிறப்பிக்கப் படும் உத்தரவு வருடக்கணக்கில் கூட செயல்படுத்தப் படுவதில்லை.

குடும்ப நல நீதிமன்ற உத்தரவைச் செயல்படுத்தக் கோரி மனுத்தாக்கல் செய்வதற்கு கால நிர்ணயம் ஏதும் கிடையாது. ஆனால், குற்றவியல் நீதிமன்றங்களில் உத்தரவு பிறப்பிக்கப்பட்ட ஒரு வருடத்திற்குள் தாக்கல் செய்ய வேண்டும்.

குடும்ப நல நீதிமன்றத்தில் தாக்கல் செய்யப்படும் நிறைவேற்றுகை மனுக்கள் மீது நீதிமன்றம் பிடியாணை பிறப்பித்தாலும் கூட அவைகளைக் காவல்துறையினர் அவ்வளவாகக் கவனத்தில் எடுத்துக் கொள்வதில்லை.

குடும்ப நல நீதிமன்ற நீதிபதிகளுக்குத் தாங்கள் குற்றவியல் நீதிமன்றத்தின் அதிகாரங்களைப் பெற்றிருக்கிறோம் என்பது தெரியாததால் கைது செய்வதில் கடமை தவறும் காவல் துறையைக் கண்டு கொள்வதில்லை. பாதிக்கப்பட்ட பெண்கள் புலம்பியே சாவார்கள்.

**இப்படிப் பாதிக்கப்பட்டவர்கள் காவல்துறை கைது செய்வார்கள் என்று நம்பிக் காலத்தை கடத்தாமல் தாங்களே கு.வி.மு.வி விதி 73-இன் கீழ் சம்பந்தப்பட்ட அந்த நீதிமன்றத்திலேயே மனுச் செய்து தமது பெயருக்குப் பிடியாணை உத்தரவைக் கோரி கைது செய்ய முன்வர வேண்டும்.**

இப்படியொரு மனுவைத் தனி நபர் ஒருவர் தாக்கல் செய்தால், பின் காவல்துறை எதற்கு இருக்கிறது? என்ற கேள்வி எழும். காவல்துறை தனது கடமையைச் செய்ய ஆரம்பித்து விடும் என்பதும் எனது அனுபவம்.

இப்படியொரு மனுவைத் தாக்கல் செய்தால் நீதிபதிகளால் ஜீரணிக்க முடிவதில்லை. "அப்படியே உத்தரவு பிறப்பித்தாலும் கூட, காவல்துறையைத் தவிர மற்றவர்கள் யாரும் கைது செய்ய முடியாது என்ற மடத்தனமான எண்ணத்தில் நீதிமன்ற அலுவலர்கள் காவல்துறையின் பெயருக்கே பிடியாணையை வழங்குவார்கள்".

இதையெல்லாம் சமாளிக்க வேண்டிய கடமை உங்களுடையதே. எப்படிச் சமாளிப்பது?

பிடியாணை கோரி மனுச் செய்யும் போதே காவல்துறையில் கைது மெத்தனப் போக்கை சுட்டிக் காட்டியும், காவல்துறையினருக்கே பிடியாணை வழங்கியே பழக்கப்பட்டு போன நீதிமன்ற ஊழியர்கள் புரிந்து கொள்ளும் விதமாகவும் தனது பெயருக்குப் பிடியாணை வழங்க உத்தரவிட வேண்டும் எனத் தெளிவாக கோடிட்டு காட்டி கோர வேண்டும்.

ஒருவேளை அப்படி உத்தரவிடவில்லை என்றால், கு.வி.மு.வி விதி 43(1)-இன்படி, பிடியாணைக்கு உள்ளான ஒருவரை எவர் ஒருவரும் கைது செய்யும் அதிகாரத்தை பயன்படுத்தி நீதிமன்றத்தின் பிடியாணை உத்தரவு இல்லாமலேயே நான் கைது செய்து இங்கு கொண்டு வர நேரிடும் எனவும் தெரிவிக்கலாம்.

கு.வி.மு.வி விதி 43(1)-இன்படி., காவலரிடம்தானே ஒப்படைக்க வேண்டும். எப்படி நீதிமன்றத்தில் ஒப்படைக்க இயலும் என்ற சந்தேகம் வரலாம். காவல்துறை



கடமையைச் செய்யாததால்தானே நாம் செய்கிறோம்.

பின் எப்படி காவல் நிலையத்திற்கு கொண்டு செல்ல முடியும்? அதோடு நீதிமன்றத்துக்குக் கொண்டு செல்லக் கூடாது எனக் குறிப்பாகத் தடையேதும் இல்லையே! மேலும், பிடியாணைக்கு உட்பட்ட நபரை கைது செய்ய வேண்டிய கடமை கு.வி.மு.வி விதி 44(2)-இன்படி, நீதிபதிகளுக்கு இருக்கிறதே!

பிடியாணை உத்தரவு கண்டிப்பாக தேவைப்படுகிறது என்ற நிலையிலும், நேரடியாக பிடியாணையை வழங்காத பட்சத்திலும் விசாரணை நாட்களின் விசாரணை குறிப்பைச் சான்று நகல் கோரிப் பெற்றால் அதில் இறுதியாக பிடியாணை பிறப்பித்த உத்தரவு இடம் பெற்றிருக்கும் அல்லவா? அதுவே தகுந்த ஆதாரம்தான்.

இப்படிச் சான்று நகல் கோரி மனுச் செய்யும் போது, பிடியாணை நிலுவையில் இருப்பதால் சான்று நகலை வழங்க இயலாது என்று கூறி முட்டாள்தனமாக மனுவைத் திருப்புவார்கள்.

**அப்படி திருப்பும் குறிப்பும் ஓர் உத்தரவே என்பதால், அதையே நாம் புத்திசாலித்தனமாக பிடியாணையாக பயன்படுத்தலாம்.**

**"இதெல்லாம் சரிதான். எப்படியோ போராடிப் பிடியாணையை வாங்கி விட்டேன். நான் ஓர் ஆள் மட்டும் சென்று கைது செய்ய முடியுமா? இரண்டு மூன்று நபர்கள் இருந்தால்தானே கைது காரியத்தை கனக் கச்சிதமாக முடித்து சாதிக்கலாம்"** என்ற கேள்வி எழுந்தால் கு.வி.மு.வி விதி 38-இன்படி, **"ஒருவரை கைது செய்வதற்கு தேவைப்படும் நபர்களை உதவிக்கு வைத்துக்கொள்ள அனுமதியுண்டே! பின்ன என்ன?"**

உரிமையியல் தொடர்பான வழக்குகளில் தீர்ப்புரைக் கப்பட்டால் அத்தீர்ப்பினைச் செயல்படுத்த அதிகபட்சமாக 90 நாட்கள் முதல் குறைந்த பட்சம் 30 நாட்கள் வரை நீதிமன்றத்தின் அதிகாரத்தைப் பொறுத்து கால அவகாசம் இருக்கிறது என்பதால் நீதிமன்ற உத்தரவை நிறைவேற்றக் கோரி எதிர்மனுதாருக்கு அறிவிப்பு அனுப்புவது மனுதாரரின் கடமையாகும்.

அதன் நகலை வழக்கம் போல் சம்பந்தப்பட்ட அந்த நீதிமன்றத்துக்கே சமர்ப்பிக்க வேண்டும். அவ்வறிவிப்பின் மீது முன்னர் சொன்னது போன்றே சட்டப்படியான நடவடிக்கைகளை மேற்கொண்டு உரிமையைப் பெற்றுத் தருவது நீதிபதிகளின் கடமையாகும்.

இக்குறிப்பிட்ட கால அளவிற்குள் எதிர்மனுதார் தக்கதென கருதும் விதத்தில் தீர்ப்பினை நிறைவேற்ற அல்லது மேலாய்வு அல்லது மேல்முறையீடு செய்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாத போது தீர்ப்பை நிறைவேற்றக் கோரி மனுதார் மனுத்தாக்கல் செய்யலாம். இம்மனு **"நிறைவேற்றுகை மனு"** என்று சொல்லப்படும்.

இம்மனுவும் அசல் மனுவைப் போலவே எண்ணிடப்பட்டு விசாரணைக்கு ஏற்றுக் கொள்ளப்படும். விசாரணையில் தீர்ப்புக்கு உள்ளானவர் எவ்வளவுதான் வசதியானவராக இருந்தாலும், அதை மறைத்துத் தான் செலுத்த வேண்டிய தீர்ப்புத் தொகையைக் கொஞ்சம் கொஞ்சமாக செலுத்துவதாக கூறுவார். நீதிபதியும் அதற்கு சம்மதித்து விடுவார்.

இதன் காரணத்தால் ஒரே நேரத்தில் ஒட்டு மொத்தமாக கொடுத்த தொகையைப் பல வருடங்கள் அலைந்து திரிந்து வாங்க வேண்டிய நிலை ஏற்படும்.



இந்த நிலையைத் தவிர்க்க, தீர்ப்புக்கு உள்ளானவருக்கு எவ்வளவு அசையும், அசையாச் சொத்துக்கள் இருக்கின்றன என்ற விபரங்களை அவர் வசிக்கும் ஊரின் கிராம நிர்வாக அலுவலரிடம் சான்று நகலாக கோரிப் பெற வேண்டும்.

இப்படிக் கோரினாலே சம்பந்தப்பட்டவருக்கு தகவல் போய் நமது வழிக்கு வந்து விடுவார்கள் அல்லது கோரிப் பெற்ற சான்று நகலை நீதிமன்ற சாசன உறுபு 77-இன் கீழ் நீதிமன்றத்தில் தாக்கல் செய்து அவ்வசையும், அசையாச் சொத்துக்களைச் சந்தை மதிப்பின்படி நமது பெயருக்கு மாற்றி எழுதச் சம்பந்தப்பட்ட வட்டாட்சியர் அல்லது கோட்டாட்சியருக்கு உத்தரவு பிறப்பிக்க கோர வேண்டும்.

**இந்த வகையில் பதினாறு வருடங்கள் அலைந்து திரிந்து வாங்க வேண்டிய பணத்தை "ஆறே மாதங்களில்" பெற வழிகாட்டிய அனுபவம் எனக்குண்டு.**

பிடியாணை பிறப்பிக்கக் கோருவது, சொத்தைப் பற்றுகை செய்து ஏலம் விடக் கோருவது, தடையாணை பிறப்பிக்கக் கோருவது, உறுத்துக்கட்டளை பிறப்பிக்கக் கோருவது, முன்னெச்சரிக்கை மனுத்தாக்கல் செய்வது போன்றவைகள் எல்லாம் சிறப்பான வழிகள் அல்ல என்றே கருதுகிறேன்.

சிறப்பான வழிகளையும் கூட சிக்கலாக்குவதே சட்டத்தை கடைப்பிடிப்பவர்களின் கடைமையாக இருக்கிறது என்பதால் வழக்கு முடிவுக்கு வரும் வரை உ.வி.மு.வி கட்டளை 40-இன்படி, **"வழக்குச் சொத்தை விற்காமல் தடுக்க, பாதுகாக்க ஏற்புநரை நியமிக்க கோருவது"** மிகச்சிறந்த வழியாக இருக்கும்.

சட்டப்படி தனக்கு எவ்வித உரிமையும் இல்லை எனத் தெரிந்தும் (அறிவிப்பில் அல்லது பதிலில் அறிவுறுத்திய பின்னும்) வழக்குத் தொடுத்துத் தோற்றால்

அவர் மீது இ.த.ச பிரிவுகள் 207 முதல் 210 வரை தண்டனை விதிக்கத்தக்க் குற்றம் என்பதால் கட்டாயம் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இப்பிரிவுகளின்படி, வக்கீல்களால் இதுவரை எந்த ஒரு நடவடிக்கையும் எடுக்கப்பட்டது இல்லை. ஏன் தெரியுமா? இது போன்ற நடவடிக்கைகளை மேற்கொண்டால் பொய் வழக்குகள் வராமல் போய் விடும். பிறகு வாழ்வதற்கு வக்கீல்கள் பிச்சைதான் எடுக்கனும்.

## அத்தியாயம் - 16

## மேல் நடவடிக்கை தொடர்பானவை

தனக்கு எதிராக வழங்கப்பட்ட தீர்ப்பாணையை அல்லது நிராகரிப்பைத் தேவைப்பட்டால் மட்டுமே "குறிப்பிட்ட கால வரையையறைக்குள் தக்க நீதிமன்றத்துக்கு மேல் நடவடிக்கைகளுக்காகக் கொண்டு செல்ல வேண்டும்".

இப்படி மேல் நடவடிக்கைக்கு எங்கு செல்ல வேண்டும் என்பதற்கு தேவையான வழிகாட்டுதலைத் தீர்ப்புரையிலேயே வழங்க வேண்டியது தீர்ப்புரைக்கும் நீதிமன்றத்தின் கடமையே என்கிறது உ.வி.மு.வி கட்டளை 20 விதி 5-இன் கூடுதல் உட்சேர்க்கை 1.

மேல்நடவடிக்கை என்றால் மேல் முறையீடுதான் செய்ய வேண்டும் என்று அர்த்தமல்ல.

### தப்புச் செய்தவர்களைத் திருத்தவதே திறமை

**"தவறு என்பது தவறிச் செய்வது. தப்பு என்பது தெரிந்து செய்வது. தவறு செய்தவன் திருந்தியாகனும். தப்புச் செய்தவன் வருந்தியாகனும்"** என்கிறது தமிழ்த் தத்துவப்பாடல்.



இதன் அடிப்படையில் மேல்நடவடிக்கை எடுக்க எந்த நீதிபதி காரணமாக இருக்கிறாரோ, அவரிடமே மேலாய்வு அல்லது சீராய்வு என்று சொல்லப்படும் மனுவை உ.வி.மு.வி விதி 114-இன்படி தாக்கல் செய்யலாம்.

இப்படி அதே நீதிபதியிடம் தாக்கல் செய்ய முடியுமா? இதன் இப்படி தாக்கல் செய்ய வேண்டியதன் அடிப்படை நோக்கம்தான் என்ன? என்ற கேள்வி எழலாம்.

**"ஒரு நீதிபதி தவறான தீர்ப்புரைக்கிறார் என்றால் அத்தவறைத் திருத்துவதற்கு உள்ள ஒரே வழி அவரைத் திருத்துவதுதானே"** தவிர, அவரைப்பற்றி அடுத்தவரிடம் குறை கூறுவதல்ல. குறை கூறுவதால் உங்களுக்கு வேண்டுமானால் சாதகமான தீர்ப்புக் கிடைக்கலாம். ஆனால், தவறான தீர்ப்புரைக்கும் நீதிபதியைத் திருத்த வழியில்லாமல் போய் விடுகிறது.

இப்படியொரு மனுவைத் தாக்கல் செய்ய முடியாது என்ற கருத்து நீதிபதிகளிடமும் கூட இருக்கத்தான் செய்கிறது. அதாவது, **"நீங்கள் செய்த தவறை, நீங்கள் திருத்திக் கொள்ள வேண்டும் என்றுதான் அறிவுரை சொல்வார்களே தவிர, திருத்திக் கொள்ளக் கூடாது என்று யாராவது சொல்வார்களா? அல்லது சொல்லத் தான் முடியுமா?"**

ஆனால், **'தான் செய்த தவற்றைத் தானே திருத்திக் கொள்ள சட்டப்படி அனுமதியில்லை என்று சட்டத்தின் அடிப்படையே தெரியாமல் சொல்கிறார்கள்'** என்றால் நீதிபதிகள் எவ்வளவு தூரம் அறிவிலிகளாக இருக்கிறார்கள் எனப் பார்த்துக் கொள்ளுங்கள்.

இப்படியொரு வழிகாட்டும் மனுவைத் தவறு செய்த நீதிபதியிடமே தாக்கல் செய்து ஏற்றுக் கொள்ள வைத்த அனுபவமும் உண்டு. ஆனால், **'மனுவை ஏற்றுக்**

கொள்ள தனக்குச் சட்டத் தகுதியுண்டு என ஒப்புக்கொண்ட நீதிபதி தீர்ப்பை மட்டும் திருத்திக் கொள்ளாமல் முன்னதாக உரைத்த தீர்ப்பையே உறுதி செய்தார்''.

இப்படிச் செய்ய வேண்டியதன் நிர்பந்தம்தான் என்ன? ''தான் எழுதிய தீர்ப்பைத் தானே மாற்றி எழுதினால், தன்னைப் பைத்தியம் என்று அல்லது தகுதியில்லாதவர்கள் என்று கருதி தகுதி (பதவி) நீக்கம் செய்து விடுவார்கள்'' என்ற பயமே?!

எது எப்படி இருப்பினும், ''என்னைப் பொருத்தவரை இந்திய நீதித்துறை வரலாற்றில் இப்படியொரு மனுத்தாக்கல் செய்யப்பட்டதும் இதுதான் முதல் முறையாக இருக்கும் என்பதும், நீதித்துறையில் சாதனை என்பதும் திண்ணம்''.

குறிப்பாகத் தடையேதும் இல்லாத பட்சத்தில் உ.வி.மு.வி 141-இன்படி, உரிமையியல் சார்ந்த எவ்வழக்கு விசாரணையிலும் கூட இப்படிப்பட்ட சீராய்வு மனுவைத் தாக்கல் செய்யலாம்.

கு.வி.மு.வி விதி 362 மற்றும் உ.வி.மு.வி விதி 152-இன்படி, ஒரு குற்றவியல் மற்றும் உரிமையியல் நீதிமன்றம் தான் பிறப்பித்த தீர்ப்பில் அல்லது உத்தரவில், எழுத்துப்பிழை அல்லது கணக்குப் பிழையைத் தவிர வேறு எதையும் திருத்தக்கூடாது எனக் கூறுகிறது.

இவ்விதிகள் நியாயத்திற்கு எதிரானது என்பதால் அந்நீதிமன்றத்திலேயே சீராய்வு மனுத்தாக்கல் செய்யும் போது, சட்டப்பிரச்சினை ஏதும் இருப்பதாக கருதினால், கு.வி.மு.வி விதி 395(2) மற்றும் உ.வி.மு.வி விதி 113-இன் படி, ''அதிகார வரம்புள்ள உயர்நீதி மன்றத்துக்கு அனுப்பி கருத்துக் கேட்டு முடிவெடுக்கக் கோரினால் தவறுகள் திருத்தப்படுவதோடு நீதிபதிகளும் திருந்துவார்கள்''.



## தப்புச் செய்து தப்பித்து விட்டால்?

தீர்ப்புரைத்த பிறகு பணியிட மாறுதல் அல்லது ஓய்வு காரணமாக தீர்ப்புரைத்த நீதிபதி அந்நீதிமன்றத்தை விட்டுச் சென்று விடும் நிலையில் இப்படியொரு சீராய்வு மனுவைத்தாக்கல் செய்தால், ''புதிதாக பொறுப்பேற்று இருக்கும் நீதிபதி, யாரோ தவறு செய்து விட்டுச் சென்றதற்கு என்னிடம் மனுத்தாக்கல் செய்தால் நான் என்ன செய்ய முடியும் எனச் சட்டக் கடமையைத் தட்டிக் கழிக்க முற்படுகிறார்கள்''. இது சட்டப்படி சரியல்ல.

ஏனெனில், உ.வி.மு.வி விதி 150-இன்படி, புதிதாக பொறுப்பேற்றுள்ள நீதிபதி, முன்பாக இருந்த நீதிபதியின் அதிகாரங்களை செயல்படுத்திட அதிகாரம் படைத்தவர்.

மேலும், உ.வி.மு.வி விதி 153-இன்படி, ஒரு நீதிமன்றம் எப்போது வேண்டுமானாலும், ஒருவழக்கு விசாரணையில் நிகழ்ந்துள்ள குறைபாட்டை, பிழையை திருத்தவும் அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது என்பதை நியாயமான முறையில் எடுத்துக் கூறி அறிவுறுத்துங்கள்.

தவறை திருத்திக் கொள்ள முன்வராமல் சட்டத்துக்கு புறம்பான தீர்ப்பை நிறைவேற்றுகை செய்ய நினைத்தால் என்ன செய்வது?

இப்படியொரு சூழ்நிலையில் நியாயத்திற்கு புறம்பான உத்தரவு மூலம் ஏற்பட்ட நிறைவேற்றுகை மனுவை, நிலுவையில் வைக்க வேண்டிய இக்கட்டான நிலைக்கு நீதிமன்றத்தை நெறிப்படுத்திய அனுபவமும் எனக்குண்டு.

அதாவது, ''அந்நீதிபதி உரைத்த தீர்ப்பை எதற்காக நீங்கள் நிறைவேற்ற சொல்கிறீர்கள்? அவர் விசாரணையை முடித்த இடத்தில் இருந்து தொடர்ந்து விசாரணை செய்ய எப்படி சட்ட விதிகள் இடம்

**கொடுக்கிறதோ, அதுபோலவே, தவறையும் சீர்தூக்கி பார்த்து திருத்திக் கொள்வது உங்களின் கடமை தானே"** என்று கேள்வி எழுப்பியதோடு சட்ட பிரச்சினையையும் எழுப்பினேன். அவ்வளவுதான்!

**"தான் பணியாற்றும் நீதிமன்றம் பிறப்பித்த உத்தரவையே நிறைவேற்ற முடியாமல் வருடக் கணக்காக கிடப்பில் போட்டு விட்டார்கள்".**

மேலும், தீர்ப்புரைத்த நீதிபதி பணியிட மாறுதலில் சென்றிருந்தால் அந்நீதிமன்றத்துக்கு வழக்கை அனுப்பி வைக்கவும் கோரலாம்.

இப்படி சட்ட விதிகளை அலசி ஆராய்ந்து அறிவுப் பூர்வமான முறையில் கேள்வி எழுப்பி சட்டத்துக்கு புறம்பான செயல்களை எந்த நிலையிலும் தடுத்து நிறுத்துவதே நமது கடமையும், ஆராய்ச்சியும் ஆகும்.

**முக்கிய குறிப்பு:** மறு ஆய்வு மனு நிராகரிக்கப்பட்டால் அதனை எதிர்த்து மறு ஆய்வோ அல்லது மேல் முறையீடோ செய்ய முடியாது. மனு ஏற்றுக் கொள்ளப்பட்டால், அதனை எதிர்த்து மேல் முறையீடு செய்யலாம் என உ.வி.மு.வி கட்டளை 47-ஆனது அறிவுறுத்தல் விடுக்கிறது.

இதனால் மறு ஆய்வு மனுத்தாக்கல் செய்வது சிறந்த வழியல்ல என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், இது பற்றி நிறைவேற்றுகை மனுத்தாக்கலில் சட்டப் பிரச்சினையை எழுப்ப இயலும் என்பதை, "நீதிபதியின் கவனத்திற்கு மறு ஆய்வு மனுவிலேயே கொண்டு செல்வது தவறை திருத்திக் கொள்ளவும், இனி மேல் இது போன்ற தவறுகளுக்கு இடம் கொடுக்க கூடாது எனவும் நீதிபதிக்கு எண்ணத்தை வரவழைக்கும் வகையில் மறு ஆய்வு மனுவை தயார் செய்ய வேண்டியது உங்கள் கடமை".



தீர்ப்பு மாற்றப்படும் என்பதற்கு எந்த உத்திரவாதமும் இல்லாத நம்பிக்கைதானே மேல்முறையீடு. இந்நம்பிக்கையை ஏன், **"மறு ஆய்வு மனு மீது வைக்க கூடாது?!"**

சட்டத்துக்கு உட்படாத ஒரு செயலை நீதிமன்றம் உட்பட எந்த அதிகார அமைப்பு புரியும் போதும், அது பற்றி நீங்கள் தெளிவாக சுட்டிக்காட்ட முற்படும் போதும், **"இது சட்டப்படி சரியல்ல"** என்ற வார்த்தையை மிகவும் ஆணித்தரமாக பயன்படுத்த வேண்டும்.

இப்படி சொல்வது சட்ட விழிப்பில் உங்களின் மனோ திடத்தையும், அவர்களின் அறியாமை குறித்து வெட்கப்படச் செய்யும்.

### வேறுபடுத்திக்காட்டி வெற்றிக்கு வித்திடனும்

எவ்விதமான மேல்நடவடிக்கையாக இருந்தாலும், **"அதற்கான அடிப்படையான காரணங்களை சட்ட விதிகளோடு குறிப்பிட்டும், அது எவ்விதத்தில் பறிக்கப் பட்டுள்ளது அல்லது மீறப்பட்டுள்ளது"** என்பதை மனுவின் முதற்பகுதியிலேயே அட்டவணை மூலம் வேறுபடுத்திக் காட்டப்பட்டு முன்னிலைப்படுத்த வேண்டும்.

இப்படி வேறுபடுத்திக் காட்டும் போதுதான் கீழ்நீதிமன்றத்தில் என்ன தவறு நடந்துள்ளது என்பதை போதுமான அறிவில்லாதவர்கள் கூட புரிந்து கொள்ள முடியும்.

**மேல் நீதிமன்ற நீதிபதிகளின் புரிதல் மற்றும் உணர்தலுக்கு மிகவும் உதவியாய் இருக்கும் என்பது திண்ணம்?!**

## அத்தியாயம் - 17

## நீதிமன்ற நடவடிக்கைகளில் பல்வகை

### நீதிமன்றத்தின் இயல்பான அதிகாரம்

ஒவ்வொரு தனி நபருக்கும், அமைப்புக்கும் உள்ள உரிமைகள் கடமைகள் போலவே இயல்பான அதிகாரம் என்ற ஒன்றும் உள்ளது. இயல்பான அதிகாரம் என்பதற்குச் சட்டத்தில் வரையறையே கிடையாது என்பதால் இவ்வதிகாரத்தையும் கூட நீதிபதிகள் தவறாகத்தான் பயன்படுத்துகிறார்கள்.

வரையறையுள்ள அதிகாரங்களையே தவறாகப் பயன்படுத்தும் போது இயல்பான அதிகாரத்தை பயன்படுத்தச் சொல்லவா வேண்டும்? ஆனாலும், **"சட்டம் தெரிந்திருந்தால் எல்லாம் சாத்தியம்தான்"**.

ஒருவர் தனக்குள்ள உரிமையைத் தனது அறியாமையால் அல்லது அனைவரும் ஏற்கத்தக்க நியாயமான காரணங்களால் இழந்து விடும் போது மீண்டும் ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுப்பதுதான் இயற்கை நீதி என்பது.

இவ்வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டிய கடமை ஒவ்வொரு தனி நபருக்கும் அல்லது அதிகார அமைப்புக்கும் உண்டு. இப்படியொரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுப்பதுதான் இயல்பான அதிகாரமாகும்.

உண்மையாக, சட்ட விதிகளின்படி, குற்றவியல் நீதிமன்றத்தில் முன்னிலையாகி முறையிடலாம் அல்லது உரிமையியலில் எழுத்து வடிவில் தெரிவிக்கலாம் என்பதை முன்னர் பார்த்தோம்.

தனது சூழ்நிலை சந்தர்ப்பத்தால் இவ்விரண்டு



நிலைகளையுமே கடைப்பிடிக்க முடியாத நபர்கள் இருக்கலாம் அல்லவா? அவர்கள் என்ன செய்வது? அவர்களுக்கு உள்ள மாற்று வழி தனது நிலை குறித்த தகவலை அஞ்சல், தந்தி மற்றும் தெரிந்தவர்கள் மூலம் நீதிமன்றத்தின் கவனத்திற்குக் கொண்டு செல்வதுதான்.

இப்படி வரும் தகவலை, ஏற்றுக் கொண்டு தக்க சட்ட நடவடிக்கை எடுப்பதே நீதிமன்றத்தின் இயல்பான அதிகாரம். இதனை யாரும் நியாயமான செயல் அல்ல என்று கருதி நீதிபதியைச் சட்ட விதிகளின்படி கேள்வி கேட்க முடியாது.

இதன் அடிப்படையில்தான் காவலில் வைக்கப்பட்டு உள்ளோரிடம் இருந்து வரும் கடிதத்தை அல்லது தகவலை, இதழ் செய்திகளின் அடிப்படையில் நீதிபதிகள் சுய விருப்ப வழக்கைப் பதிவு செய்கிறார்கள்.

மொத்தத்தில், தனிநபராக இருந்தாலும் சரி, அதிகாரம் பெற்ற அமைப்பாக இருந்தாலும் சரி, இயல்பான அதிகாரத்தைப் பயன்படுத்தும் போது அதில் எவர் ஒருவரும் எக்கேள்வியையும் எழுப்ப முடியாத அளவிற்குப் பயன்படுத்த வேண்டும் என்பது மிக மிக முக்கியம்.

### வழக்கு விசாரணை குறித்து மனுதாருக்குத் தகவல்

**'தன் வழக்கில் தானே வாதாடுபவர்கள்'** வக்கீல்கள் அல்ல. வக்கீல்களுக்கு நீதிமன்ற வளாகத்தைச் சுற்றி வருவதைத் தவிர (வழக்கு ஏதும் கிடைக்குமா என்பதற்காக) வேறு வேலை கிடையாது.

ஆனால், தன் வழக்கில் தானே வாதாடுபவர்களுக்கு அப்படியல்ல. பல்வேறு பணிகள், பொறுப்புகள் மற்றும் கடமைகள் எனப் பல உண்டு.

**"இந்நிலையில் தன் வழக்கில் தானே வாதாடும் நபர்கள் ஒவ்வொரு விசயத்திற்காகவும் நீதிமன்றத்துக்கு செல்வதென்பது சாத்தியமில்லாதது".**

சட்டத்தை இயற்றியவர்கள் இது போன்ற சங்கதிகளையெல்லாம் முழுமையாக கவனத்தில் கொண்டு சட்டத்தை இயற்றவில்லை.

"ஒவ்வொருவரும் தனது வேலைகள், பொறுப்புகள் மற்றும் கடமைகளை விட்டு விட்டுத்தான் நீதிமன்றத்துக்கு வர வேண்டும், நீதி பெற வேண்டும் என்பது எப்படி நியாயமாகும்?"

இதற்காக நமக்கு நன்றாகவே தெரிந்த நமது வேலையை, செலவு செய்து வேலைக்காரர்கள் வைத்துச் செய்ய முடியுமா? அப்படியே செய்தால்தான் அது உருப்படுமா? உடையவன் இல்லை என்றால் ஒரு முழம் கட்டைதான் என்பது முதுமொழி ஆயிற்றே. இதற்கு என்ன தீர்வு என்பதுதான் பலரின் எதிர்பார்ப்பாக இருக்கிறது.

உங்களின் எதிர்பார்ப்பு மிகவும் சரியானதுதான். நமது வேலையை நாமே செய்வோம். வேலைக்காரர்களான வக்கீல்களைப் புறக்கணிப்போம் என்ற கொள்கையிலேயே இருங்கள்.

**உங்களின் தந்தையே வக்கீலாக இருந்தாலும் கூட "அவரும் வக்கீல்தான்" என்பதில் எனக்கு இன்றைக்கு மட்டுமல்ல என்றைக்குமே மாற்றுக் கருத்து இருக்காது.**

மகாத்மா காந்தி சொன்னது போல, **"வக்கீல்களால் ஒரு நல்ல காரியத்தைக் கூட செய்ய முடியாது".**

அப்படி செய்ததாக ஏதாவது இருந்தால், அது ஒவ்வொரு மனிதரிடமும் உள்ள ஏதாவதொரு நல்ல



குணத்தின் அடிப்படையில்தானே தவிர, **"வக்கீல் என்ற முறையில் அல்லவே அல்ல".**

அதேபோல, ஒன்றை இழந்துதான் மற்றொன்றைப் பெற வேண்டும் என்பது நல்வாழ்க்கைக்கு தானே ஒழிய, **'நிச்சயமாக வழக்குக்கு அல்ல'** என்பதால், நியாயத்தைப் பெற எதுவும் தடையாக இருக்க முடியாது, இருக்கவும் கூடாது என்பதால் சட்ட விதிகள் இயற்றப்படும் வரை நீதிமன்றத்துக்கு நேரில் செல்வதைத் தவிர்த்து இயற்கை நீதியின் அடிப்படையில் தகவலை அஞ்சல், தந்தி அல்லது பிற வழிகளில் தொடர்பு கொள்ளலாம்.

இப்படித் தொடர்பு கொள்வதற்குக் குறிப்பாகத் தடை ஏதும் இல்லை என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

புகார் கொடுப்பவர் மற்றும் சாட்சிகள் சமுதாயத்தில் நிகழ்ந்த குற்றம் குறித்துப் புகார் கொடுத்துக் குற்றவாளி அல்லது குற்றவாளிகளைத் தண்டிப்பதற்கு அரசுக்கும், நீதிமன்றத்துக்கும் உதவி செய்பவர்கள் என்பதால் அவர்கள் விருப்பபடி நீதிமன்றத்துக்கு வருகை தர அனுமதிக்க வேண்டுமே தவிர, "அவர்களுக்கு இந்த நேரத்தில், இந்தத் தேதியில்தான் வர வேண்டும் என்று எவ்விதக் கட்டுப்பாட்டையும் நீதிமன்றம் விதிக்க முடியாது" என கு.வி.மு.வி விதி 171-இல் அறிவுருத்தப்பட்டுள்ளது.

எனது அனுபவத்தில் இவ்வறிவுருத்தலின்படி மூன்று அழைப்பாணைகளை மட்டுமே பார்த்துள்ளேன். இதனை சீர்திருத்தும் முயற்சிகளில் சாட்சியாக செல்பவர்கள் கட்டாயம் ஈடுபட வேண்டும்.

இதேபோல, உ.வி.மு.வி கட்டளை 9 விதி 12-இன்படி, தேவைப்படும் போது மனுதாருக்கும் கூட நீதிமன்றம் அழைப்பாணை விடுக்க வேண்டும். இப்படி சட்டங்கள்

எல்லாம் சரியாக இருந்தும் கூட, ''நீதிபதிகளின் அறியாமையால் நீதிமன்றத்தில் நடக்கும் கூத்துக்களைப் பார்ப்பவர்களுக்கு நீதிமன்றத்தின் மேல் வெறுப்பே உண்டாகிறது''.

ஆனால், "நீதிமன்றத்தின் மீது மக்கள் நம்பிக்கை வைத்துள்ளார்கள் என்று அவ்வப்போது நீதிபதிகள் பீற்றிக் கொள்வதை சமீப காலங்களில் வாடிக்கையாக வைத்திருப்பதுதான் வேடிக்கை".

நீதிமன்றங்களின் நம்பிக்கைத் தொடர்பாக ரகசிய வாக்குப்பதிவு நடத்தினால் தோல்விதான் கிடைக்கும் என்பதை சவால் விட்டு சொல்லுவேன்.

சமுதாயத்தின் ஒட்டு மொத்த தாக்குதலுக்கான உந்துதல்தான் நீதியைத்தேடி... சட்ட விழிப்புணர்வு நூல்கள் என்றால் மிகையல்ல.

### வழக்கு தாக்கலுக்கான கால வரம்பு

எந்த ஒரு வழக்காக இருந்தாலும் அதனை தாக்கல் செய்வதற்கென அந்தந்த சட்டங்களில் கால வரம்பு நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இந்த நிர்ணயம் நியாயமானதாக இல்லை.

ஆம்! ஒருவருக்கு உள்ள உரிமை அவரது அறிவுக்கு எவ்விய வகையிலோ அல்லது எட்டாத வகையில் பறிக்கப்படுகிறது. அறிவுக்கு எட்டியவர் உடனே அதற்கான நிவாரணம் தேடும் முயற்சியில் இறங்குவார்.

அறிவுக்கு எட்டாதவர் அப்படி எட்டும் வரை நிவாரணம் தேட முற்படமாட்டார் அல்லவா? இப்படி அவரது அறிவுக்கு எட்ட எவ்வளவு நாள் ஆகும் என யாரால் கணக்கிட முடியும்? முடியாதுதானே?



இதெல்லாம் அடிப்படைக் கல்வியில் சட்டக்கல்வி வந்த பின் மட்டுமே சாத்தியம் என்பதோடு, அவ்வப்போது கொண்டு வரப்படும் சட்டங்கள் குறித்தும் மக்களுக்கு தெளிவுப்படுத்த வேண்டும்.

கால வரம்பு நிர்ணயத்தில் அரசு பாராமுகத்துடனே சட்ட விதிகளை இயற்றி வைத்திருக்கிறது என்பதையும் நாம் பரிசீலித்து கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டியுள்ளது.

கு.வி.மு.வி இன் விதி 469(1)-இன்படி, ஒரு குற்றம் நடந்துள்ள போது,

அ) குற்றவாளியைப் பொருத்த மட்டில் குற்றத்தை புரிந்த அன்று முதல்,

ஆ) குற்றத்தால் பாதிக்கப்பட்டவர் அல்லது காவலரைப் பொறுத்தமட்டில் அவர்களின் அறிவுக்கு எட்டிய தினத்தில் இருந்து,

இ) குற்றம் புரிந்தது யார் என்பதை பாதிக்கப்பட்டவர் அல்லது காவலர் அடையாளம் கண்டு கொள்ளும் நாளில் இருந்து, கணக்கிடப்படுகிறது.

அனைத்து அதிகாரங்களையும் ஒருங்கே வைத்துள்ள அரசுக்கே இவ்வளவு கால அவகாசம் தேவைப்படுகிறது என்ற நிலையில், குடிமக்களுக்கு மட்டும் அது குறிப்பிட்ட ஒரு சில கால அளவிற்குள் வழக்கை தாக்கல் செய்ய வேண்டும் என கெடு விதித்திருப்பது மட்டும் எப்படி நியாயமாகும்? என்று கேள்வியை எழுப்பி கால வரம்பை தக்க வைத்துக் கொள்ளலாம்.

தற்போது மிக முக்கியமாக இரண்டு சட்டங்களின் கால வரம்பு நிர்ணயத்தை தெரிந்து கொள்ள வேண்டியுள்ளது.

மனித உரிமை பாதுகாப்பு சட்டத்தின் கீழ் தாக்கல் செய்யப்படும் வழக்குகளை **'ஓராண்டுக்குள்'** தாக்கல் செய்ய வேண்டும்.

தொழில் நல்லுறவு சட்டம் 1947-இன் தொடர்பான வழக்குகளுக்கு கால நிர்ணயம் இல்லாமல் இருந்தது. ஆனால், தற்போது 2009-ஆம் ஆண்டில் சில திருத்தங்கள் மேற்கொள்ளப்பட்டுள்ளன என்று தகவல். உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள்.

தொழில் நல்லுறவு சட்டம் 1947-இன் பிரிவு 2-இன் கூடுதல் உட்சேர்க்கை 1-இல் முக்கியமான இரண்டு திருத்தங்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

அதாவது உட்பிரிவு 2-இன்படி, **"சமரச அதிகாரியின் சமரசம் தொடர்பான நடவடிக்கை மூன்று மாதங்களுக்குள் முடிவடையவில்லை எனில் தொழிலாளி நேரடியாகவே தொழிலாளர் நீதிமன்றத்தில் பறிக்கப்பட்ட வேலையை திரும்பவும் வழங்கிடக் கோரி மனுச் செய்ய முடியும்".**

உட்பிரிவு 3-இன்படி, **"மூன்று வருடத்திற்குள் வழக்கைத் தாக்கல் செய்து விட வேண்டும்".**

முன்பு இவைகள் சமரச முறிவு அறிக்கை கிடைத்தப் பின்னரே நீதிமன்ற நடவடிக்கைக்கு செல்ல முடியும் என்றும், எவ்வளவு நாட்கள் ஆனாலும் வழக்கை தாக்கல் செய்யலாம் என்றும் வரையறை நிர்ணயிக்கப்படாமல் இருந்தது குறிப்பிடத்தக்கது.

எது எப்படி இருப்பினும், எப்போது பிரச்சினை எழுந்ததுமே தாக்கல் செய்து விடுவது நல்லது.

இதையும் எதிர் தரப்பில் இறுதி முடிவை அறிவிக்கும் வரைதான் என்பதால், சட்ட அறிவிப்புகளின் மூலம் இறுதி நிலை என்ன என்பதை உறுதிப்படுத்திக் கொண்ட பின் வழக்கு தொடர்வதைத் தவிர வேறு வழியில்லை.



குறிப்பிட்ட கால அளவிற்குள் தாக்கல் செய்யாத வழக்கை விசாரணைக்கு ஏற்பதும், ஏற்க மறுப்பதும் நீதிபதியின் இயல்பான அதிகாரமாகி விடும் என்பதை முன்னரே சொல்லியுள்ளேன்.

## விடுமுறை தினங்கள் விலக்கே

பொது வகையங்கள் விளக்கச் சட்டம் 1897-இன் பிரிவு 10(1)-இன்படி, கால வரம்பைக் கணக்கிடும் போது, நீதிமன்றத்தின் விடுமுறை நாட்களான வார விடுமுறை நாட்கள், தேசிய விடுமுறை நாட்கள் போன்ற இதர பல விடுமுறை நாட்களையும் கால வரம்பு கணக்கில் இருந்து கழித்துக் கொள்ள வேண்டும்.

இதில் அதிகார வரம்புள்ள நீதிபதியிடம் வழக்கை நேரடியாக தாக்கல் செய்ய வேண்டிய சூழ்நிலை இருந்தால், அவர் விடுப்பில் இருந்த காலத்தையும் கணக்கில் எடுத்துக் கொள்ளலாம்.

ஆனால், அந்நீதிமன்றத்துக்கென நிர்வாக அலுவலகம் இருந்து, அதன் பொறுப்பாளர் பணியில் இருந்தால் கால வரம்பு பொருந்தாது.

முக்கிய குறிப்பு: ஒரு அலுவலகத்தில் அதன் தலைமை பொறுப்பாளர் அல்லது வேறு அலுவலர்கள் எக்காரணத்தைக் கொண்டும் இல்லை என்பதற்காக அவர் ஆற்ற வேண்டிய கடமைகள் எக்காரணம் கொண்டும் நிறுத்தி வைக்கப்படுவதில்லை.

மாறாக, அக்கடமைகள் வேறு ஒரு அலுவலரின் பொறுப்புக்கு தற்காலிகமாக மாற்றப்பட்டிருக்கும் என்பதால் அப்பொறுப்பாளர் யார் என்பதை கண்டறிந்து

உங்களின் கோரிக்கையை வலியுறுத்த முழு உரிமை உண்டு. இது அரசு சார்ந்த அனைத்து அலுவலகத்திற்கும் பொருந்தும்.

சில சமயங்களில் அரசு அதிகாரிகளின் கடமை தவறிய செயலால் கூட கால தாமதம் ஏற்படலாம் அல்லவா? அக்காலத்தையும் கூட கால வரம்பில் கழித்துக் கொள்ள வேண்டும்.

வக்கீல்களால் நீதிமன்ற புறக்கணிப்பு செய்யப்படும் போது நீதிபதிகள் தங்களின் பணிக்கு வருகை புரிவார்கள் என்பதால் அந்நாட்கள் கால வரம்புக்கு உட்பட்டதே.

கால வரம்பு குறித்த மேற்கண்ட சங்கதிகள் மேல் நடவடிக்கைகளுக்கும் கூட சாலப் பொருந்தும். மேலும் விபரமாக அறிய கால வரையறை சட்டம் 1887 ஐ படித்துணருங்கள்.

வக்கீல்கள் நீதிமன்ற புறக்கணிப்பில் ஈடுபடும் நாட்களில் **"தன் வழக்கை தானே நடத்துபவர்கள்"** எவ்வித இடையூறும் இல்லாமல் விரைவாக நடத்தி முடித்துக் கொள்ள வேண்டும். தேவைப்பட்டால் எதிர் தரப்பை கூட நேரடியாக முன்னிலையாக வலியுறுத்தி மனு கொடுக்கலாம்.

### வழக்கில் தீர்வுக்கான கால வரம்பு

ஒவ்வொரு வழக்கும் எவ்வளவு நாட்களுக்குள் தீர்வு காணப்பட வேண்டும் என சட்ட விதிகளில் வரையறை செய்யப்பட்டிருந்தாலும் கூட அது வெளியில் வராமல் ரகசியமாக பாதுகாக்கப்படுவதால் அது பற்றி என்னாலும் தெளிவாக தெரிந்து கொள்ள முடியவில்லை.

வழக்கை முடிப்பதற்கான காலம் எவ்வளவு எனத் தெளிவாக தெரிந்தால், நமது பிழைப்பு நன்றாக



இல்லாமல் போய் விடும் என வக்கீல்களும், நீதிபதிகளும் நம்புகிறார்கள்.

இந்த காலவரையறை வழக்கின் தன்மைகளுக்கு ஏற்ப மாறுபடும் என்றாலும், மிக அதிகபட்சமே ஆறு மாதங்கள்தாம் என்பது மட்டும் திண்ணம். இந்த வரையறைக்குள் லட்சத்தில் ஒரு வழக்காவது முடிக்கப்படுமா? என்பது சந்தேகமே.

குறிப்பாக வழக்கை ஒவ்வொரு நாளும் தொடர்ந்து நடத்திட வேண்டும் எனவும், அப்படி நடத்த முடியவில்லை என்றால், அதற்கான காரணத்தை வழக்கு விசாரணைக் குறிப்பில் குறிப்பிட வேண்டும் என அறிவுறுத்துகிறது.

ஆனால், வழக்கை நடத்த தம் பக்கம் நியாயம் உள்ள தரப்பினர்கள் தயாராக இருந்தாலும், நீதிபதிகள் நியாயமில்லாத தரப்பினரின் காலந்தாழ்த்தும் **'கடைமை'**க்கு, **'கடைமை'**யாற்றும் விதமாக வழக்கு தரப்பினர்கள் கால அவகாசம் கேட்டார்கள் என்று குறிப்பெழுதும் கெட்ட பழக்கத்தை வழக்கமாக கொண்டிருக்கிறார்கள்.

தன் வழக்கில் தானே வாதாடுபவர்கள் நினைத்தால் இத போன்ற கெட்ட பழக்க வழக்கங்களை எல்லாம் தடுத்து நிறுத்தி நிர்ணயிக்கப்பட்ட கால அளவிற்குள் வழக்கை முடிவுக்குக் கொண்டு வர முடியும். எப்படி?

வழக்கு தொடுக்க எதிர்மனுதார் அனுமதி வழங்கி விட்டார் என்றால் என்ன அர்த்தம்? அல்லது தார்மீக அனுமதி வழங்கப்படாத நிலையில் வழக்கு தொடுக்கப் பட்டு, எதிர்தரப்பால் வழக்கு சங்கதிகளை மறுத்து பதிலுரையும் தாக்கல் செய்யப்படுகிறது என்றால் என்ன அர்த்தம்?

**"வழக்கை எதிர்கொண்டு பொய்ப்பிக்க அனைத்து விதத்திலும் தயாராகி விட்டார் என்பதுதானே!?"**

பின் அடுத்தடுத்த விசாரணைகளில் வாய்தா கேட்க என்ன உரிமை இருக்கிறது? அப்படியே கேட்டாலும் கூட நீதிமன்றம் வாரி வழங்கிட சட்ட விதிகளில் என்ன வழிவகை உள்ளது? வாரி வழங்குவதை ஆட்சேபிக்காமல் இருக்க உங்களுக்கு என்ன தடை இருக்கிறது?

உண்மையான வழக்கை தாக்கல் செய்பவர், எதிர் தரப்பினர் பதிலுரையை தாக்கல் செய்ய சட்ட விதிகளில் அதிகபட்சமாக எவ்வளவு கால அளவு நிர்ணயிக்கப்பட்டு இருக்கிறது என்பதை மனதிற்கொண்டு, "அதற்குள் தனது சட்டப்பூர்வமான நடவடிக்கைகளை மேற்கொள்ளவில்லை என்றால் அதற்காக நீங்கள் காத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று எவ்வித சட்டக் கட்டுப்பாடும் கிடையாது".

மாறாக, **"அக்குறிப்பிட்ட நாட்களுக்கு பின்னர் உங்களின் சட்டக் கடமை தொடங்கி விடுகிறது என்பதால், உங்கள் தரப்பில் அடுத்தடுத்து சட்ட விதிகளின்படி என்ன நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டுமோ அதை மேற்கொள்ள வேண்டும்".**

அப்படி மேற்கொள்ளும் போது, வழக்கு நீதிமன்றம் வந்த பின்னும் கூட, **"எதிர்தரப்பில் சட்ட விதிகளை கடைப்பிடிக்கவில்லை என்பதன் மூலம் நீதிமன்றமே எதிர் மனுதாரின் சட்டத்துக்கு உட்படாத நடவடிக்கைகளை உணர்ந்து கொள்ள வேண்டும் என்றும், அதற்காக நான் எனது சட்டப்பூர்வ கடமைகளை நிறைவேற்றாமல் இருக்க முடியாதென்றும் அந்தந்த நடவடிக்கையின் ஆரம்பத்திலேயே குறிப்பிட்டு விட வேண்டும்".**

**இப்படிச் செயல்படும் போது நீதிபதி நெருக்கடி நிலைக்கு ஆளாகி எதிர்தரப்பின் கழுத்தைப் பிடிப்பார். கூடவே, வழக்கையும் விரைவில் முடிப்பார்.** வழக்குப் பொய் என்னும் போது எதிர் தரப்பும் இது போன்ற அதிரடி நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்.



### பல்வகை மனு / இடைமனு / சிறு நினைவுக் குறிப்பு

ஒவ்வொரு வழக்கிலும் தேவைப்படும் இடை மனுக்களைத் தாக்கல் செய்ய உரிமையுண்டு. இப்படித் தாக்கல் செய்யப்படும் மனுக்களைக் குற்றவியலில் **"குற்றப் பல்வகை மனு"** என்றும், உரிமையியலில் **"இடைமனு"** என்றும் பெயர்.

இம்மனுக்களுக்கு முறையாக எண் கொடுக்கப்பட்டு, எதிர்தரப்பிடம் பதில் பெற்று முறையாக உத்தரவு பிறப்பிப்பார்கள்.

இம்மனுக்களுக்கு ஆதரவான சான்றாவணங்களைத் தேவைப்பட்டால் தாக்கல் செய்யலாம் அல்லது கோரலாம். இப்படிக் கேட்டால் ஆதார ஆவணங்களைத் தாக்கல் செய்ய முடியாமல் நமது சட்ட வலையில் வசமாக சிக்கி கொள்வார்கள் என்பதும் எனது அனுபவமாகும்.

உண்மையாக, உங்களுக்காக நீங்களே வாதாடும் போதுஎதிர்தரப்பில் வக்கீல் இருந்தால் பல நாட்கள் நீதிமன்றப் புறக்கணிப்பைதான் மேற்கொள்வார்கள்.

வக்கீல்கள் நீதிமன்றப் புறக்கணிப்பு செய்வது சட்ட விரோதம் என்பதால் நீதிபதிகள் கட்டாயம் நீதிமன்ற பணிக்கு வந்து விடுவார்கள்.

நீங்களும் தாராளமாக வழக்கை நடத்தலாம். வக்கீல் வரவில்லை என்பதைப்பற்றி நீதிபதியோ, நாமோ கவலைப்படத் தேவையில்லை.

இப்படித்தான் எனது தொழிலாளர் வழக்கு விசாரணையில் நீதிமன்ற புறக்கணிப்பில் ஈடுபட்ட காரணத்தால் எதிர்தரப்பு வக்கீல் முன்னிலையாகவில்லை.

இதனால், அன்றைய தினம் அவர் ஆற்ற வேண்டிய கடமையை ஆற்றாததால் எனக்கு ஏற்பட்ட வீண் செலவீனங்களுக்காக எதிர்மனுதாரிடம் இருந்து செலவுத்தொகையை பெற்றுத்தரக் கோரி நீதிபதியிடம் இடைமனு ஒன்றைக் கொடுத்தேன்.

வக்கீலோ அதற்கான பதிலாக, "அன்றைய தினம் தான் உயர்நீதிமன்றத்தில் ஒரு நீதிபேராணை வழக்கில் முன்னிலையானதாக கூறி அதற்கு ஆதார சான்றாக உயர்நீதிமன்றம் வெளியிடும் வழக்கு பட்டியலை சமர்பித்தார்".

வழக்கு பட்டியல் என்பது வழக்கு விசாரணைக்கு வருகிறது என்பதைத் தெரியப்படுத்தும் ஓர் நீதிமன்ற அறிவிப்புதானே தவிர, அதில் முன்னிலையானார் என்பதற்கு அது ஆதாரமாகாது அல்லவா?

ஏனெனில், இங்கும் முன்னிலையாக வேண்டும் என வழக்கு பட்டியல் இருக்கிறது. ஆனால் முன்னிலையாக வில்லை. ஆதலால், **'அங்கு முன்னிலையானார் என்பதற்கான நீதிபதி வழங்கிய சான்றை இங்கு தாக்கல் செய்ய வேண்டும்'** என கோரினேன்.

உயர்நீதிமன்றத்தில் முன்னிலையாகாததால் அதற்கான நீதிபதியின் சான்றை தாக்கல் செய்ய முடியாமல் போகவே ரூ-500 செலவுத்தொகை எனக்கு எதிர்தரப்பு வக்கீல் வழங்க நேர்ந்தது.

தொழிலாளர் நீதிமன்றத்தில் பலமுறை செலவுத் தொகை பெற்றது நானாகத்தான் இருக்கும். இதிலும், **"வக்கீல் முன்னிலையாகவில்லை என்பதற்காக பெற்றது, யாரும் பெறாத சிறப்பு".**



ஒருவேளை உயர்நீதிமன்றத்தில் முன்னிலையானதற்கு ஆதரவான நீதிபதியின் சான்றை சமர்ப்பித்து இருந்தாலும் கூட, உயர்நீதிமன்ற உத்தரவை மட்டும்தான் மதிக்க வேண்டும்.

அதற்கு கீழான நீதிமன்ற உத்தரவுகளை மதிக்காமல் மிதிக்கலாம் என எந்த சட்ட விதியும் உரிமை வழங்கவில்லை எனக்கூறி செலவுத்தொகையை பெற்று இருப்பேன்.

இப்படியெல்லாம் நான் ஓட ஓட விரட்டிய எனது எதிர் தரப்பு வக்கீல் ஏ.ஆர்.கோகுல்நாத் நிர்வாகத்திற்காக முன்னிலையாகும் மிகப்பெரிய வக்கீல் எனத் தொழிலாளர் சார்பில் முன்னிலையாகும் பழுத்த அனுபவம் வாய்ந்த வக்கீல்களும், தொழிற்சங்க பிரதிநிதிகளும் கூட சட்டம் தெரியாததால் பயந்து சாவதைப் பார்க்கும் போது எனக்கு சிரிப்புதான் வரும்.

இப்படித் தாக்கல் செய்யப்படும் மனுக்களுக்கு எதிர்தரப்பில் இருந்து பதிலைப் பெறுவதாலும், அதுவரை அசல் வழக்கின் மீதான விசாரணைகள், நடவடிக்கைகள் நிறுத்தப்படுவதாலும் வழக்கில் தேவையற்ற காலதாமதம் ஏற்படுகிறது.

இதனைத் தடுக்க மனுவில் சொல்ல வரும் சங்கதிகளையே சிறு நினைவுக் குறிப்பு (மெமோ) என்ற பெயரில் நீதிமன்ற சாசன உறுபு 57(1)-இன் கீழ் தாக்கல் செய்யலாம். அதாவது **'நீதிபதிக்குச் சட்ட விதிகளைக் குறிப்பிட்டு நமது நிலையை நினைவுப்படுத்துதல்'** என்று பொருள் கொள்ளலாம்.

இது குறித்து எதிர்தரப்பைக் கேள்வி கேட்க வேண்டிய நிர்பந்தம் நீதிபதிக்கு இல்லை என்பதால் சட்ட விதிகளின்படி அல்லது இயல்பான அதிகாரத்தின்படி உடனே உத்தரவு எழுதி விடுவார்கள். இவ்வுத்தரவை சான்று நகலாகவும் பெற முடியும். இச்சிறு நினைவூட்டல்

மனுவிற்கு வரிசை எண் மட்டுமே கொடுப்பார்கள்.

இடைமனுக்கள் மீது பிறப்பிக்கப்படும் உத்தரவை எதிர்த்து மேல் முறையீடு செய்ய முடியும். ஆனால், சிறு ஞாபக குறிப்பின் உத்தரவை எதிர்த்து செய்ய முடியாது என்பதால் வாய்தாவுக்காக செலவுத்தொகை கோரும் போது சிறு ஞாபக குறிப்பாக வழங்கலாம்.

இது தவிர, அசல் மனுவில் குறிப்பிட்டுள்ள சங்கதிகளை நினைவூட்டும் விதமாக இடைமனுவைத் தவிர்த்து சிறு ஞாபக குறிப்பு வழங்கலாம். இதற்கு அடிப்படைக் காரணமாக இடைமனுவால் ஏற்படும் கால தாமதம் குறித்து அசல் மனுவிலேயே விளக்கி விடலாம்.

## முகவரி மாற்றம் குறித்து நீதிமன்றத்துக்கு தகவல்

ஒவ்வொரு வழக்கிலும் தரப்பினர்கள் வசித்து வரும் முகவரி இடம் பெற்றிருக்கும். வழக்கு நடந்து கொண்டிருக்கும் போது அல்லது முடிவடைந்த பின்னர் அல்லது மேல் நடவடிக்கையில் இருக்கும் போது முகவரி மாற வேண்டிய சூழ்நிலை இருந்தால், அது பற்றிய அறிவிப்பை நீதிமன்றத்துக்கு கண்டிப்பாக தர வேண்டும்.

மேலும், பழைய முகவரிக்கு உட்பட்ட அஞ்சல் நிலையப் பொறுப்பாளருக்கு புதிய முகவரியை தெரிவித்து தங்களின் பெயருக்கு வரும் கடிதங்களை அப்புதிய முகவரிக்கு திருப்பி அனுப்ப கோரலாம். தேவைப்பட்டால் இக்கோரிக்கையை ஆறு மாதங்களுக்கு ஒரு முறை புதிப்பித்துக் கொள்ள வேண்டும்.

**அப்படிச் செய்யவில்லை எனில் பழைய முகவரிக்கே நீதிமன்றம் தொடர்பான அழைப்பாணைகள் வந்து திரும்பிச் சென்றால் அது நிச்சயம் உங்களுக்குப் பாதகமாகவே அமையும்.**



## சம்பந்தமில்லா சான்றுகளை நிராகரித்தல்

ஒவ்வொரு வழக்கிலும் தாக்கல் செய்யப்படும் சான்றுகளில் வழக்குக்குத் தொடர்புடைய சான்றுகள் எதுவோ அதை மட்டுமே தாக்கல் செய்ய வேண்டும்.

எதிர்தரப்பில் தேவையில்லாத சான்றுகளைத் தாக்கல் செய்து குழப்ப நேர்ந்தால், அதைத் தக்க காரணத்துடன் நிராகரிக்க வேண்டும் என நீதிபதியிடம் கோரிக்கை வைக்கத் தரப்பினர்களுக்கு முழு உரிமையுண்டு.

கோரிக்கையின் அடிப்படையில் நீதிபதி தனது இயல்பான அதிகாரத்தின் கீழ் முடிவெடுப்பார். அவர் எடுத்த முடிவு தவறாக இருந்தாலும் கூட அதுபற்றிக் கவலைப்படத் தேவையில்லை.

ஏனெனில், சம்பந்தமில்லாத அல்லது பொய்யான சான்றை அது அப்படிப்பட்ட சான்றுதான் என்பதை நம்மிடம் உள்ள சான்றை வைத்துக் குறுக்கு விசாரணையில் பொய்ப்பித்து விடலாம்.

## ஒத்தி வைக்கும் போது செலவுத்தொகை

நீதிமன்றத்தின் பரம்பரை நோய் என்றால் அது **“வாய்தாதான்”.**

வாய்தா என்பது வழக்கு விசாரணை நாளன்று, சட்ட விதிகளின் படி அன்று என்ன நடந்திருக்க வேண்டுமோ அது நடக்காமல் எந்த ஒரு காரணத்தினாலும், அன்றைய தினமே அல்லாது வேறு தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டால், அப்படி ஒத்தி வைப்பதற்கு சட்ட விதிப்படி யார் காரணமோ அவர் அந்த ஒத்திவைப்பால் பாதிக்கப் பட்டவருக்கு அன்றைக்கு ஏற்பட்ட சம்பள இழப்பு, பயணப்படி, உணவுப்படி ஆகியவற்றைச் செலவுத் தொகையாக வழங்க வேண்டும்.

பொதுவாக வழக்கு ஒத்தி வைக்கப்படும் போது செலவுத்தொகைக்கு நீதிமன்றமே உத்தரவிட வேண்டும் என்றாலும் கூட அப்படிச் செய்வது இல்லை. வற்புறுத்திக் கேட்பவர்களுக்கு மட்டுமே கிடைக்கும் வாய்ப்பு இருக்கிறது.

பல சமயங்களில் நீதிபதியே விடுமுறையில் சென்று விடுவதால், அந்நீதிமன்ற ஊழியர்களாலேயே ஒத்தி வைக்கப்படும். இப்படி நடந்தாலும் செலவுத் தொகை கேட்கும் உரிமை உண்டு.

நீதிமன்றம் தன் சொந்தக் காரணங்களுக்காக ஒத்தி வைக்கும் போது செலவுத்தொகை கொடுக்க வேண்டும் என்றோ அல்லது கொடுக்க கூடாது என்றோ சட்ட விதிகள் இல்லை. **'நீதிமன்றம்தான் முதலில் சட்டத்தைக் கட்டாயமாகக் கடைப்பிடிக்க வேண்டும்'** என்பதாலும், செலவுத்தொகை கோரத் தடை ஏதும் இல்லாததாலும் தாராளமாக கோரலாம்.

அப்படி கோரும் போது நீதிபதியே தனது சொந்தப் பணத்தில் இருந்து தருவாரா? அல்லது அரசாங்கம் தர உத்தரவுப் பிறப்பிப்பாரா? என்று தெரியவில்லை. இதுவும், **''முக்கியமானதொரு சட்டப் பிரச்சினையாக இது குறித்தும் சட்ட விதிகளை தெளிவாக உருவாக்கணும்''.**

அப்போதுதான் நீதிபதிகள் தங்கள் இஷ்டத்துக்கு வழக்கு தரப்பினர்களை அலைய விடமாட்டார்கள்.

ஒரு சில நீதிமன்றங்களில் நீதிபதிகள் இல்லாத போது, வேறு நீதிமன்றத்தில் அழைத்து விசாரிப்பார்கள் அல்லது ஒத்தி வைப்பார்கள். விசாரித்தால் செலவுத்தொகை கேட்க முடியாது. ஒத்தி வைத்தால் கோரலாம்.

கீழமை நீதிமன்றங்களைத் தவிர வழக்கின் மேல்



நடவடிக்கைக்கான நீதிமன்றங்களில் வாய்தா செலவு கோர முடியாது என்ற தவறான தகவலைப் பரப்பி மேல் நீதிமன்ற நீதிபதிகள் தப்பிக்க நினைப்பதும் உண்டு.

**சட்ட விதிகள் எல்லா நீதிமன்றங்களுக்கும் சமம்தான் என்பதால் மேல்நீதிமன்ற நடவடிக்கையிலும் வாய்தாவிற்கு செலவுத்தொகை கோர உரிமையுண்டு.**

## பச்சை மையில் கையொப்பமிடுதல்

உண்மையான ஆவணம் என்றால் அதில் சட்ட அதிகாரம் பெற்ற குறிப்பிட்ட நபர்கள் பச்சை மையில் கையொப்பமிட வேண்டும் என்ற அறியாமை நடைமுறையில் இருந்து வருகிறது.

யார்யார் பச்சை மையில் அல்லது எந்த வண்ண மையில் கையொப்பமிட வேண்டும் என்பதற்குக் குறிப்பிட்டுச் சொல்லும்படியான சட்ட விதிகள் ஏதும் கிடையாது.

நீதிமன்ற சாசன உறுப்பு 70-இன்படி, **''ஓர் ஆவணம் உண்மையானது என்று சொல்ல அதனை எழுதியவர் அவ்வாவணத்தில் இடும் கையொப்பமே போதும்''** என்பது நமது சட்ட ஆராய்ச்சியின் கண்டு பிடிப்புகளில் மிக மிக முக்கியமானதொன்றாகும்.

உண்மையான ஆவணம் என்றால் பச்சை மையில் கையொப்பமிட்டு இருக்க வேண்டும் என்ற நடைமுறை வழக்கத்தில் இருப்பதால் அதையே நீங்களும் கடைப் பிடிக்கலாம்.

**இப்படி கடைப்பிடிப்பது நீதிமன்ற சாசன உறுப்பு 70-இன்படி, சரியானதே என்பதால் வண்ணத்தைப் பற்றி கவலைப்படத் தேவையில்லை.**

என்னைப் பொறுத்தவரை சுமார் ஐந்தாண்டுகளுக்கு மேலாக, **"நீதிமன்ற ஆவணங்கள் உட்பட அனைத்து ஆவணங்களிலும் பச்சை வண்ண மையில்தான் ஒப்பமிட்டு வருகிறேன்"**.

இதெல்லாம் எனக்குத் தேவையில்லை எனக் கருதுவோர் தாங்கள் விரும்பிய வண்ண மையில் கையொப்பமிடலாம்.

## வழக்குதாரர் இறந்து விட்டால்

வழக்குத் தொடுக்கும் முன்னரோ அல்லது பின்னரோ வழக்குத் தரப்பினர்கள் இறந்து விட்டால் வழக்கின் தன்மையில் சூழ்நிலைக்கு ஏற்றவாறு மாற்றங்கள் நேரிடும். ஆனாலும், இவைகள் குறித்து பல்வேறு சட்ட விதிகளில் சொல்லப்படவில்லை.

குற்றவியல் வழக்கில் பல பேர் குற்றம் சாற்றப்பட்டு அதில் எவரேனும் இறந்து விட்டால் அவர் மீதான வழக்கு மட்டும் கைவிடப்படும். மற்றவர்கள் மீதான வழக்கு நடைபெறும்.

புகார் கொடுத்தவர் இறந்து விட்டால் (கொலை வழக்கு) மீதமிருக்கும் குற்றத்தரப்பு சாட்சிகளின் அடிப்படையில் வழக்கை விசாரித்து முடிப்பார்கள்.

அசையும் அல்லது அசையாச் சொத்து தொடர்பான உரிமையியல் வழக்குகளில் எத்தரப்பினர்கள் இறந்தாலும் அவர்களின் வாரிசுகள் வழக்கைத் தொடர்ந்து நடத்தலாம். அல்லது வாரிசுகளை வழக்கில் சேர்த்துக் கொண்டு வழக்கை நடத்தலாம். இவ்விதிகள் தொழிலாளர் மற்றும் நுகர்வோர் வழக்குகளை நடத்துபவர்களுக்கும் பொருந்தும்.

ஆனால், கணவன் மனைவிக்கு இடையேயான வழக்குகளுக்குச் சாத்தியமில்லை. இவ்விருவருக்குமான



உறவு உரிமையில் வேறு எவரும் எவ்விதத்திலும் தலையிட முடியாது என்பது சட்டத்தின் சிறப்பு அம்சமாகும்.

குடும்பத்தில் தந்தை, தாய், மகன், மகள் என அனைவரும் ஒருவருக்கொருவர் வாரிசு என்ற அடிப்படையில் எப்படிச் சொத்தில் உரிமை கொண்டாட உரிமையுண்டோ, அதே போல, **"வழக்கு என வந்தாலும், வரா விட்டாலும் ஒருவர் வாங்கிய கடன் தொகையில் மற்றவர்கள் பங்கு கொடுக்கக் கடமைப்பட்டவர்கள்"**.

ஆனால், குற்றச் செயல்களில் பங்குடையவர்கள் ஆகமாட்டார்கள் என்பதை நீதிபதிகள் விளங்கி கொண்டுள்ளார்கள். ஆனால், காவல்துறையில் விளங்கிக் கொள்ளவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

ஆம்! குடும்ப உறுப்பினர்களில் யாராவது ஒருவர் குற்றம் புரிந்து விட்டு தலைமறைவு ஆகி விட்டால், அவர்களை வலை வீசி கண்டு பிடிப்பதற்கு வக்கில்லாத காவல்துறை குடும்ப உறுப்பினர்களை துன்புறுத்துவதை வாடிக்கையாக கொண்டுள்ளார்கள். இப்படிச் செய்தால் என்ன செய்வது என்பதை குற்ற விசாரணை நூலின் மாதிரி அறிவிப்பை படித்து தெரிந்து கொண்டு செயல்படுங்கள்.

உரிமையியல் அடிப்படையில் கணவனுக்கு மனைவியும், மனைவிக்கு கணவனும் தான், முதல் வாரிசுகள். அதன் பின்னர்தான் பிறந்த பிள்ளைகள்.

கணவன் அல்லது மனைவி ஆகியோரில் எவரேனும் ஒருவர் இறந்து மற்றவர் மறுமணம் புரிந்து கொண்டு விட்டார் என்பதால் மட்டும் அவரை வழக்கிலிருந்து விடுவிக்க இயலாது. இவைகள் பற்றி உ.வி.மு.வி கட்டளை 22-இல் மேலும் விரிவாக அறியலாம்.

### சிறைப் பாதுகாப்பில் வழக்கை நடத்தலாம்

ஒரு சில சந்தர்ப்பங்களில் வழக்கு விசாரணையில் இருக்கும் போது, வழக்கு நடவடிக்கையைச் சீர்குலைக்க வேண்டும் என்பதற்காக வழக்கை தொடுத்தவர் அல்லது அதில் முக்கியச் சாட்சியாக இருக்கும் நபர் சிறையில் இருக்கும் சூழ்நிலையைத் திட்டமிட்டே ஏற்படுத்துவார்கள் அல்லது தானாகவே கூட ஏற்படலாம்.

அதற்காகக் கவலைப்படத் தேவையில்லை. சிறையில் இருந்து கொண்டே கூட புகார் கொடுத்தவரும் சாட்சிகளும் தங்களின் அக்கறையுள்ள குற்றவியல் மற்றும் உரிமையியல் சார்ந்த வழக்குகளை நடத்தலாம் என்றாலும் குற்றவியல் வழக்கில் சிறையில் இருந்து கொண்டு, தன்மீதான மற்ற குற்றவியல் வழக்குகளைத் தாம் பெரும்பாலும் நடத்தி வருகிறார்கள்.

மற்றபடி, சிறையில் இருந்து கொண்டு தான் தொடுத்த குற்றவியல் வழக்கையோ அல்லது உரிமையியல் வழக்கையோ நடத்தியதாக எனது அனுபவத்தில் ஒருவரைக் கூட பார்த்ததில்லை. கேள்விப் பட்டதும் கூட இல்லை.

எனக்கு இப்படிப்பட்ட நல்லதொரு வாய்ப்பு சிறையில் இருக்கும் போது கிடைத்தது என்றாலும் கூட, **"பயன்படுத்திக் கொள்ள தவறியதன் மூலம் சட்டத்தில் ஓர் புதிய சாதனையை தவற விட்டு விட்டேன்".**

இப்படி வழக்கை நடத்த விரும்புபவர்கள் சிறை அதிகாரி மூலமாக சம்பந்தப்பட்ட நீதிமன்ற நீதிபதிக்கு தக்க சட்ட விதிகளின் கீழ் சூழ்நிலையை விவரித்து மனு அனுப்ப வேண்டும்.

சிறையில் இருப்பவரைச் சாட்சியாக அழைக்க வேண்டும்



என வழக்குத் தரப்பினர்கள் எவரும் கூட எந்த நீதிமன்றத்திலும் மனுச் செய்ய முடியும். அம்மனுவின் பேரில் நீதிமன்றம் சிறையில் உள்ள உங்களுக்குப் பிடியாணை உத்தரவு ஒன்றைப் பிறப்பிக்கும்.

பிடியாணை என்றால் கைது செய்து கொண்டு வருதல்தானே? நான்தான் ஏற்கனவே கைது செய்யப்பட்டு சிறையில் இருக்கிறேனே! பிறகு எதற்கு என்மீது பிடியாணை பிறப்பிக்க வேண்டும் என்று நீங்கள் நினைக்கலாம்.

பிடியாணை என்றால், **"தலைமறைவாக உள்ள ஒருவரை கைது செய்து நீதிமன்றத்துக்கு கொண்டு வருதல் என்று மட்டும் பொருளல்ல".**

சட்ட அதிகாரத்தின் கீழ் மீட்டுக் கொண்டு வருதல் என்றும் சூழ்நிலைக்குத் தக்கவாறு பொருள்படும். சிறையில் தண்டனைக் காலம் முடித்ததும் இருப்பிடம் வரை செல்லத் தேவையான போக்குவரத்துக்குக் கொடுக்கும் அனுமதிச் சீட்டின் பெயரும் வாரண்ட்தான்.

**இப்பிடியாணையின் அடிப்படையில் சம்பந்தப்பட்ட நீதிமன்றத்துக்குச் சிறையிலிருந்து உங்களைக் கொண்டு செல்வார்கள் என்பதால் திட்டமிட்ட தடைக்குப் பதிலாக நீதிமன்றக் காவல் பாதுகாப்புடன் வழக்கை எளிதாக நடத்தி முடித்து வெற்றி பெறலாம்.**

மொத்தத்தில், எது நடக்கக் கூடாது என்று திட்டம் போட்டுச் சிறையில் அடைத்தார்களோ அதை மிக எளிதாக முறியடித்து வழக்கை வெற்றி கொள்ளலாம்.

### சாட்சியின் நடவடிக்கை பற்றிக் குறிப்பு

ஒரு சாட்சியின் கடமை மற்றும் திறமை என்பது கேட்ட கேள்விகளுக்கு எதையும் யோசிக்காமல்

உடனுக்குடன் பதில் சொல்வதுத்தான். பதில் என்றால் தெரிந்தால் தெரிந்த விபரத்தையும், தெரியாது என்றால் தெரியாது எனவும் சொன்னால் போதுமானது.

இதிலிருந்து வேறுபடுகிறார் என்றாலே, அவர் கூட்டிக் குறைத்துப் பொய்யான சங்கதிகளைச் சொல்ல முற்படுகிறார் என்றே பொருள்.

இப்படிப்பட்ட எந்தச் சூழ்நிலையாக இருந்தாலும், நான் தொழிலாளர் வழக்கில் குறுக்கு விசாரணை செய்த போது, **"சாட்சி பதில் சொல்ல நீண்ட நேரம் எடுத்துக் கொள்கிறார் என நீதிபதி எடுத்தார் இல்லையா?"** அதுபோல சாட்சி பதில் சொன்ன விதம், முக பாவனை உட்பட்ட பல்வேறு சூழ்நிலைகளை நீதிபதிகள் குறிப்பு எடுக்க வேண்டும்.

இதன் மூலம் சாட்சி மனப்பாடம் செய்து பொய்ச் சாட்சியம் அளித்திருந்தால் கூட அதனைக் கண்டு பிடித்து நியாயம் வழங்க முடியும். ஆனால், இப்படி எந்த நீதிபதியும் குற்றவியல் வழக்குகளில் கூட குறிப்பு எடுப்பதாகத் தெரியவில்லை.

மேல் நடவடிக்கைக்காகச் செல்லும் போது இக்குறிப்புக் குறித்தும் சான்று நகல் கோரி உரிய முறையில் அவற்றைப் பயன்படுத்திக் கொள்வது சிறந்த பயனைத்தரும்.

### அறிவியல் சோதனைக்கு உட்படுத்துதல்

எந்தவொரு வழக்கு விசாரணையிலும் தாக்கல் செய்யப்படும் ஆதாரச்சான்றுகளில் உள்ள கையொப்பம் போலியானது அல்லது முன் தேதியிட்டுப் பின்னர் அச்சான்றாவணம் எழுதப்பட்டுள்ளது என்றும் அதற்கான தக்க காரணங்களை எடுத்துக் கூறியும் அறிவியல்



பகுப்பாய்வுக்கு உட்படுத்த வேண்டும் என வழக்குத் தரப்பினர்களில் எவர் வேண்டுமானாலும் கோரலாம்.

ஆனால், அப்படிக் கோரும் தரப்பினரே அதற்கான செலவுத்தொகையைச் செலுத்த வேண்டியிருக்கும்.

அப்படி தொகையைச் செலுத்துபவருக்கு வழக்குச் சாதகமாக அமைந்தால் அத்தொகையும் எதிர்தரப்பினரால் வழங்கப்பட வேண்டும் என நீதிமன்றமே தீர்ப்புரையில் உத்தரவு பிறப்பிக்கும். இப்படித் தன்னால் ஆதாரப்பூர்வமாக நிருபிக்க இயலாத எந்த ஒரு பொருள் பற்றியும் அறிவியல் பூர்வமான சோதனைக்கு வழக்கு தரப்பினர்கள் அல்லது சாட்சிகள் எனத் தொடர்புடையவர்கள் உத்தரவு கோரலாம்.

### எதிர் கோரிக்கை எதற்கு?

பல பேர் பொய் வழக்கு, பொய் வழக்கு எனப் புலம்பி தீர்ப்பார்களேத் தவிர, அவ்வழக்கை ஆக்கப்பூர்வமான முறையில் சந்திக்க தேவையான சங்கதிகளை சிந்திக்க மாட்டார்கள்.

பணம் மற்றும் நிலம் தொடர்பான உரிமையியல் வழக்குகளை எந்த உரிமையுமே இல்லை எனத் தெரிந்தும் தாக்கல் செய்து தடையாணை, உறுத்துக்கட்டளை ஆகியவற்றைப் பெற்று உண்மையான உரிமை மற்றும் உடைமையாளர்களை புலம்ப விடுவதில் பலர் கில்லாடிகளாகவே இருக்கிறார்கள்.

இப்படி தேவையே இல்லாமல் வழக்கு போடும் நபர்களை நம் வழிக்கு கொண்டு வர உள்ள நல்ல சட்ட விதிதான் **"எதிர்கோரிக்கை"**

உ.வி.மு.வி கட்டளை கட்டளை 8-இன் விதி 6-இன் கூடுதல் உள்விதி 1-இன்படி, வாதியிடம் இருந்து தனக்கு தேவையான நிவாரணத்தைக் எதிர்மனுதார் கோரும்

விதமாக எதிர் கோரிக்கை மனுவை சமர்ப்பிக்கலாம்.

இப்படி மனு சமர்ப்பிக்கப்பட்டதும், வாதி தொடர்ந்த வழக்கு எந்த நிலைக்கு சென்றாலும் கூட, எதிர் கோரிக்கை மனு தனி வழக்காக நடைபெறும்.

**சம்பவ இடத்தை நீதிபதிகள் பார்வையிடல்**

ஒரு வழக்கில் நூறு சதவிகித நியாயத்தை வழங்க வேண்டும் என்றால் சம்பவம் நடந்த சூழ்நிலை மற்றும் இடத்தை மிகவும் துள்ளியமாக அனுமானிக்க வேண்டும்.

சூழ்நிலையைக் கூட எடுத்துச் சொல்லிப் புரிய வைக்கலாம். ஆனால், **"சம்பவ இடத்தை அப்படிச் செய்ய முடியாது"**.

குற்றவியலைப் பொருத்தவரை சம்பவம் நடந்த இடத்தை வரைபடமாக வரைவார்கள். இதனை **"மகஜர்"** என்பார்கள். இப்படிக் காவல்துறையால் வரையப்படும் படங்கள் பெரும்பாலும் தப்பும் தவறுமாகத்தான் இருக்கும். இதனாலேயே கூட வழக்குகளிலிருந்து விடுதலை ஆகி விடமுடியும்.

உரிமையியலைப் பொருத்தவரை எந்த விதமான வரைபடமும் வரையப்படுவதில்லை என்பதால் தரப்பினர்கள் பாடுதான் படுகொண்டாட்டமும், திண்டாட்டமும்.

பெரும்பாலான உரிமையியல் பிரச்சினைகள் நிலம் தொடர்பானவைகள் என்பதால் தரப்பினர்களுக்கு மட்டுமல்லாது அனைவருக்குமே தீராத தலைவலியாகத் தான் இருக்கின்றன.

இத்தலைவலியை ஆரம்பத்திலேயே தடுக்க வேண்டும் என்றால் உரிமையியல் வழக்கைக் கோப்புக்கு எடுத்து முதல் விசாரணைக்கு முன்பே எதிர்மனுதாரருக்கு



அழைப்பாணை அனுப்பி வழக்குத் தொடர்புடைய இடத்தை தக்க ஆவணங்களோடு தரப்பினர்கள் மற்றும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் முன்னிலையில் நேரடி ஆய்வு செய்தாலே 90% வழக்குகளைத் தடுத்து விடலாம்.

தரப்பினர்களும் நிம்மதியாக, வீடு கட்டலாம், பயிர் செய்யலாம், நடமாடலாம்.

கு.வி.மு.வி விதி 310-இன்படி, சம்பவ இடத்தை பார்வையிட அக்குற்றவழக்கை விசாரணை செய்யும் நீதிபதியை அவ்வழக்கு தரப்பினர்கள் அழைக்க முடியும் என்றாலும், இதுவரை வக்கீல்கள் அழைத்ததாக தெரியவில்லை. நமது தரப்பில் ஒரு சில முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன என்றாலும் நீதிபதிகளுக்கு நமது அணுகு முறைகள் புதிது என்பதால் மசியவில்லை.

ஆனால், நாட்டை உலுக்கும் பரபரப்பான சம்பவங்களில் ஓய்வு பெற்ற நீதிபதிகளை நியமித்து ஆய்வு செய்யக் கோரி அறிக்கை பெற்றுக் கொள்கிறார்கள் என்பதன் மூலம் சட்டத்தில் சரக்கு இல்லையென்றாலும் கூடக் கௌரவம் பார்ப்பதில் எங்களை மிஞ்ச யாரும் கிடையாது என்பதை இதுவரை பறைசாற்றி வந்திருக்கிறார்கள்.

எனவே, நீங்கள் சம்பவ இடத்துக்கு அழைக்கும் முயற்சியில் வெற்றி பெற்று விட்டால், இவ்விதியின் சாதனையாளர் நிச்சயமாக நீங்கள்தாம்.

உரிமையியலைப் பொருத்தவரை சம்பவ இடத்துக்கு நேரடியாக அழைக்க விதிகள் இல்லை. தேவைப்பட்டால் உ.வி.மு.வி கட்டளை 26-இன் கீழ் ஆணையத்தை அமைத்து நேரடியாக ஆய்வு செய்ய நீதிமன்றத்தில் உத்தரவு பிறப்பிக்கிறார்கள்.

இப்படிப் பிறப்பிக்கும் உத்தரவை யார்யாருக்குப் பிறப்பிக்கலாம் என்பது பற்றி மாநில அரசு விதிகள்

இயற்ற அதிகாரம் அளிக்கப் பட்டிருந்தும் கூட தமிழ்நாடு உரிமையியல் விதிகளில் இதுபற்றி எதுவும் சொல்லப்பட வில்லை.

ஆனால், நீதிபதிகளே வக்கீல்களை மட்டுமே நம்பி **"கடைமை"**யை ஆற்றுவதால் வக்கீல்களையே ஆணையர்களாக நியமிக்கிறார்கள். இதில் எத்தரப்பினர் ஆணையம் அமைக்க வேண்டும் எனக் கோருகிறார்களோ அவர்களே அதற்கான செலவை ஏற்க வேண்டும் என்பதால் ஆணைய வக்கீல்களின் முடிவும், **"வாங்கிய கூலிக்கு நன்றிக்கடன்"** செலுத்துவது போல அத்தரப்புக்கு ஆதரவாகவும் அல்லது எதிர்தரப்பு மிக்க பணபலம் உள்ளவர்களாக இருந்தால் அவர்களுக்கு ஆதரவாகவும் இருக்கிறது.

எனவே, நீங்களே வாதாடும் சூழ்நிலை ஏற்பட்டால், வக்கீல் வைத்து வழக்கு நடத்தினால் சரியாக இருக்காது என்பதால்தான் நானே வழக்கை நடத்துகிறேன் என்றும், இதன் காரணத்தால் எக்காரணம் கொண்டும் வக்கீலை ஆணையர்களாக நியமிக்காமல் அதிகார வரம்புள்ள அரசு அதிகாரிக்கு உத்தரவு பிறப்பிக்கக் கோர வேண்டும்.

ஏனெனில், "அவர்களிடம்தானே சம்பந்தப்பட்ட அந்த இடம் யாருக்குப் பாத்தியப்பட்டது என்பதற்கான உண்மையான சான்று ஆவணங்கள் இருக்கின்றன?! அடிப்படையில் அப்பிரச்சினையைத் தீர்த்து வைக்க நீதிமன்றத்துக்கு உதவி செய்ய வேண்டிய கடமை அவர்களுடையதுதானே?!"

மேலும், இப்படிக் கோரும் போது அரசு ஊழியர்களின் கழுத்துக்குக் கத்தி என்பதால் அவர்களும் தங்களின் பணியை காப்பாற்றிக் கொள்ள கடமையைச் சரியாக செய்து விடுவதால் அதிகபட்சம் எதிர்தரப்பு மேல் நடவடிக்கை எடுக்க வாய்ப்பில்லாமல் போய் விடும்.



**அரசு ஊழியர்கள் ஆணையர்களாக நியமிக்கப்படும் போது அவர்களுக்கு நீங்கள் கூலி எதுவும் கொடுக்க வேண்டியிருக்காது என்பன உட்பட பல நன்மைகள் இரு தரப்புக்குமே இருக்கின்றன.**

**முக்கிய குறிப்பு:** வழக்கு நடவடிக்கைக்கு முன்பாகவே சம்பந்தப்பட்ட கிராம நிர்வாக அதிகாரி முதல் அனைவருக்கும் பிரச்சினையை தீர்க்கக் கோரி மனு செய்திருப்பது நல்லது. இப்படி செய்திருந்தால் அதையும் ஆணையராக நியமிப்பதற்கு காரணமாகச் சொல்லலாம்.

## சத்தியப் பிரமாணம் செய்விக்கும் அதிகாரம்

சாதாரணமாகவே, யாராவது பொய் சொல்லும் போது **'சத்தியமாகச் சொல்'** என்பதை வழக்கத்தில் வைத்து உள்ளோம். அப்படிச் சொல்லச் சொன்னால் பயந்து போய் பொய்ச் சொல்லமாட்டார்கள் என்பது நமக்கிருக்கும் ஆழ்ந்த நம்பிக்கை. இதே நம்பிக்கையின் அடிப்படையில்தான் நீதிமன்றத்திலும் சத்தியம் செய்ய சொல்கிறார்கள்.

ஆனால், **"குடியரசுத்தலைவர், ஆளுநர் மற்றும் நீதிபதிகள் ஆகியோருக்கு மட்டுமே சத்திய பிரமாணம் செய்விக்கும் சட்ட அதிகாரம் இருக்கிறது"**. மற்றவர்களுக்கு எவ்விதமான அதிகாரமும் கிடையாது.

நீதிபதிகளைப் பொறுத்தவரை இந்த அதிகாரமும் தவறாகத்தான் பயன்படுத்தப்படுகிறது. **நீதிமன்றத்தில் ஒருவரை விசாரணை செய்வதற்கு முன்பாக அவரைச் சத்தியப் பிரமாணம் எடுக்க வைப்பது நீதிபதியின் கடமை.**

ஆனால், சோம்பேறி நீதிபதிகள் இதனைக் கூட நீதிமன்ற ஊழியர்களே பெரும்பாலும் செய்து

வைக்கும்படி சொல்லி விடுவதால், ஊழியர்களும் செய்து வைப்பதை வழக்கத்தில் கொண்டுள்ளார்கள்.

இதுபோன்றதொரு சூழ்நிலை உங்களுக்கு ஏற்பட்டால் ஆட்சேபணை செய்து நீதிபதியே செய்விக்க வேண்டும் என வலியுறுத்தலாம்.

## ஆட்சேபணையின் (அ)வசியம்

சட்ட விதிகளை அதற்கான அதிகாரம் பெற்றவர்கள் எவராவது தவறாக கையாளும் போது, அதை நாம் தடுக்க பல வழிவகைகள் இருந்தாலும் உடனே உள்ள ஒரே வழி ஆட்சேபணை மட்டும்தான்.

சட்ட விதிகளுக்கு அப்பாற்பட்டு ஒரு செய்கை செய்யப்படுகிறது. அது தொடர்பான ஆவணம் ஒன்றும் உருவாக்கப்பட்டு உங்களுக்கு வழங்கப்படுகிறது.

அதனை நீங்கள் சான்றொப்பமிட்டு பெற்றுக் கொண்டே ஆக வேண்டும் என்ற சட்டக் கடப்பாடும் உங்களுக்கு இருக்கும் அதே சமயம் அதன் செல்லும் தன்மையை அல்லது நோக்கத்தை முறியடிக்க வேண்டும் என்ற இக்கட்டான சூழ்நிலை இருக்கும் போது, **“ஆட்சேபணையுடன் பெற்றுக் கொள்கிறேன்”** என எழுதிக் கையொப்பமிட வேண்டும்.

இப்படியொரு ஆவணத்தில் கையொப்பமிட்டு விட்டால் அது சட்ட சிக்கலுக்கு உரிய ஓர் ஆவணமாகி விடும். சூழ்நிலைக்குத் தக்கவாறு ஆட்சேபணை எழுதியதற்கான அடிப்படைக் காரணம் என்ன என்பதை தெரிவித்து ஆவணத்தை செல்லாததாக ஆக்கி விடலாம்.



## குடியரசில் குளறுபடிகள்

உலகின் மிகப்பெரிய ஜனநாயக நாடான நம் நாட்டில் அடிப்படையில் சட்ட அதிகார வர்க்கங்களால் பல குளறுபடிகள் செய்யப்படுகின்றன.

குடியரசு என்ற பெயரில் ஒருபுறம் மிருகங்களை துன்பத்தில் இருந்து காப்பதற்கான சட்டங்கள் இயற்றப்படுகின்றன. மற்றொருபுறமோ மனிதர்கள் முறையற்ற வகையில் கொலை செய்ய அனுமதிக்க படுகின்றனர்.

இதில் மிக முக்கியமானது காவல்துறையில் நடக்கும் மோதல் சாவுகள். இச்சாவுகள் பெரும்பாலும் காவல்துறையால் நன்கு திட்டமிடப்பட்டு, நல்ல நேரம் காலம் குறிக்கப்பட்டுதான் செய்யப்படுகின்றன என்பதால் இதில் பல்வேறு உள்நோக்கங்கள் உள்ளன. இதனை நீதிமன்றங்களும் கண்டித்து உள்ளனவே தவிர, கடமையாக என்னச் செய்ய வேண்டுமோ அதைச் செய்யவில்லை. விளைவு?

மோதல் சாவுகள் என்ற பெயரில், தங்களுக்கு எதிராக நியாயமான கருத்தை தெரிவிக்கும் அல்லது தெரிவிப்பார் என நம்புவதற்கும் உரிய நபர்களை காக்காய் மற்றும் குருவிகளைப் போல சுட்டுப் பொசுக்குவது என்பது அனுதினமும் நடக்கும் சர்வ சாதாரண விசயமாகி விட்டது.

நம் நாட்டை அடிமைப்படுத்தி அதைத் தட்டிக் கேட்க நினைப்பவர்களை சட்டத்தை கொண்டு அடக்கி ஆண்ட ஆங்கிலேய அடிமை ஆட்சியில் கூட, இப்படி சுட்டுப் பொசுக்கியதில்லை. காரணம் சட்ட விதிகளில் இடமில்லை.

ஆம்! **"1872-ஆம் ஆண்டின் பத்தாவது சட்டமாகிய குற்ற விசாரணை முறை விதிகளில் காவல்துறை கைது செய்யும் போது மேற்கொள்ள வேண்டிய அறிவுருத்தலை விடுக்கும் பாகம் 4 அத்தியாயம் 13 விதிகள் 159 முதல் 185 வரையிலானவற்றில் கூட, குற்றம் சாற்றப்பட்டவரை எவ்விதத்திலும் காவல்துறைக்கு கொல்லும் உரிமையை வழங்கவில்லை"** என்பது எனது ஆக்கப்பூர்வமான ஆராய்ச்சியில் கிடைத்துள்ள தகவல்.

இதனைத் தழுவி 1909-இல் திருத்தி அமைக்கப்பட்ட குற்ற விசாரணை முறை விதிகளில் கூட, கொல்லும் உரிமை வழங்கப்படவில்லை.

ஆனால், நாடு குடியரான பிறகு 1973-இல் திருத்தி அமைக்கப்பட்டு இந்திய அரசால் 1976-இல் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள குற்ற விசாரணை முறை விதிகளின் விதி 46-இன்,

**உள்விதி 1-ஆனது,** கைது செய்யப்பட வேண்டியவர் கைதுக்கு ஒப்புக் கொண்டால், அவரை தொடவோ அல்லது கட்டுக் காவலில் வைக்க கூடாது என்றும்,

**உள்விதி 2-ஆனது,** கைதுக்கு ஒப்புக்கொள்ளாத போது தேவையான தடங்களை ஏற்படுத்தலாம் என்றும்,

**உள்விதி 3-ஆனது,** மரண தண்டனை அல்லது ஆயுள் தண்டனை விதிக்கத்தக்க குற்றம் சாற்றப்பட்ட ஒருவருக்கு மரணத்தை விளைவிக்க தக்க உரிமையை அளிக்கிறது என்றும், அறிவுருத்தப்பட்டுள்ளது.

இவ்வுள் விதி 3-இன்படி, **"மரண தண்டனை அல்லது ஆயுள் தண்டனை விதிக்கத்தக்க குற்றத்தை சுமத்தி அவர்களை கொலைச் செய்து விட்டால், அப்படி கொலையுண்டவர் குற்றம் புரிந்தவர் அல்ல"** என்பதை



எவ்விதத்திலும் நிருபிக்க வாய்ப்பில்லாமல் போய் விடுகிறது.

இப்படியொரு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது இந்திய சாசனக் கோட்பாடு 21-இன்படியான, அடிப்படை உரிமை உத்திரவாதமான, சட்டப்படியான விசாரணை முறையில்லாமல் ஒருவரின் உயிரையோ அல்லது உரிமையையோ பறிக்கக் கூடாது என்பதையே பறிக்கிறது.

இச்சட்ட விதி எவ்வளவு விரைவில் நீக்கப்பட வேண்டும். அப்படியில்லாவிடில் மக்களுக்கு சட்ட விழிப்புணர்வு ஏற்பட்டு கு.வி.மு.வி விதி 43-இன்படியான, அதிகாரத்தை கடமையாக குடிமக்கள் கையிலெடுத்தால் காவல்துறையே காணாமல் போய் விடும். எச்சரிக்கை!

**அட்டவணையைப் பற்றிய மிக முக்கிய குறிப்பு**

முகமதிய ஆண், பெண் ஆகிய இருவருக்குள் செய்து கொண்ட திருமணங்களை ரத்து செய்வது குறித்த சட்டம் 1939-இல் இயற்றப்பட்டுள்ளது. இதில் மொத்தம் ஆறு பிரிவுகள் மட்டுமே. அதிலும் ஆறாவது பிரிவு நீக்கப்பட்டு விட்டது.

விவாகரத்து பெற விரும்பும் முகமதிய ஆண் ஒருவர் அதற்கான காரணங்கள் எதையும் கூற வேண்டிய அவசியம் இல்லை. மத கோட்பாட்டின் அடிப்படையில் **'தலாக்'** என்ற சொல்லை கணவன் ஒரே சமயத்தில் மூன்று முறை சொல்லி விவாகரத்து பெற்று விடலாம் என்று சொல்வார்கள். ஒரு சமயத்தில் ஒரு முறை சொன்னாலே போதும். திருமண ரத்தாகி விடும். ஆனால், தான் அவசப்பட்டு தலாக் முடிவெடுத்ததாக கருதினால், மீண்டும் மனைவியுடன் சேர்ந்து வாழலாம்.

இப்படி மூன்று வாய்ப்புகள் தரப்பட்டதன் நோக்கமே, கணவன் மனைவி ஆகிய இருவரும் இறுதிவரை இடையிடையே ஆன கருத்து வேறுபாடுகளை மறந்து சுமுகமாக வாழ வேண்டும் என்பதன் அடிப்படையிலேயே.

இப்படி தனக்கு வழங்கப்பட்ட மூன்று வாய்ப்புகளை ஒரே நேரத்திலோ அல்லது கால இடைவெளிகளிலோ பயன்படுத்தி விட்டால் மீண்டும் சேர்ந்து வாழ முடியாது.

பெண்கள் விவகாரத்து பெறுவதற்கு உரிமை இல்லை என்ற நிலை மாறி 1939-இல் உரிமையை வழங்கும் சட்டம் கொண்டு வரப்பட்டாலும் கூட, அது என்ன காரணத்துக்காக விவாகரத்து கோர முடியும் என்ற ஒரு சங்கதியைத் தவிர, வேறு எதையும் சொல்லாததால் முழுமை பெறவில்லை என்பதை விட, அரைகுறையாக கூட இல்லை என்பதால் அது தொடர்பான பிரிவுகளை அட்டவணையில் என்னாலும் நிரப்ப இயலவில்லை.

ஆயிரத்தில் ஒருவராக விவாகரத்து பெற விரும்பும் பெண் கூட நீதிமன்றத்துக்கு செல்லாமல், மத குருமார்களிடமே முடித்துக் கொள்கின்றனர்.

முகமதிய சமுதாய பழக்க வழக்கங்கள், சொத்து விவரங்கள், திருமண உறவில் வரதட்சினைகள், விவாகரத்தில் பிழைப்பூதியம், மகன் மகளை காக்க வேண்டிய கடமை என்பன உட்பட அனைத்தையும் முஸ்லீம் சட்டம் என்ற பெயரில் மிகவும் பயனுள்ள நூலை பேராசிரியர் அபுல் கலாம் எழுத காசிம் மரைக்காயர் அஸ்மா பீவி அறக்கட்டளை, 4, மான்டீத் ரோடு, சென்னை - என்ற முகவரியில் இருந்து வெளியிடப்பட்டுள்ளது.

நுகர்வோர் பாதுகாப்பு சட்டம் 1986-இல் குறைதீர் மன்றங்களை நடத்துவது எப்படி? என்பதற்கான



விளக்கங்கள் தரப்பட்டுள்ளதால் மத்திய நுகர்வோர் பாதுகாப்பு விதிகளில் அவைகள் இடம் பெறவில்லை.

எனவே, மத்திய விதிகள் 1987 க்கு பதிலாக, தமிழ்நாடு மாநில விதிகள் 1988 - ஐ தொகுத்துள்ளேன்.

தமிழ்நாடு குடும்ப நீதிமன்ற விசாரணை முறை விதிகள் 1996 ஆனது குடும்ப நல நீதிமன்றத்தில் வழக்கை நடத்த உதவும்.

இந்த அட்டவணையைத் தொகுக்கும் போது ஒன்பது வருட ஆராய்ச்சியில் கிடைக்காத அனுபவங்கள் பல எனக்கு கிடைத்தது.

ஒரு சில சட்ட விதிகளில் ஒவ்வொரு சங்கதிக்கும் கால அளவு நிர்ணயிக்கப்பட்டிருக்க, சில சட்ட விதிகளில் அப்படி இல்லாதது பெரும் குறைபாடாகவேத் தெரிகிறது.

மத்திய சட்டத்தில் இருப்பது, மத்திய விதியில் இருப்பதில்லை. மத்திய விதியில் இருப்பது மாநில விதியில் இருப்பதில்லை என்ற முரண்பாடுகள் உள்ளன.

தாய்மொழியில் தீர்ப்புகள் எழுதப்பட வேண்டும் என்பதற்கான வரையறைகள் இல்லை. நுகர்வோர் பாதுகாப்பு சட்டத்தில் விசாரணைகள் திறந்த நீதிமன்றத்திலா? அல்லது அந்தரங்க விசாரணையா? என்பதையும் காணும்.

இவைகள் எல்லாம் சட்டப்படியான விசாரணை முறையில்லாமல் ஒருவரது, உயிரையும், உரிமையையும் பறிக்க கூடாது என்ற அடிப்படை உரிமையை நிலை நாட்ட வெளிப்படையாக போதுமானதாக இல்லை.

சட்டத்தை இயற்றுபவர்கள் எந்த அளவிற்கு அறிவு வறுமையில் இருக்கிறார்கள் என்பதோடு, எவரும் சட்ட ஆராய்ச்சியாளர்கள் இல்லை என்பதையும் உணர முடிகிறது.



## தந்தை சொல் மிக்க மந்திரமில்லை!

நாம் உண்மையை அனுசரித்து போனால், இயற்கையாகவே சட்டம் நமக்கு உதவுகிறது என்பதால் வக்கீல் தொழிலில் பொய்யை அனுசரித்ததே இல்லை. இதனால், நியாயமான வழக்குகள் மட்டுமே என்னிடம் வர, பொய் வழக்குகள் வராமல் போய் எனது வேலை மிக எளிமையாகி விட்டது. வக்கீல்கள் மத்தியில் என் மதிப்பும் அதிகமாகியது.

வழக்கு தரப்பினர்களிடம் நட்பு கொண்டு பிளவுபட்டிருக்கும் அவர்களை ஒன்றாக்கி **சமரசம் செய்து வைப்பதுதான் உண்மையான வக்கீலின் கடமை. இக்கடமையைத்தான் இருபது ஆண்டுகள் ஆற்றினேன்.** சமரசம் என்பது இருதரப்புக்கும் வெற்றியைத் தரும் அழகுணர்ச்சி என்பதால், வக்கீல்களுக்கு எல்லா விதத்திலும் நன்மைதானே தவிர, எவ்விதத்திலும் நட்டமில்லை.

வழக்கு செலவுக்கு மீறிய கட்டணத்தை வாங்கியதே கிடையாது. **நீதிமன்றம் தீர்ப்பு சொல்லும் வழக்கு செலவுத்தொகையே எனது கட்டணம்.** வழக்கை நடத்த முடியாமல் போனால், வாங்கிய கட்டணத்தை திருப்பி தந்து விடுவேன். வழக்கின் வெற்றி தோல்வியை வைத்து கட்டணத்தை நிர்ணயித்ததில்லை. ஆனாலும், எதிர்பார்த்ததை விட தொழிலும், வருமானமும் நன்றாகவே இருந்தது. எனது இவ்வருமான தொழிலைக் கூட, பெரிய மனம் படைத்தோர் சேவை என்றே கூறினர்.

கட்சிக்காரருக்கு கிடைக்க வேண்டிய **நியாயம் மற்றும் தண்டனையை பெற்றுத்தர தவறியதில்லை.** அவமானம் என்பது குற்றம் புரிவதில்தான் இருக்க வேண்டுமே தவிர, அக்குற்றத்துக்காக சிறை செல்வதில் அல்ல என்பதால் கட்சிக்காரருக்கு தண்டனையைப் பெற்றுத்தருவதும் நியாயமே. அதேபோல, **உரிமைகளுக்காக சிறை செல்லவும் தயாராய் இருக்க வேண்டும்.** எனது வாழ்நாளில் உரிமைகளுக்காக வருடக்கணக்கில் சிறையில் இருந்துள்ளேன்.

சட்டங்களைப் பற்றி எனக்கு அதிகம் தெரியாது. **சாட்சிய சட்டத்தில் ஓரளவு தெளிவுண்டு.** தெரியாத சட்ட விசயத்தில் கட்சிக்காரர்களிடம் தெரிந்தது போல் காட்டிக்கொண்டதோ, வழக்கை நடத்தி தருகிறேன் என முன்வந்ததோ இல்லை. ஆனாலும், கட்சிக்காரர்கள் நானே நடத்த வேண்டும் என விரும்பினால் மூத்த வக்கீலிடம் ஆலோசனைப் பெற உரிய கட்டணத்தைப் பெற்றும், உரிய ஆலோசனையைப் பெற்றும் நடத்திக் கொடுத்தேன்.

எனது திறமையை, சக்தியை பெரிய விசயங்களில் போராடுவதற்காக சேமித்து வைத்தேன். பொது நலனுக்காகவே வழக்கு நடத்தியுள்ளேனே தவிர, எனது சொந்த வழக்கை நடத்தியதில்லை. ஒரே சமயத்தில் நான் ஏற்று நடத்திய **எழுபது வழக்குகளில் ஒன்று மட்டுமே தோற்றது.**

**சத்தியமானது மலர் போல் மென்மையானதே ஆயினும், கல்போல் கடினமானது.** சரியாக சிந்திக்காத சொல் எதுவும் என் நாவில் இருந்தோ அல்லது பேனாவில் இருந்தோ வெளிவந்ததில்லை.

**ஆதாரம்:** மகாத்மா காந்தி அவர்களின் சுயசரிதையான சத்தியசோதனையில் இருந்து ஒருங்கிணைத்து தொகுத்தவர் வாரண்ட் பாலா.